# பெரிய திருமொழி

## ஒரு பார்வை

முனைவர். து. லலிதா
பேராசிரியர் & தலைவர் - தமிழ்த்துறை
அவினாசிலிங்கம் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 043

வீர ஔவு பதிப்பகம்
*2, அவினாசிலிங்கம் ஆசிரியர் குடியிருப்பு*
*கோயம்புத்தூர் - 641 043.*

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பெரிய திருமொழி - ஒரு பார்வை |
| ஆசிரியர் | : | முனைவர் து. லலிதா |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியிட்ட ஆண்டு | : | செப்டம்பர் 2002 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | வீர ஒவு பதிப்பகம்<br>2, அவினாசிலிங்கம் ஆசிரியர் குடியிருப்பு<br>கோயம்புத்தூர் - 641 043. |
| நூல் அளவு | : | 1 X 8 |
| தாள் நிறை | : | 18.1 கிலோ மேப்லித்தோ |
| அச்சு | : | 10 பாயிண்ட் |
| கட்டுமானம் | : | செக்ஷன் பைண்டிங் |
| பக்கங்கள் | : | 240 + XVI |
| விலை | : | ரூ 85/- |
| அச்சிட்டோர் | : | நந்தி அச்சகம்<br>56, பாரதி பூங்கா சாலை,<br>அவினாசிலிங்கம் பல்கலைக்கழகம் எதிரில்<br>கோவை - 43. |

*திருமலை - திருப்பதி தேவஸ்தானம் அளிக்கும் சமயநூல் வெளியீட்டு ஊக்குவிப்புத் திட்டத்தின் நிதியுதவியுடன் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.*

This book is published with the financial assistance of Tirumala - Tirupati Devasthanams, under their scheme 'aid to publish religious books.'



தேவியுடனாகத் திருவேங்கடமுடையான்



வீரலூவம்மாள் பெருமாள்சாமி
திருவடி மலர்களுக்கு
இந்நூல் சமர்ப்பணம்

*அவினாசிலிங்கம் பல்கலைக்கழக வேந்தர்*

*முனைவர் க. குழந்தைவேல்* M. A., M.A. (Ohio State) Ph. D.,

அவர்கள் வழங்கிய

# வாழ்த்துரை

பாரத புண்ணிய பூமி என நம் நாட்டை நாம் போற்றுகிறோம். இது புண்ணிய பூமி மட்டுமல்ல, மிகப் புராதனமான பூமியும் கூட. உலகில் பல நாடுகள் நாகரிக வளர்ச்சி பெறுவதற்கு முன்னமேயே இந் நாட்டில் ஒரு சிறந்த நாகரிகம் வளர்ந்து மக்கள் வாழ்க்கையை வளப்படுத்தியது. பல ஞானிகள், சமயப் பெரியவர்கள், தத்துவஞானிகள் தோன்றி உலகில் எப்படி வாழ வேண்டுமென நல்வழி காட்டினர். தங்கள் வாழ்க்கையாலும் தாங்கள் அருளிச் செய்த நூல்கள் மூலமாகவும் இவ்வழியைக் காட்டினர். இவர்களது வாழ்க்கை நெறிகளைப் பின்பற்றியும் இவர்களது அறிவுரைகளைக் கேட்டும் கோடிக் கணக்கான மக்கள் நல்வாழ்வு வாழ்ந்தனர். பிறவிப் பயன் பெற்று வீடு பேறு எய்தினர்.

இத்தகைய ஞானிகள், பக்தர்கள் எல்லா சமயத்திலும் உள்ளனர். இறைவனின் மகிமையையும் அவர் காட்டும் வழியையும் மக்களுக்கு எடுத்துச் சொல்லும் தூதுவர்களாக அவர்கள் வாழ்ந்து சென்றுள்ளனர். தேவாரம், திருவாசகம், திவ்ய பிரபந்தம், மற்றும் வேதங்கள், உபநிடதங்கள், பகவத்கீதை ஆகிய எல்லாம் இத்தகைய அருளாளர்களால் மக்கள் நலனுக்காக, நல்வழி காட்டுவதற்காக எடுத்துச் சொல்லப்பட்டவைதான்.

இத்தகையோர் வரிசையில் திருமங்கை ஆழ்வார் மிகச் சிறப்புப் பெற்றவர். வைணவ பக்தர்களுள் அவர் ஒரு முக்கிய இடத்தை வகிக்கிறார். வில் வாள் வித்தைகளில் தலை சிறந்த ஒருவராகி, ஒரு நாட்டிற்கும் அதிபராகி ஆண்டு வந்தவர். தனது செல்வத்தை மட்டுமல்லாமல் சோழ மன்னனுக்குக் கொடுக்கவேண்டிய செல்வத்தையும் பாகவத சேவைக்காகச்

செலவு செய்தார். அதனால் சோழமன்னனால் சிறையிடப்பட்டு இறைவன் அருளால் செல்வம் பெற்று சோழ மன்னன் கடனைத் தீர்த்தவர். பின்னால் பாகவத சேவைக்குப் பொருளில்லாமையால் திருடியும், கொள்ளையடித்தும் அதனால் பெற்ற பொருளைக் கொண்டு பாகவத சேவை செய்தவர். அவரது பக்தியின் சிறப்பை உலகுக்கு எடுத்துக் காட்ட இறைவனே வேறுருவில் வந்து அவரால் கொள்ளையடிக்கப்பட்டு பின்பு அவரை ஆட்கொண்டருளினார்.

இந்த பக்தரின் சரிதையை, அவரால் இயற்றப்பட்ட பெரிய திருமொழியின் சிறப்பை, இலக்கிய நயங்களை டாக்டர் து. லலிதா அவர்கள் மிக அருமையாக இந்நூலில் விளக்கி உள்ளார்கள். தனது முனைவர் பட்டத்துக்கு அவர் செய்த ஆராய்ச்சியின் முடிவை இந்நூலில் திறம்பட எடுத்துரைத்திருக்கிறார்கள். இத்தகைய நூல்கள் மக்களுக்கு வாழ்க்கையின் குறிக்கோள் என்ன, நாம் எவ்வாறு வாழ வேண்டும், ஆண்டவனை அடையும் வழிகள் என்ன, எப்படிப் பக்தி செலுத்த வேண்டும் என்பனவற்றை எடுத்துக் காட்டுகின்றன. டாக்டர். லலிதா அவர்களின் இந்த முயற்சியை மிகவும் பாராட்டுகின்றேன். இந்த நல்ல தொண்டுக்காக அவரை வாழ்த்துகிறேன்.

இந்நூலை எல்லோரும் படித்துப் பயனடைய வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

*கோயம்புத்தூர்* — **க. குழந்தைவேல்**

*6-09-2002*

முனைவர் சரோஜா பிரபாகரன்
பதிவாளர்
அவினாசிலிங்கம் பல்கலைக்கழகம்,
கோவை - 43.

# பாராட்டுரை

தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் து. லலிதா அவர்களை முப்பத்தைந்து ஆண்டுகளாக நான் நன்கறிவேன். கல்லூரியாக விளங்கிய அன்றும்பல்கலைக்கழகமாக மாறிய இன்றும் எங்களிருவரிடை கல்விப் பணியைப் பொருத்தவரை எத்தனையோ மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. என்றாலும் என்றும் மாறாமல் இருப்பது எம்மிருவரிடையே உள்ள நட்பு என்றே சொல்ல வேண்டும். நெஞ்சத்து அகனக நட்கும் நட்பாக அது இருந்து வந்துள்ளது. அத்தகைய நட்பாளர் ஒருவர்தம் முனைவர் பட்ட ஆய்வேடு இப்போது ‘பெரிய திருமொழி-ஒரு பார்வை ’ என்னும் தலைப்பில் நூலாக வெளிவருவது கண்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

நூலைப் பன்முறையும் படித்துப் பார்த்தேன். சொல்ல வந்த கருத்துக்களை மனத்தில் ஆழப் பதியும் வண்ணம் பல்வேறு ஆதாரங்களுடனும் மேற்கோள்களுடனும் கூறும் விதமும் எளிய, அதே நேரத்தில் தேர்ந்தெடுத்த சொற்களால் காட்சிகளை விளக்கியுரைக்கும் மேன்மையும் வரலாற்று உணர்வோடு அதை சொல்லிச் செல்லும் முறையும் திட்ப நுட்பத்துடன் தேவையானவற்றைக் கோவைப்படுத்திக் கூறும் அழகும் இந்நூலில் ஒருங்கு விளங்கக் காண்கிறேன். பல்லாண்டுகால ஆசிரியப் பணியே நுண்மாண் நுழைபுலத்தோடு இவ்வாறு சொற்களைக் கையாளக் கற்றுத் தந்துள்ளது என்று எண்ணுகிறேன்.

ஆழ்வார் பாடிய பக்திப் பனுவலாகிய பெரிய திருமொழி இயற்கை, அகப்பொருள், தத்துவம், இறைநிலை பற்றிய பல்வேறு கருத்துக்களை உள்ளடக்கிய அரிய நூலாகத் திகழ்வதைத் தக்க சான்றுகளுடன் ஆசிரியர்

காட்டியுள்ளார். இவையெல்லாம் அக்கால மக்களின் கொள்கை கோட்பாடுகள், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை அறிவதற்குப் பெரிதும் துணைசெய்கின்றன. பொங்கத்தம் பொங்கோ, குழமணிதூரம், கொல்லிப் பாவை, பல்லியொடு கிளத்தல் பற்றி அமைகின்ற காட்சிகள் கூட ஆழ்வாரால் எவ்வாறு நயம் பட எடுத்து -ரைக்கப்படுகிறது என்பது ஆசிரியரால் அழகுறக் கூறப்பட்டுள்ளது. பறந்தும் விரைந்தும் செல்லவியலா பல்லிக்குட்டியிடம் தம் துயர்நிலை கூறித் தூதாக விடுக்கும் தலைவி பற்றிய பாடல் ஓடாத நெஞ்சைத் தூதாக விடுக்கும் தலைவன் தலைவியர் உள்ளப் பாங்கு பற்றிய இலக்கியக் காட்சிகளை எண்ணுமாறு செய்து விடுகிறது. 'ஓம் நமோ நாராயணா' என்னும் மந்திரத்தை ஓதுகின்றவர்கள் பெறுகின்ற சிறப்பை ஆழ்வார் மொழியாகவே -

*குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்*
*படுதுய ராயின வெல்லாம்*
*நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்*
*அருளொடு பெருநில மளிக்கும்*

என்று எடுத்துக் காட்டுவது எண்ணும்தொறும் எண்ணும்தொறும் இனிக்கிறது. விபவநிலையில் விளங்கும் இறைவனின் கிருட்டிணாவதார அருளிச் செயல்கள் ஆழ்வாரை ஈர்த்தமையும் அதற்குரிய காரணமும் பொருந்தும் வகையில் எடுத்துக் கூறப்பட்டடுள்ளது. ஆழ்வார் பற்றியும் அவர் காலத்து மக்களின் ஒழுகலாறுகள் பற்றியும் அறிவிக்கும் அரிய நூலாக விளங்கும் இது ஆழ்வாரின் பக்திச் சிறப்பை உலகத்தோர்க்கு உணர்த்தி அவர்கள் இறையருள் பெறத் துணை நிற்கும் என்பது திண்ணம்.

நூலாசிரியரை நான் மனமாரப் பாராட்டுகிறேன். அவர் பணி மேலும் சிறப்பதாக.

*கோவை* **சரோஜா பிரபாகரன்**

*2-09-2002*

முனைவர் சு. வேங்கடராமன்
பேராசிரியர் - துறைத்தலைவர்
இக்கால இலக்கியத்துறை, தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 625021

# அணிந்துரை

முல்லை நிலத்தில், ஆயர்குல மக்களின் வழிபடு கடவுளாக இருந்த திருமால், பின்னர் பரம் பொருள் நிலைக்கு - ஒப்பற்ற தனிக் கடவுள் நிலைக்கு - வளர்ந்த வளர்ச்சி நிலையில், பன்னிரு ஆழ்வார்களின் பங்களிப்பு அளவிடற்கரியது. காட்டில் வாழ்கின்ற ஆயர் மக்களின் கடவுளான வாசுதேவ கிருஷ்ணன், நாராயணனாக, திருமகள் கேள்வனாக, சமய, தத்துவ விளக்கங்களுடன் கூடிய பரம்பொருளாக ஆழ்வார்களால் உருவாக்கப் பெற்றான். தமிழ் நிலத்திற்கேயுரிய தமிழ் வைணவமாக உருப்பெற்ற சமய , தத்துவக் கோட்பாடுகள் , பிற்காலத்தில் இராமாநுசரால் ஸ்ரீ வைணவமாக நெறிப் படுத்தப் பட்டது. அவ்வகையில், இராமாநுசர், வைணவ தத்துவ விளக்கங்களுக்கு ஆழ்வார்களின் பாசுரங்களை அடிப்படையாகக் கொண்டார். ஆழ்வார்கள் பன்னிருவரில், வேதம் தமிழ் செய்த மாறனாகிய நம்மாழ்வார் பாடிய நான்கு தமிழ் வேதங்களுக்கும் விளக்கமாக அமையக் கூடிய ஆறு அங்கங்களைத் திருமங்கையாழ்வார் ஆறு பிரபந்தங்களாகப் பாடி அருளினார். அவற்றுள் உயர்வற உயர்நலம் உடையவனால், எட்டெழுத்து மந்திரம் உபதேசிக்கப்பட்டவுடன் திருமங்கையாழ்வார் பாடியருளிய பெரிய திருமொழி குறித்து எழுதப்பட்ட ஆய்வாக இந்த நூல் அமைந்துள்ளது.

திருமங்கையாழ்வாரின் வரலாறும் காலமும் என்னும் முதல் இயலில் அவருடைய வரலாறு விளக்கப்படுகிறது. அவருடைய காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு என்று நிறுவப்படுகிறது. தனக்கு முன் விவாதிக்கப்பட்ட இலக்கிய, வரலாற்று அறிஞர்களுடைய கருத்துக்களை யெல்லாம், மிகச் சரியான ஆதாரங்களுடன் மறுத்து, தம்முடைய கருத்தை

நிலைநாட்டியுள்ள நூலாசிரியையின் ஆய்வுத் திறன் பாராட்டிற்குரியது. பெரிய திருமொழி அமைப்பு என்னும் அடுத்த இயலில் யாப்பு, சொற்றொடர் அமைப்பு, இலக்கிய வகை, அணிநலன் ஆகியவற்றைக் குறித்து விரிவாக ஆராய்ந்துள்ளார். 1084 பாசுரங்களைக் கொண்ட பெரிய திருமொழி, திருமாலை முழுமுதற் பரம் பொருளாகக் கொண்டு பாடப்பட்டது என்னும் நூலாசிரியரின் கருத்து சிறப்பான ஒன்றாகும். எட்டெழுத்து மந்திர ஏற்றம் கூறுவதாலே இது பெரிய திருமொழி என்று பெயர் பெற்றது.

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் காட்டும் இயற்கை வருணனையை அடுத்த இயல் கூறுகிறது. திவ்ய தேசங்களைப் பாடும் போது, இயற்கைப் பின்னணியைத் திருமாலின் சிறப்பை விளக்கவும், தத்துவக் கருத்துக்களைக் குறிப்பாக விளக்கவும், அழகுணர்ச்சியை எடுத்துரைக்கவும் வருணனை பயன்படுகிறது என்று நூலாசிரியர் கூறுவது பாராட்டிற்குரியது. தமிழ் அகப்பொருள் மரபை ஆழ்வார், பரகாலநாயகியாக எவ்வாறு தம் பாசுரங்களில் ஆண்டுள்ளார் என்பதை அடுத்த இயல் விளக்குகிறது. பண்டைத் தமிழ் அக இலக்கண, இலக்கிய மரபுகளைக் கொண்டு ஆழ்வாரின் அகப் பொருள் பாசுர மரபை நூலாசிரியர் அருமையாக விளக்கியுள்ளார். பக்தி உணர்வை அடிப்படையாகக் கொண்டு, இறைவனாகிய நாயகன், முகங்காட்டாத போது, பரகாலநாயகி பிரிவுத் துயர் தாளாது, சிறுவண்டை திருவாலியிலுள்ள இறைவனிடம் தூது அனுப்பி, 'ஏவரிவெஞ் சிலையானுக் கென்னிலைமை உரையாயே' என்று புலம்புகிறாள். இப்பாடலிலுள்ள, இறைவனைப் பிரிந்துள்ள தலைவியின் துயரம், பக்தி உணர்ச்சி மிகுந்த கலை நயத்துடன் பாடப் பட்டுள்ளது. ஆழ்வார்களின் பாசுரங்களையே தமக்கு சோறாகவும் நீராகவும் அடைக்காயமுதாகவும் கொண்டு வாழ்ந்து காட்டிய வைணவ சமய குரவர்களுள் ஒருவரான நஞ்சீயர், நோயுற்றிருந்தபோது, இப்பாசுரத்தையே மீண்டும் மீண்டும் கேட்டு உருகுவாராம். பிறவி நோய்க்கு மருந்தான இறைவனின் திருப்பெயர், அவருக்கு உடற்பிணிக்கும் மருந்தாயிற்று. பெரிய திருமொழியிலுள்ள உலகியல் செய்திகளும், மெய்ப்பொருள் விளக்கமும் அடுத்த இயலில் கூறப்படுகின்றன. இறைவனுடைய அருளுக்கு இலக்காகிய உயிர், பிரபத்தி நெறிமூலம், குருவின் துணையுடன், வாழ்ந்து பரமபதம் அடையும் உயர் நெறியை மெய்ப் பொருள் விளக்கமாக இந்த இயல் நன்கு விளக்குகிறது.

நாராயணனின் ஐந்து நிலைகளைப் பற்றி அடுத்த இயல் விளக்குகிறது. அந்த ஐவகை நிலைகளிலும் அர்ச்சை அவதாரமே மிகுந்த சிறப்புடையது என்பதாலே, திருமங்கையாழ்வார் 86 திவ்ய தேசங்களைப் பாடியுள்ளார். எம்பெருமானுடைய நின்ற, இருந்த, கிடந்த கோலங்களில் அவர் மிகவும் ஆழங்காற்பட்டு அனுபவித்துள்ளார். 'பீதக ஆடைப் பிரானார் பிரம குருவாய் வந்து'- இறைவியோடு கூடி வந்து-எட்டெழுத்து மந்திரத்தைத் தமக்கு உபதேசித்தருளிய, எளிவந்த தன்மையை நினைந்து நினைந்து உருகும் அனுபவமே பெரிய திருமொழி.

பொதுவாக, சமய இலக்கியங்களைப் படிப்பதும், ஆராய்வதும் அருகிய வழக்காக உள்ளது. அதிலும் குறிப்பாக ஆழ்வார் பாடல்களையும் அவற்றுக்கான உரைகளையும் படிக்கும் வழக்கம் அறவே குறைந்துபோன நிலை தமிழ் அறிஞர்களிடையே காணப்படுகிறது. ஏறத்தாழ ஒரு தலை முறைக்கும் மேலாக, வடமொழியும் தமிழும் கலந்த வைணவ மணிபவள உரைகளைப் படித்தும் சுவைத்தும் பிறருக்கு எடுத்துச் சொல்லியும் மகிழும் கல்வி அனுபவம் அருகிவிட்டது. இத்தகைய சூழலில் கோவை அவிநாசிலிங்கம் நிகர்நிலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியை டாக்டர் து. லலிதா, பெரிய திருமொழியைத் தம்முடைய முனைவர் பட்ட ஆய்வுப் பொருளாக மேற்கொண்ட துணிச்சல் பாராட்டுதற்குரியது. ஆய்வேட்டை நூலாகக் கொண்டுவரும் பேராசிரியை, இது போன்ற இன்னும் சிறந்த நூல்களைத் தொடர்ந்து உருவாக்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

*மதுரை* **சு. வேங்கடராமன்**

*07-09-02*

# என்னுரை

தொன்மைச் சிறப்பு, வரலாற்று மேன்மை, பண்பாட்டுப் பெருமை ஆகியவை புலப்படும் வண்ணம் அரிய செய்திகளையும் கருத்துக்களையும் தன்னகத்துக் கொண்டு விளங்குவது தமிழ் இலக்கியம். மக்கள் மனத்தில் பக்திச் சுவையைத் தோற்றுவித்து அதை நிலைபெறச் செய்யும் நோக்கில் எல்லாம்வல்ல இறைவன் பெருமைகளைப் பலபடப் பாரித்துரைத்த அருளாளர்கள் பலரை இனங்காட்டுகிறது அது. சமயச் சார்பு இல்லாத திணை இலக்கியங்களாகக் கருதத்தகும் சங்க இலக்கியத்துள்ளும் சமயம் பற்றிய கருத்துக்கள் இடம் பெறாமலில்லையெனில் பக்தி பெரு வெள்ளமெனப் பாய்ந்தோடிய காலமாம் ஆழ்வார், நாயன்மார் காலத்தைப்பற்றி சொல்ல வேண்டுவதில்லை. தலங்கள் தோறும் சென்று அங்குறையும் இறைவனைப் பல்வகைப் பாமலர்களால் அருச்சித்து, ஆராதனை செய்து நெஞ்சக்கனகல்லும் நெகிழ்ந்துருகக் கவி புனைந்தவர்கள் அக்காலத்துப் புலவர் பெருமக்கள்.

ஆழ்வார்கள் பன்னிருவருள் திருமங்கையாழ்வார் மங்காப் புகழ் பெற்று விளங்குபவர். தனக்கேயுரிய தனித்தன்மையாலும் அளவாலும் ‘பெரிய’ என்னும் அடைமொழி பெற்ற அவர் திருமொழி நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் குறிப்பிடத்தக்க பெருமைக்குரியதாய்த் திகழ்கிறது. வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த அவருடைய வாழ்க்கை ஏனையோருக்கு எடுத்துக்காட்டாகும் பெற்றியது. கவிச்செல்வமும் புவிச் செல்வமும் உடைய அவர் யாவையுமாய் யாங்கணுமாய் நிறைந்து நிற்கும் இறைவனின் பேரன்புக்குப்பாத்திரமாகும் அருட்செல்வமும் உடையவராய் விளங்கியவர். பொருளற்றவர் பொருளைப் பெற முடியும், அருளற்றவர் அவ்வருளை அவ்வாறு பெறமுடியாது என்னும் வேறுபாடுணர்ந்து அருட்செல்வமே நிலையான செல்வம் என்று தேர்ந்து தெளிந்து அடியாரிடை தமக்கெனத் தனித்தகுதியை ஏற்படுத்திக் கொண்டவர். மேலும் செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்னும் கருத்தையே கடைப்பிடித்தவராய்

இம்மையுலகத்து இசையுடன் விளங்கி மறுமையுலகமும் மறுவின்று எய்திய பெருந்தகை அவர்.

பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் நூல்களை திருமங்கையாழ்வார் இயற்றியுள்ளாரெனினும் அவற்றுள் தலை சிறந்ததாக விளங்குவது பெரியதிருமொழியேயாகும். இயற்கை வருணனை செய்வதிலும் அகப்பொருளமைதி கெழும பாடல் யாப்பதிலும் உலகியல், மெய்ப்பொருள் உண்மைகளை விதந்து கூறுவதிலும் வல்லவராய் விளங்கும் ஆழ்வார் இறைவனின் ஐவகை நிலைகளுள் ஒரு கூறாகிய கிருட்டிணாவதாரத்தில் உளம் ஒன்றியவராய் அது தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவாற்றைப் புலப்படுத்துமாறும் நூலாக்கியுள்ளார். இறையியல்பையும் சமயக் கருத்துக்களையும் எடுத்துரைக்கும் வகையில் அமைகின்ற அவருடைய கருத்துக்கள் ஏனைய இலக்கண, இலக்கிய, சமயச் சான்றோரின் கருத்துக்களோடு இயைந்து நிற்பதை நூலில் பரக்கக் காணலாம். கண்ணன் என்னும் கருங்கடவுளை அருங்கடவுளாக எற்ற அவருடைய திருமொழி பற்றிய என்னுடைய முனைவர் பட்ட ஆய்வேடு 'பெரிய திருமொழி-ஒரு பார்வை' என்னும் பெயரில் இப்போது நூலாக வெளிவருகிறது. நூலாக்குகிற நோக்கில் அதன் அடிப்படைத் தன்மை கெடாமல் மாற்றங்கள் சில செய்யப்பட்டுள்ளன.

ஆய்வுப்பணி மேற்கொண்டு அதற்குரிய முதன்மை, துணைமை ஆதாரங்களைத் திரட்டும் முயற்சியில் நான் சென்னை, காஞ்சிபுரம் ஆகிய இடங்களுக்குச் சென்று சான்கோ டிரான்ஸ் போர்ட் திருவேங்கடத்தான் திருமன்றம் மற்றும் லிப்கோ வெளியீடுகளான நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தையும் அண்ணங்கராச்சாரியார் உரையுடன் கூடிய பெரிய திருமொழியையும் தொடர்புடையாரிடமிருந்து பெற்று வந்தேன். பெற்று வந்தேன் என்பதை விட பெற்று உவந்தேன் என்று கூறுவதே பொருத்தமாகும். காரணம் என் ஆய்வுப் பணிக்கு ஒவ்வொரு நூலும் ஒவ்வொரு விதத்தில் உதவியது. எனினும் காஞ்சியில் காத்திருந்து அரிதின் முயன்று பெற்ற அண்ணங்கராச்சாரியாரின் உரை ஆய்வுக்கட்டுரைக்குப் பேருதவியாக அமைந்தது. அது பாடல்களில் காணலாகும் உள்ளுறைப் பொருளை விளங்கிக் கொள்ளத் துணை புரிந்தது. நூலுள் இடம்பெறும் இயற்கை, அகப்பொருள் பற்றிய இயல்கள் இதைத் தெளிவாக்கும்.

வைணவ சமயக் கோட்பாடுகள், நெறிமுறைகள், மரபு பற்றி அறிவதற்கு வைணவசமயமும் மெய்ப்பொருளியலும், முத்தி நெறி, தசாவதாரத் தத்துவம், நாராயணனைப் பாடிய நம் ஆழ்வார்கள் ஆகியன பயன்பட்டன. இந்நூல்களின் வெளியீட்டாளர்களையும் ஆசிரியர்களையும் இவ்விடத்து நினைவு கூர்வதைக் கடமையாகவே கருதுகிறேன்.

ஆய்வேட்டை நூலாக்குவதற்கு அனுமதியளித்த பாரதியார் பல்கலைக்கழகத்தார்க்கும் அதை வெளியிடுவதற்கு அனுமதி நல்கிய அவினாசிலிங்கம் பல்கலைக்கழகத்தார்க்கும் நூல் வெளிவருவதற்கு நிதியுதவி செய்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார்க்கும் முதற்கண் என் நன்றி உரியது. வாழ்த்துரை வழங்கி சிறப்புச் செய்த எம் பல்கலைக்கழக வேந்தர் பெருமதிப்புக்குரிய முனைவர். க. குழந்தைவேல் அவர்களுக்கும் பாராட்டுரை நல்கிய அன்புக்கும் கெழுதகை நட்புக்கும் மதிப்புக்குமுரிய முனைவர். சரோஜா பிரபாகரன் அவர்களுக்கும் முனைவர் பட்ட ஆய்வில் எனக்கு வழிகாட்டியாக விளங்கியவரும் ஆய்வேட்டை விரைந்து நூலாக்க வேண்டும் என்று எனக்கு அவ்வப்போது எடுத்துரைத்து ஆர்வத்தைத் தூண்டியவருமான மதிப்புக்குரிய பேராசிரியர் முனைவர். கா. அரங்கசாமி அவர்களுக்கும் ஆய்வு செய்த காலத்து வைணவம் பற்றிய இதழ்களையும் நூல்களையும் எனக்கு அளித்து என்னிடத்து நேயங்காட்டிய உடுமலைப் பேட்டை அமரர் திரு. V. இராம அய்யங்கார் மற்றும் அவர் குடும்பத்தார்க்கும் நூலாக்கும் முயற்சிக்குப் பெருந்துணையாயிருந்து அணிந்துரை நல்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர். சு. வேங்கடராமன் அவர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நூலை அழகுற அச்சிட்டுக் கொடுத்த நந்தி அச்சக உரிமையாளர் திரு. சிவ. ஆறுமுகம் அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

யாவற்றுக்கும் மேலாக ஒரு மரபு கருதி என் முயற்சிகள் அனைத்துக்கும் உறுதுணையாயிருந்து பல்லாற்றானும் ஊக்குவித்து வரும் என்னுடைய கணவர் பேராசிரியர் முனைவர். ச. சண்முகம் அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன்.

*கோவை* **து. லலிதா**

*07-09-02*

நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு
ஏரா லமிளந் தளிர்மேல் துயிலெந்தாய்
சீரார் திருவேங் கடமா மலைமேய
ஆரா அமுதே! அடியேற் கருளாயே

சேய னணிய னென்சிந் தையுள்நின்ற
மாயன் மணிவா ளொளிவெண் தரளங்கள்
வேய்விண் டுதிர்வேங் கடமா மலைமேய
ஆய னடியல் லதுமற் றறியேனே

வந்தா யென்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்
நந்தா தகொழுஞ் சுடரே ! எங்கள் நம்பீ
சிந்தா மணியே ! திருவேங் கடம்மேய
எந்தாய் இனியா னுன்னையென் றும்விடேனே.

# பொருளடக்கம்

# திருமங்கையாழ்வாரின் வரலாறும் காலமும்

ஒரு நூலை ஆய்வு செய்யும்போது அந்நூலை இயற்றிய ஆசிரியரின் வரலாற்றை அறிந்து கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும். குறிப்பிட்ட ஓர் இலக்கியம் தோன்றிய காலத்தையும் அவ்விலக்கியத்தை ஆக்கிய ஆசிரியர் வரலாற்றையும் அறிவது எந்தச் சூழ்நிலையில் இலக்கியம் உருவாகியது என்பதையும் ஏனையோரிடம் காண முடியாத தனித்தன்மையுடன் அது திகழ்வதையும் முன்னும் பின்னுமாகக் காணும் அரிமா நோக்குடன் ஆழ்ந்து எவ்வாறு நூல் செய்யப் பட்டுள்ளது என்பதையும் அறியத் துணை புரிவதாகும். காலத்தை வென்று புலவர் விளங்குவதை அவர் வரலாற்றையும் நூல் பிறந்த வாற்றையும் தெரிந்து கொள்வதன் மூலம் தெள்ளிதின் அறியலாம். பெரிய திரு மொழியைப் பற்றிய இவ்வாய்வு அதன் ஆசிரியரான திருமங்கையாழ்வாரின் வரலாற்றையும் அவர் இறைவன்மாட்டுக்கொண்ட கழிபெருங் காதலையும் அதன் வழி பெற்ற இறையனுபவத்தையும் தொகுத்துரைக்கிறது. இக்கருத்தை விளக்கும் முறையிலேயே ஒரு நூல் இயற்றும்போது அதில் அந்நூல் ஆசிரியனது வரலாறு போன்று அந்நூல் பற்றிய செய்திகளைத் தாங்கி நிற்பதாய் பாயிரம் அமைதல் வேண்டும் என்று குறிப்பிடுவர் ஆன்றோர்.

செயற்கரிய செய்வர் பெரியர் என்பது பொதுமொழி. எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றானும் பிறர் நலம் கருதிய செயல்களைச் செய்பவர்கள் பெரியவராக மதிக்கப்படுவர். அவர்களுள்ளும் தாமும் இறைநெறியில் நின்று பிறரையும் அந்நெறியில் உய்க்கும் அருளாளர்கள் குறிப்பிடத்தக்க பெருமைக்குரிய வராவர். அத்தகைய பெரியார்களுள் ஒருவரே திருமங்கையாழ்வார். அவருடைய வரலாற்றைப் பலரும் பல விதங்களில் எடுத்துக்கூறியிருந்தாலும் அவற்றிற்குரிய சான்றுகள் ஓரளவே உள்ளன. அருளியல் முறையில் தாம் பெற்ற அனுபவங்களாக திருமங்கையாழ்வார் பாடிய பாடல்களே பெரியதிருமொழியில் அமைந்துள்ளன. இறைவன் தம்மை ஆட்கொண்ட விதத்தையும் அவ்விறைவனின் பெருமை களையும் அருளுணர்வையும் பாடுவதற்காக அவன் உறையும் திருத்தலங்களுக்குச் சென்று அவனுடைய அவதாரச் சிறப்புக்களையும் பெருமைகளையும் செயல் களையும் அத்தலங்களின் இயற்கைஅமைப்புக்களையும் இனிய தமிழில் சிறப்பாகப் பாடியுள்ளார்.

### திருமங்கையாழ்வார் - பெயர்க்காரணம் :

திருமங்கையாழ்வார் என்பது அவருடைய இயற்பெயரன்று. இறைவனுடைய திருக்கலியாண குணங்களில் ஆழ்ந்து ஈடுபட்டுத் தம்மையே மறந்த நிலையில் இறைவனோடு ஒன்றி விட்டவர்கள் 'ஆழ்வார்' என்று அழைக்கப் பட்டனர். "எம்பெருமானுடைய குணங்களில் ஆழங்காற்படும் அறிவாவது, வேதத்தாலும் அளவிட்டறிய இயலாத எம்பெருமானுடைய எல்லாக் குணங்களையும் அவனருளால் அறிந்து அனுபவிக்கும் ஞானமாகும்"[1] என்று கூறுவர். "ஆழ்வார் என்பதை ஆள்வார் என்ற சொல்லின் திரிபாகக் கொண்டு நம்மை ஆள்பவர்' என்று பொருளுரைப்பதும் உண்டு. இந்தப் பொருளில் ஆழ்வார்களும் "ஆண்டவன் மீது மெய்யன்பு செலுத்தி நம்மை ஆளும் தலைவர்கள் ஆகின்றனர்"[2] "தெயவீகத்தில் ஆழ்ந்தவர்களும் கடவுளின்பத்தில் மூழ்கித் திளைத்தவர்களும் 'ஆழ்வார்' எனப்பட்டனர்" [3] "எம்பெருமானுடைய அருளினால் ஆழ்ந்துணரும் அறிவைப் பெற்று வேதமாகிய கடலில் ஆழ்ந்து கிடந்த மிக உயர்ந்த மந்திரத்தினார்த்த விசேஷங்களை உலகிற்கு உதவிய காரணத்தால் இப்பெயர் பெற்றார்கள்" [4] என்றெல்லாம் கூறுவது உண்டு. "இறைவனின் கல்யாண குணங்களைக் கேட்டபோதே அவன் திவ்ய மங்கள தரிசனத்துக்குட்பட்டு ஆழ்வோர் ஆழ்வார்கள் என வழங்கப்படுவர். 'ஆழ்வார்' என்னும் சொல் 'பெண்' என்னும் பொருளைக் குறிக்கும். 'இன்ன ராஜாவுக்கும் இன்ன ஆழ்வார்க்கும் கல்யாணம் நடந்தது' என்னும் கல்வெட்டுக் குறிப்பு இதை உணர்த்தும்" [5] 'ஆழ்வார்' என்னும் சொல்லுக்கு "பத்தியில் ஆழ்ந்தவர்" [6] என்பனவும் இக்கூற்றுக்கு அரண சேர்ப்பனவே. ஆழ்ந்தறியும் அறிவைக் கருவியாகக் கொண்டு இறைவனின் குணங்களில் மனநிறைவுடன் மூழ்குபவர் ஆழ்வார் எனப்பட்டனர் என்பதை இதன் மூலம் அறியலாம். இறைவனின் மந்திரோபதேசத்தால் ஆட்கொள்ளப்பட்டு அவனைப் பற்றிய சிந்தனையிலே ஆழ்ந்துவிட்டபடியால் 'ஆழ்வார்' என்பதும் மங்கை நாட்டை ஆண்ட காரணத்தால் 'மங்கை' என்பதும் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட பெருமைக்குரியவராதலால் 'திரு' என்பதும் சேர்ந்து திருமங்கையாழ்வார் என்னும் பெயரை இவர் பெற்றுள்ளரா். "திருமங்கை மன்னர் அடியார்கட்குச்சோறு அளித்ததாகக் கூறப்படும் வரலாறு இந்த மங்கை என்ற ஊரில் நிகழ்ந்ததாகும். இவ்வூரில் உள்ளார்க்குத் தலைவர் ஆதலின் இவர் மங்கையர்கோன் எனப்பட்டனர்" [7] என்று கூறுவர். மங்கை என்னும் ஊர் சீகாழித் தாலூகாவில் திருநாங்கூரிலிருந்து திருவெண்காட்டுக்குப் போகும் பெருவழியில் உள்ளது. இது இன்று 'மங்கை மடம்' என்று அழைக்கப்படுகிறது.

## பிறப்பு :-

'சோழநாடு சோறுடைத்து' என்பது ஆன்றோர் வாக்கு. அத்தகைய பெருமை மிக்க நாட்டில் திருவாலி நாடு என்பதும் ஒன்று. அந்நாட்டிலுள்ள குறையலூர் என்னும் பதியில் கள்ளர் மரபில் தோன்றியவரும் செல்வத்தில் சிறந்தவருமான ஆலிநாடர் என்பார் வாழ்ந்து வந்தார். நீலன் என்னும் பெயர் கொண்ட அவர் சோழ மன்னனின் படைத்தலைவராக விளங்கினார். அவருடைய மனைவியார் வல்லித் திரு என்னும் பெயருடையார். இருவரும் செய்த அருந்தவப் பயனாக ஆழ்வார் பிறந்தார். பிறந்தபோது அவர் கருநீல நிறமாக இருந்த காரணத்தால் நீலன் என்று பெயரிட்டனர். 'கண்ணபிரானைப் போல கருநீல நிறமாக இருந்ததால் பெற்றோர் அவருக்கு நீலன் என்று பெயர் சூட்டினர்' என்பர். அவருடைய தந்தை பெயரும் நீலன் என்பதை நோக்குமிடத்து நீலன் என்பது அவர்கள் குலப்பெயராதல் வேண்டும் என்பதும் குலமரபுக்கேற்ப ஆழ்வாருக்கு நீலன் என்று பெயரிட்டு பெற்றோர் மகிழ்ந்திருத்தல் வேண்டும் என்பதும் கொள்ளக் கிடக்கிறது.

## இளமைப் பருவம்:-

நீலனுக்கு உரிய வயது வந்ததும் குலமரபுக்கேற்ப விற்பயிற்சி, வாட் பயிற்சி ஆகியவற்றை முறையாகப் பெறுவதற்கு அவர் தந்தையார் ஏற்பாடு செய்தார். அவற்றில் சிறப்புறப் பயிற்சி பெற்ற நீலனும் வில், வாள் வித்தைகளில் வல்லவராகத் திகழ்ந்தார். அவர் வீரத்தைக் கண்டு எதிரிகள் அஞ்சினர். பகைவரைப் புறமுதுகிட்டு ஓடச் செய்யும் ஆண்மை மிக்கவராகவும் வலிமை பெற்றவராகவும் மனவுறுதி வாய்ந்தவராகவும் திகழ்ந்த அவருடைய வலிமையை அறிந்த சோழ மன்னன் அவரை அழைத்துப் பாராட்டி சேனைத்தலைவர் பதவியைக் கொடுத்து 'பரகாலன்' என்ற பட்டத்தையும் அளித்து திருமங்கை என்னும் தலைநகரில் இருந்து கொண்டு ஆலிநாட்டுப் பகுதியை ஆண்டுவரும் பொறுப்பையும் கொடுத்தான்.

கூரணிந்த வேல்வலவன்
ஆலிநாடன்
கொடிமாட மங்கையர்கோன்
குறைய லாளி

என்றும்

வாட்டிறல் தானை மங்கையர் தலைவன்
மானவேல் கலியன்

என்றும் அவர் தாமே கூறும் கூற்றுக்களால் சேனைத் தலைவராக இருந்துகொண்டு ஆலிநாட்டுப் பகுதியை ஆண்டு வந்தமை பெறப்படுகின்றது. ஆலிநாட்டுப் பகுதியை ஆண்டு வந்தார் என்னும் கருத்தை "இவர் சோழநாட்டின் ஒரு பகுதியான ஆலிநாட்டை ஆண்ட குறுநில மன்னர்" [8] என்னும் வரலாற்று ஆய்வாளர் கூற்றும் அரண் செய்கிறது. ஆலி நாட்டின் பொறுப்பையேற்ற பரகாலர் செம்மையான முறையில் நாட்டை நிர்வகித்து, பாதுகாத்து மக்களின் நன்மதிப்பைப் பெற்றார்.

நெடுமா லவன்மே வியநீர் மலைமேல்
நிலவும்புகழ் மங்கையர்கோன், அமரில்
கடமாகளி யானைவல் லான்கலியன்
ஒலிசெய்தமிழ் மாலைவல் லார்க்கு

என்னும் பாடல் அடிகளாலும்

மாட மாளிகை சூழ்திரு மங்கை
மன்னன் ஒன்னலர் தங்களை வெல்லும்
ஆடல் மாவல வன்கலி கன்றி

என்னும் பாடல் அடிகளாலும் 'கடமாகளி' என்னும் யானையும் 'ஆடல்மா' என்னும் குதிரையும் அவரிடம் இருந்தன என்பதை அறிகிறோம்.

## பிற பெயர்கள் :-

திருமங்கையாழ்வார் தம் பாடல்களில் தம்மைப் பல்வேறு பெயர்களால் குறிக்கின்றார்.

மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர்
மங்கையர் வாள்கலி கன்றி

வரிகொள் வண்டறை பைம்பொழில் மங்கையர்
கலியன தொலிமாலை

திண்ணார் மாடங்கள் சூழ்
திருமங்கையர் கோன்கலியன்

தோடு விண்டலர் பூம்பொழில் மங்கையர்
தோன்றல் வாள்கலி யன்திரு வாலி
நாடன் .................................................

அங்கமலத் தடவயல்சூ ழாலிநாடன்
அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம்

என்பன போன்ற பாடல் அடிகளால் திருமங்கையாழ்வாருக்கு 'நீலன்' என்னும் பிள்ளைத் திருப்பெயரோடு பரகாலன் என்னும் பட்டப் பெயர் மட்டுமன்றி கலிகன்றி, கலியன், ஆலிநாடன், அருள்மாரி, அரட்டமுக்கி, அடையார் சீயம் ஆகிய பெயர்களும் இருந்தமை அறிகிறோம்.

## நாற்கவிப் பெருமாள் :-

அக்காலத்தில் நாற்கவிப் பெருமாள் என்னும் புலவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பல நாடுகளுக்கும் சென்று புலவர்களை வாதில் வென்று அவர்களிடமிருந்து கப்பப் பொருள் பெற்றுச் செருக்குடன் இருந்தார். ஆழ்வாரின் கல்விச் சிறப்பையும் அறிவுத் திறனையும் அறிந்து அவரையும் தம்மோடு வாதுக்கு அழைத்தார். அவ்வாதில் அவர் ஆழ்வாரிடம் தோல்வியுற்று விடவே 'நாற்கவிப் பெருமாள்' என்னும் பட்டத்தை அவருக்குக் கொடுத்துவிட்டு சோழ நாட்டினின்றும் அகன்றார். ஆழ்வார் அனைத்துப் பாடல்களையும் விரைவில் இயற்றவல்ல ஆசுகவி என்றும் படிப்பவர்க்கு இன்பமளிக்கும் வண்ணம் பாடவல்ல மதுரகவி என்றும் சித்திரங்களில் அமைத்துப் பாடவல்ல சித்திரக்கவி என்றும் விரிவாகப் பாடல் பாடும் வித்தார கவி என்றும் புகழ்ந்து போற்றற்குரிய தகுதி பெற்றிருந்தமையின் சோழ மன்னன் அவரைத் தன் அரசவைக்கு அழைத்து 'நாற்கவிப்பெருமாள்' என்னும் பட்டமும் அதற்குரிய விருதுகளும் ஆழ்வாருக்கே உரியதாகக் கூறி பாராட்டுக்கள் பலசெய்து சிறப்பித்தான். "நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு வேதங்களின் சாரமாகிய நான்கு பிரபந்தங்களுக்கும் ஆறு அங்கமாக ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்கிற நான்கு விதமான கவிகளால் அருளிச் செய்து சிறப்புற்றார். இதனால் பரகாலருக்கு 'நாலுகவிப் பெருமாள்' என்னும் பட்டப் பெயர் வழங்கலாயிற்று."[9] என்னும் கூற்று அவர் அப்பெயரால் சுட்டப்படும் பொருத்தத்தை உணர்த்தி நிற்பதாகும்.

## குமுதவல்லியின் தோற்றம் :-

திருநாங்கூரிலுள்ள மருத்துவர் ஒருவரின் மகளாக குமுதவல்லி என்னும் பெண் அந்நாளில் வாழ்ந்து வந்தாள். அவளைப் பற்றிக் கூறப்படும் பழஞ் செய்தி ஒன்றுள்ளது. முற்பிறப்பில் சுமங்கலை என்னும் பெயருடைய தேவருலகப்பெண் ஒருத்தி முனிவர் ஒருவரின் விகாரமான தோற்றத்தைக் கண்டு நகைத்த காரணத்தினால் கபில முனிரால் சபிக்கப்பெற்று மானிடப் பெண்ணாய்த் தோன்றினாள். திருமாலின் சார்ங்கம் என்னும் வில்லின் அமிசமாய்ப் பிறந்துள்ள பரகாலர் என்பவர் போர்க்கள வேள்வி செய்வதிலேயே மனமுடையவராய் சோழ நாட்டில் இருப்பதாகவும் அவருடைய மனைவியாகி அவரை நல்லடியாராகத்

திருத்தி குறைவு தீர்ந்து மீண்டும் அவள் தன் பொன்னாட்டை அடையலாம் என்றும் முனிவரால் அருளப் பெற்று திருநாங்கூர்ப் பதியிலுள்ள பொய்கையொன்றில் மலர்ந்திருந்த குமுதமலருக்கு இடையே குழந்தையாகத் தோன்றினாள். அக் குழந்தையை மகப்பேறில்லா மருத்துவர் ஒருவர் கண்டெடுத்து குமுத மலர்களிடையே கிடந்தமையால் 'குமுதவல்லி' என்னும் பெயரிட்டு வளர்த்து வரலானார்.

## *இல்லற வாழ்க்கை :-*

பேரழகு படைத்த குமுதவல்லி மங்கைப் பருவம் எய்திய நிலையில் அவரைக் கண்ட பரகாலர் திருமணம் செய்து கொள்ள விரும்பவே அவ்வம்மையாரும் சங்குசக்கர அடையாளமிடல், திருமண்காப்பு அணிதல், திரு வாராதனம் போன்ற அடையாளங்களைக் கொள்பவராக இருந்தால் திருமணம் செய்து கொள்வதாகக் கூறினார். ''அப்பெண்ணரசியின் கொள்கைக்கேற்ப திருமாலின் சங்கு சக்கரப் பொறிகளைத் தம் உடலில் தாங்கி திருமால் அடியவரானார். அன்றியும் அந்நங்கையின் விருப்பபடி நாள்தோறும் ஆயிரத் தெட்டு பாகவதர்களுக்கு ஓராண்டுக் காலம் அன்னமிட்டு அவர்கள் உண்டு மகிழ்ந்த பின் தான் உண்பதாகவும் உறுதிமொழி கூறி அவரைத் திருமணம் செய்து கொண்டார்.''[10] வாதப்போர்புரிவதிலும் செய்யுள் செய்வதிலும் இவற்றிற்கெல்லாம் மேலாக பகைவர்கள் புறமுதுகிட்டு ஓடும்படி விற்போரும் வாட்போரும் செய்வதிலும் வல்லவரான அவர் திருமணத்திற்குப்பின் இறையுணர்வு, உண்மை, அறம் இவற்றை உயிர் நிலையாகக் கருதத் தொடங்கினார். 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்னும் குறட் கருத்துக்கும்

> செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
> நல்விருந்து வானத் தவர்க்கு

என்னும் குறளுக்கும் ஏற்றவாறு வாழ்வாங்கு வாழ்ந்தார்.

## *வாழ்வில் சோதனை :-*

பாகவதர்களுக்கு உணவளிப்பதற்காக தம் செல்வமனைத்தையும் செலவு செய்தது மட்டுமல்லாமல் சோழ மன்னனுக்குச் செலுத்த வேண்டிய திறைப் பொருளையும் அதன்பொருட்டு செலவழித்தார். மன்னனுக்குத் திறைப்பொருள் செலுத்தாமலிருக்கவே அவன் தன் ஏவலர்களை அனுப்பி திறைப் பணத்தைப் பெற்று வரும்படி ஆணையிட்டான். பரகாலர் திறைப்பணம் செலுத்த இயலா நிலை கண்ட சோழன் மிகுந்த சினம் கொண்டு தன் படைகளை அனுப்பி அவரைக் கைது

செய்து வருமாறு கூறினான். பரகாலரோ ஆடன்மா என்னும் தன் குதிரையின் மேலேறி அப்படைகளை எதிர்த்துப் போராடி புறமுதுகிட்டு ஓடும்படிச் செய்தார். அப்போரில் அவருடைய அமைச்சர்கள் "நீர்மேல் நடப்பான், நிழல் ஒதுங்குவான், தாளூதுவான், தோலா வழக்கன், சாயை பிடிப்பான், உயரத்தொதுங்குவான்." [11] ஆகியோர் துணை செய்தனர். தன் படை தோல்வியுடன் திரும்பி வந்ததைக் கண்ணுற்ற சோழ மன்னன் தானே தலைமை வகித்துப் படையை நடத்திச் சென்று பரகால ரைத் தோற்கடித்து சிறைப்படுத்தினான். திறைப்பணம் முழுவதையும் செலுத்தாமல் அவரைக் காவலிலிருந்து விடக்கூடாது என்பதாகக்கூறிச் சென்றான். காவலிலிருந்த பரகாலர் நாள்தோறும் பாகவதர்களுக்கு உணவிட்டு உபசரிக்கும் செயலைச் செய்ய முடியவில்லையே என்று வருந்திக் கொண்டிருக்க அவரது கனவில் இறைவன் தோன்றி "காஞ்சிக்கு அழைத்து வந்து பொருளைப் பெற்றுக் கொள்ளச்சொல்" என்று கூறினார். பரகாலரும் அமைச்சரிடம் அவ்வாறே கூற அமைச்சரும் சோழ மன்னன் அனுமதியுடன் பரகாலரை அழைத்துக் கொண்டு காஞ்சிமாநகர் சென்றார். அங்கு வரதராசப்பெருமானை மனம், மொழி, செயல்களால் ஒன்றியிருந்து வணங்கி பெருமான் ஆணைப்படி வேகவதியாற்றில் பொருளைத் தோண்டியெடுத்து மன்னனுக்குச் செலுத்த வேண்டிய திறைப் பொருளைச் செலுத்தினார். அமைச்சர் வாயிலாக இத்தெய்வீக நிகழ்ச்சியை அறிந்த சோழ மன்னன் அவர் செலுத்திய திறைப்பொருளை அவரிடமே கொடுத்து, பரிசுகள் பல வழங்கி உபசரித்து அவரை வணங்கினான். மன்னனின் பரிசுப் பொருளைப் பெற்றுக் கொண்டவர் மீண்டும் நாள்தோறும் பாகவதர்களுக்கு உணவிட்டு உபசரிப்பதில் ஈடுபட்டு தம் செல்வமனைத்தையும் வைணவ ஆராதனையிலேயே செலவிட்டார். வைணவத் தொண்டில் முழுவதுமாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு ஆலி நாட்டின் ஆட்சிப் பொறுப்பினின்று நீங்கினார். தாம் செய்யும் செயல்களுக்கு இடையூறு ஏற்பட்டபோதெல்லாம் மனம் கலங்காது வெற்றியுடன் செய்து முடித்து சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தார். வள்ளண்மை மிக்கவராகத் திகழ்ந்தமை, கைம்மாறு கருதாது வழங்கும் மாரி போன்று விளங்கினமை ஆகியவற்றை அவர்தம் பாடல்களில் இடம்பெறும்

கற்றார் பரவும் மங்கையர்கோன்
காரார் புயற்கைக் கலிகன்றி

ஆராத வுள்ளத் தவர்கேட் டுவப்ப
அலைநீ ருலகுக் கருளே புரியும்
காரார் புயற்கைக் கலிகன்றி

என்னும் கூற்றுக்களால் அறிந்து கொள்ளலாம்.

## நாராயண நாமம் கண்டு கொண்டமை :-

இல்லையென்று வருவோர்க்கெல்லாம் வாரி வழங்கிக் கொண்டேயிருந்தமையால் அவரது செல்வம் முழுவதுமாகக் கரைந்து விட்டது. பாகவதர்களை உபசரிப்பதற்குப் பொருள் இல்லாமல் வருந்திய அவருக்கு நண்பர்கள் குலத்தொழிலாகிய களவுத் தொழிலைச் செய்யுமாறு கூற, அவர்கள் கருத்துக்கேற்ப திருமணங்கொல்லை என்னுமிடத்திலுள்ள ஒரு மரத்தடியில் மறைந்திருந்து அவ்வழியாகச் செல்வோரை வழி மறித்து அவர்களிடமுள்ள பொருட்களைக் கொள்ளையடித்து அதைக் கொண்டு நாள்தோறும் பாகவதர்களுக்கு உணவிடும் செயலை பக்திப் பெருக்குடன் செய்து கொண்டிருந்தார்.

பரகாலர் திருடித்தான் அடியார்க்கு உதவ வேண்டுமா? திருடுவது பாவமல்லவா? என்று கேள்வி எழல் இயல்பே. ஆனால் அவருடைய வாழ்க்கை வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால் அவ்வாறு கேட்பது கூட தவறு என்பதை நாம் நன்கு அறிந்து கொள்ள முடியும். அரசரும் திருடுவாராயின் வழிப்பறி செய்து பெற்ற அச்செல்வத்தை தான் துய்க்க வேண்டுமென்று கருதாத பிறிதொரு நியாயமான காரணத்திற்காகவே அச்செயலை அவர் செய்தார் என்பதும் எளிதில் விளங்கும்.

அவருடைய பக்தியை உலகுக்கு உணர்த்த விரும்பிய இறைவன் திருமகளோடு சேர்ந்து புதுமணமக்கள் தோற்றம் கொண்டு கூட்டத்தினருடன் நடந்து வர பரகாலர் அக்கூட்டத்தினரை வழக்கம் போல வழி மறித்து அவர்கள் அணிந்திருந்த ஆடைகளைத் தவிர ஏனைய அணிகலன்களை யெல்லாம் கழற்றிக் கொடுக்கும்படி கேட்டார். கணையாழியைக் கழற்ற முடியவில்லை யென்று மணமகன் கூற, பரகாலர் அதைத் தம் பற்களால் கடித்து இழுத்தார். மணமகனாக வந்த இறைவனும் 'நம் கலியனோ' என்று திருவாய் மலர்ந்த வண்ணம் தம் மற்றொருகையை பரகாலரின் தலையின் மேல் வைத்தார். மணமகனின் விரலைக் கடித்தும் கணையாழி வராமற் போகவே, கையை விட்டு விட்டு களவாடிய பொருள்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கட்டி அம்மூட்டையைத் தூக்க முயலும் போது அதைத் தூக்க இயலவில்லை. உடனே பரகாலர் மிக்க கோபத்துடன் மணமகனைப் பார்த்து அவர் போட்ட மந்திரம் யாது என்றும் தனக்கும் அதைக் கூற வேண்டுமென்றும் கூறமறுப்பின் வாளினால் கொன்றுவிடப் போவதாகவும் கூறவே மணமகனாக வந்த இறைவனும் பரகாலரை அருகில் வருமாறு அழைத்து அவர் காதில் மந்திரங்கள் எல்லாவற்றிலும் சிறந்ததும் அடியார் படும் துயரங்களை அழிப்பதும் பெற்ற தாயினும் ஆயின செய்வதுமாகிய 'ஓம் நமோ நாராயணாய' என்னும் திருவெட்டெழுத்து மந்திரத்தை உபதேசித்து அருளியதோடு

கருடவாகனத்தில் திருமகள் துணையுடன் தேவர்கள் சூழக் காட்சி தந்தருளினார். உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த திருமங்கையாழ்வாரை இறைவன் வலிய வந்து மந்திரம் உபதேசித்து ஆட்கொண்டார். தம்முடைய கைவிரலைக் கடித்துத் துன்புறுத்தியபோதும் அருள் நெஞ்சத்தோடு இறைவன் ஆழ்வாரை ஆட்கொண்டருளுகிறார். முதலில் அவருடைய விரலைக் கடித்த ஆழ்வாரே பிறகு தொண்டராகிறார். எனவே திருமங்கையாழ்வாரை வன்றொண்டர் எனலாம். சைவ சமயத்தில் சுந்தரர் வன்றொண்டர் ஆனாற்போல வைணவ சமயத்தில் திருமங்கையாழ்வார் வன்றொண்டர் ஆனார்.

## நாராயணனின் அருட் செயல் :-

விண்ணவரும் மண்ணவரும் தவத்திற் சிறந்தோரும் காணக் கிடைக்காத திருக்கோலக் காட்சியைக் கண்ட பரகாலர் நிலத்தில் விழுந்து வணங்கி, காலமெல்லாம் தவறுகளையே செய்து வந்த தாம் இறைவன் கைவிரலையே வாயால் கடித்ததும் வாளால் தடிந்நு கொல்லத் துணிந்ததுமாகிய கொடிய செயல்களுக்காக வாய் விட்டு அரற்றி வருந்தி தம்மைத் தாமே மாய்த்துக் கொள்ளத் துணிய, இறைவனும் அவரைத் தடுத்து ஆட்கொண்டு அவர் செய்த செயல்களெல்லாம் பிறர் நலம் கருதியே என்றும் அவருடைய பக்தியை உலகுக்கு உணர்த்தவே தாம் இவ்வாறெல்லாம் சோதித்து ஆட்கொண்டதாகவும் கூறி மறைந்தார். இறைவன் ஓதிய மந்திரத்தால் பரகாலர் வாழ்க்கையில் திருப்பமொன்று நிகழ்ந்தது. ஆறலைக் கள்வராயிருந்தவர் ஆண்டவன் அடியாராகி ஆழ்வாரானார். மருள் நெஞ்சினர் அருள் நெஞ்சினராக மாறினார். தீயநெறி துறந்து தூய நெறியை மேற்கொண்டார். கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் சொரிய, தம் ஞானக் குறைவையும் இறைவன் அருளையும் தாம் பெற்ற மந்திரத்தின் பெருமையையும் எண்ணியெண்ணி மனமுருகி திருவெட்டெழுத்து மந்திரத்தினிடத்தும் அதன் பொருளினிடத்தும் தமக்கு உண்டான பேரன்பினை,

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்,
பெருந்துய ரிடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி யிளையவர் தம்மோ
டவர்தரும் கலவியே கருதி
ஓடினே னோடி யுய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்

என்று தொடங்கிப் பாடினார். 'ஓம் நமோ நாராயணாய' என்னும் திருவெட்டெழுத்து மந்திரத்தின் வேரான நாராயண நாமத்தை இறைவனருளால் தாம் கண்டு கொண்டதாகக் கூறி ஆடிப்பாடி மகிழ்ந்தார். மந்திரத்தைக் கண்டார். அந்த ஒளியில் இறைவனையும் தம்மையும் கள்வராகக் கண்டு 'நீயும் கள்வன்; நானும் கள்வன்; இது உன் மந்திர மகிமை' என்று தெளிந்தார். அந்த ஞானத் தெளிவு அமுதப் பாடல்களாகி திருமங்கை மன்னனின்'பெரிய திருமொழியில் முதற் பத்தாக அமைந்திருக்கிறது. ஆழ்வார் 'வாடினேன்' என்று தொடங்கி பத்துப் பாடல்கள் பாடியவுடன் இறைவன் திருமகளுடன் தோன்றி அவருடைய பாடல்களைத் தாம் எழுந்தருளியுள்ள திருத்தலங்களிலெல்லாம் கேட்டு மகிழ்வதற்காகவும் உலகத்து மக்கள் அவற்றைக் கேட்டும் கற்றும் உய்வதற்காகவும் திருத்தலங்களுக்கெல்லாம் அவர் சென்று பாடல்கள் பாட வேண்டும் என்று கூறி மறைந்தார்.

## திருத்தலப் பயணம் :

இறைவனின் திருவருள் திறத்தை எண்ணி வியந்து மகிழ்ந்த ஆழ்வார், வெற்றியையே வேண்டி அழியக் கூடிய பொருள்களுக்காக வீணே இரந்து சிற்றின்பத்தில் ஈடுபட்டு சிறியனான தம்மை ஆட்கொள்ளுவதற்காக மணக் கோலம் பூண்டு வந்து தனக்கு அஞ்சினவன் போல நடித்து, தம் கைவிரலாழியைப் பற்களால் கடித்து இழுக்கும்போது அஞ்சி நடுங்கி 'நம் கலியனோ' என்று கூறியருளிய இறைவனுடைய அன்பும் அருளும் சொல்லில் அடங்கும் தரத்தனவோ என்று வியந்து,

வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி
வேற்கணார் கலவியே கருதி,
நின்றவா நில்லா நெஞ்சினை யுடையேன்
என் செய்கேன் நெடுவிசும் பணவும்,
பன்றியா யன்று பாரகங் கீண்ட
பாழியா னாழியா னருளே,
நன்றுநா னுய்ய நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்

என்று பாடியதோடு, 'தம்முடைய திருச்செவிகளால் என்னுடைய பாடல்களையும் கேட்க விழைந்தானே" என்று வியந்தார். இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வாருக்கு அவனுடைய அர்ச்சைத் திருமேனிகளில் எல்லையற்ற ஈடுபாடு உண்டாயிற்று. அந்தத் திருமேனிகளைக் கண்குளிரக் கண்டு அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை பெருகியது. இறைவன் அவரை

ஆட்கொண்டு திருமந்திர உபதேசம் செய்ததோடு தம் திருக்குணங்களையும் மந்திரப் பொருளுக்கு எல்லை நிலமான திருத்தலங்களையும் காட்டியருளியமையால் அதன்படி ஆழ்வார் பரிவாரங்களுடனும் இல்லக்கிழத்தியாகிய குமுதவல்லியாருடனும் அத்திருத்தலங்களுக்கு வரிசையாகச் செல்லத் தொடங்கினார். நூற்றெட்டென எண் பெற்று விளங்கும் வைணவத் திருத்தலங்களுள் எண்பதுக்கும் மேற்பட்ட தலங்களைப் பாடியவர் இவர் ஒருவரே. "தென் குமரியிலிருந்து வட இமயம் வரை திருப்பயணம் சென்று வந்தார். நூற்றெட்டுத் திருக்கோயில்களுள் எண்பத்தாறு திருக்கோயில்களை இவர் கண்டு ஆங்காங்கு உகந்தருளியுள்ள திருமேனியிடத்து ஈடுபட்டுப் பாசுரங்கள் பல பாடியுள்ளார்." [12] என்று இவருடைய தனிச்சிறப்பைப் புலப்படுத்துவர்.

*திருவரங்கத்தில் திருப்பணி செய்தல்:*

வட நாட்டுத் திருத்தலங்களுக்குச் சென்று பாடி இறைவனின் பெருமைகளையும் அருளிச் செயல்களையும் நாடறியச் செய்தவர் தென்னாடு திரும்பி சோழ நாட்டை அடைந்தபோது அங்கு திருவரங்கம் கோயிலுக்கு சுற்று மண்டபம், மதில், விமானம் ஆகியவற்றைக் கட்டுமாறு கனவில் இறைவன் தோன்றி கூறியமையைச் செவிமடுத்து அதைச் செயல்படுத்த முனைந்தார். அதனால் அதற்குத் தேவையான பொருளுக்காக நாகப்பட்டினத்தை அடைந்து அங்கு புத்த விகாரத்திலுள்ள பொன்பதுமையைத் திருடி வந்து பணமாக்கி திருவரங்கக் கோயிலின் சுற்று மண்டபம், விமானம் கட்டினார். "இவர் நாகப்பட்டினத்து பௌத்த விகாரத்தில் இருந்த பொன்னாற் செய்யப்பட்ட புத்தர் சிலையைக் கவர்ந்து வந்து அதைக் கொண்டு பல கோவில் திருப்பணிகள் செய்தார் என்று குருபரம்பரை கூறுகின்றது" [13] என்னும் செய்தியும் இதை உறுதி செய்கிறது. திருவரங்கக் கோயிலின் மண்டபமும் விமானமும் கட்டி முடித்தவர் திருமதிற்சுவர் கட்டி வரும் பொழுது தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலுக்கு மலரிட்டு அருச்சித்துத் தொண்டு செய்து வந்த இடத்தினருகில் இடையூறு ஏற்படாதபடி சற்றுத்தள்ளி மதிலைக் கட்டிமுடித்தார். வேலையைச் செய்தவர்கட்குக் கூலி தருவதற்குக் கையில் பணமில்லாமற்போகவே அவர்களுக்கெல்லாம் கூலிப்பணம் தருவதாகக் கூறி ஒரு படகில் ஏற்றிச் சென்று காவிரியாற்றின் நடுவில் படகைக் கவிழ்த்தார். அவர்கள் அனைவரும் பரமபதம் சென்ற காட்சியை உறவினரெல்லாம் கண்குளிரக் கண்டார்கள். தமக்கு எந்தவித இடையூறும் ஏற்படாதபடி மதிற்சுவரைத் தள்ளி அமைத்ததைக் கண்ட தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் திருமங்கையாழ்வாரின் செயலை அறிந்து அகம்மிக மகிழ்ந்து அவர் மீது கொண்ட எல்லையற்ற அன்பினால்

தாம் மலர் பறிக்கும் ஆயுதத்திற்கு திருமங்கையாழ்வாரின் பெயர்களுள் ஒன்றான 'அருள்மாரி' என்னும் பெயரிட்டு மகிழ்ந்தார்.

பௌத்த விகாரத்திலிருந்து பொன் படிமத்தைத் திருடிவந்தவர் திருமங்கை யாழ்வாரே என்றும் அவருக்குத் தகுந்த தண்டனை அளிக்க வேண்டுமென்றும் சோழ மன்னனிடம் பௌத்தத் துறவிகள் முறையிட்டனர். மன்னனும் ஆழ்வாரை அழைத்து விசாரிக்க பௌத்த சமயவாதிகள் மீது தாம் கொண்டிருந்த வெறுப்பை,

பொங்கு போதியும் பிண்டியு முடைப்
புத்தர் நோன்பியர் பள்ளி யுள்ளுறை
தங்கள் தேவரும் தாங்களு மேயாக

என்று புலப்படுத்தி அப்பொன் படிமம் திருவரங்க நாதனுக்குப் பயன்பட்ட தால் பெருமையடைந்தது என்று கூறினார். விக்கிரகத்தை களவாடிச் சென்ற தோடல்லாமல் தங்கள் சமயத்தையும் தேவனையும் நிந்தனை செய்யக் கேட்ட பௌத்தர்கள் சினந்து ஆழ்வாரை சமய வாதத்திற்கு அழைத்தனர். வாதத்தில் தாங்கள் வென்றால் ஆழ்வாரைத் தண்டிக்க வேண்டு மென்றும், தோற்றால் தாங்கள் தண்டனை பெறுவதோடு விக்கிரகத்தைக் கேட்பதில்லையென்றும் உறுதி கூறினார்கள். ஆழ்வாரும் பௌத்தர்களின் வாதத்தைத் தோற்கடித்து வைணவ சமயக் கோட்பாட்டுச் சிறப்பினை நிலைநாட்டி வெற்றி பெற்றார். சோழ மன்னனும் ஆழ்வாரின் வாதத் திறமையையும் வைணவ தத்துவத்தையும் அறிந்து ஆழ்வாரையும் அழைத்துகொண்டு திருவரங்கம் சென்று அரங்கனை வழிபட்டுத் திரும்பினான்.

## ஆழ்வார் பரமபதம் அடைதல் :

ஆழ்வார் திருவரங்கநாதன் முன்னிலையில் பெரிய திருமொழி, திருநெடுந் தாண்டகம் ஆகியவற்றைப் பாடி, மனைவியுடனும், பரிவாரங்களுடனும் தென்னாட்டுத் திருத்தலங்கள் பலவற்றிற்கும் சென்று அங்குள்ள இறைவனைப் பணிந்து மீண்டும் திருவரங்கம் சென்று அரங்கனை வணங்கிக் கண்ணீர் பெருக்கி மனமுருகி நின்றபோது அரங்கன் ஆழ்வாரிடம் தம்மிடம் ஒரு வரம் கேட்டுப் பெறுமாறு கூறினார். இறையின்பத்திலேயே மூழ்கித் திளைத்த ஆழ்வார் தமக்கென்று எதையும் கேட்காமல் தாம் நம்மாழ்வார் மீது பெருமதிப்புக் கொண்டிருந்தவராதலின் வடமொழி மறையோடு அவருடைய திருவாய் மொழியையும் அரங்கன் செவிசாய்த்தருள வேண்டும் என்பதை வரமாகக் கேட்டார். அவ்வாறு ஆழ்வார் கேட்ட வரத்திற்கு அரங்கனும் உடன்பட்டான். அதனால்

மகிழ்வுற்ற ஆழ்வார் அரங்கனை வணங்கி திருவரங்கத்தினின்றும் புறப்பட்டு திருக்குறுங்குடி சென்று சேர்ந்தார். அத்தலத்தில் தீர்த்தமாடி, சன்னிதிக்குச் சென்று கிடந்த நம்பி, இருந்த நம்பி, நின்ற நம்பி, திருப்பாற்கடல் நம்பி, திருமலை நம்பி ஆகிய ஐவரையும் அடிபணிந்து வணங்கி முத்தி அருளுமாறு வேண்ட இறைவனும் பரமபதம் அருளினார்.

## ஆழ்வாரின் காலம்:

திருமங்கையாழ்வார் வாழ்ந்த காலத்தை வரையறுப்பதற்கு அவருடைய பாடலிலுள்ள ஆறாம் பத்து ஆறாம் திருமொழியும், இரண்டாம் பத்து எட்டாம் திரு மொழி ஈற்றுப் பாடலும் ஒன்பதாம் திருமொழி இரண்டு, ஐந்து, ஏழு, எட்டாவது பாடல்களும் துணை செய்கின்றன. அவரது பாடல்களையும் வரலாற்று ஆசிரியர்களின் நூல்களையும் கருத்தில் கொண்டு அவர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர். கி. பி. ஏழாம் நூற்றாண்டினர், கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்று மூன்று வகையான கருத்துக்கள் நிலவுகின்றன எனலாம்.

## கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர்:

**காரணம் :**

பெரிய திருமொழி ஆறாம் பத்திலுள்ள நான்கு திருமொழிகளில் சோழ மன்னன் கோச்செங்கணானின் போர் வெற்றிகளையும் திருமால் பக்தியையும் குறிக்கும் பாடல்கள் இடம்பெறுகின்றன.

கவ்வைமா களிறுந்தி வெண்ணி யேற்ற
கழல்மன்னர் மணிமுடி மேல் காகமேற
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே

செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே

என்பன அவற்றுள் சிலவாகும். இப்பாடல்களை மனதில்கொண்டு ஆழ்வார் காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்றெண்ண இடமுண்டு.

கோச்செங்கணான் திருநறையூர்த் தலத்திலுறையும் திருமாலிடம் மிகவும் ஈடுபட்டுப் பல திருப்பணிகள் செய்திருப்பதை நினைந்து பாடல்தோறும் அதனைக் குறிப்பிட்டுப் பாடுகிறார்.[14] இவ்வாறெல்லாம் அவனைப்

பாடியிருப்பதால் தம் காலத்து மன்னனைப் பாடியுள்ளார் என்னும் கருத்து மேலோங்கி நிற்க ஆழ்வார் சோழன் கோச் செங்கணான் வாழ்ந்த கடைச் சங்க கால கட்டத்தைச் சேர்ந்தவர் என்று எண்ணப்படுகிறது.

மறுப்பு :

பெரிய திருமொழியில் பல்லவரைப் பற்றிய பாடல்களும் அமைந்துள்ளன. ஆழ்வார் கோச்செங்கணான் காலத்தில் வாழ்ந்தவராக இருந்திருப்பின் பின்னால் வந்த பல்லவர்களைப் பற்றி பாடியிருக்க முடியாது. பல்லவர் காலத்தில் வாழ்ந்திருப்பின் முன்னர் வாழ்ந்த கோச்செங்கணானைப் பாடியிருக்க முடியும். எனவே ஆழ்வார் கோச்செங்கணான் காலத்தவரல்லர் என்பது உறுதியாகிறது.

### கி.பி. ஏழாம் நூற்றாண்டினர்:

**காரணம் :**

திருமங்கையாழ்வாரும் திருஞான சம்பந்தரும் ஒருவரை யொருவர் சந்தித்து அளவளாவும்போது சம்பந்தரின் வேண்டுகோளுக்கிணங்க,

ஒருகுறளா யிருநிலமூ வடிமண் வேண்டி
உலகனைத்து மீரடியா லொடுக்கி, ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர் தக்க கீர்த்தி
அருமறையின் திரள்நான்கு வேள்வி யைந்தும்
அங்கங்கள் அவையாறு மிசைக ளேழும்
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே

என்று எண்ணல் உத்தியுடன் தம் புலமையெல்லாம் புலப்படும் வண்ணம் பாடல் பாடியதாகவும் சம்பந்தர் அப்பாடலைக் கேட்டு மகிழ்ந்து 'நாற்கவிப் பெருமாள்' என்னும் பட்டத்தை ஆழ்வாருக்கே தந்து அவரிடம் விடைபெற்றுச் சென்றதாகவும் அதனால் ஞானசம்பந்தரின் காலமாகிய ஏழாம் நூற்றாண்டினர் எனவும் கூறுவர். சம்பந்தரும் ஆழ்வாரும் ஒரே மாதிரியான சொற்களைக் கையாண்டுள்ளனர்.

"கொல்லை முல்லைமெல் லரும்பீனும் குற்றாலம்"[15]

என்னும் சம்பந்தரின் குற்றால வருணனையில் காணப்படும் தொடர் சிறிதும் மாறாமல்

"கொல்லை முல்லைமெல் லரும்பீனுங் குறுங்குடியே"

என்று ஆழ்வார் பாடியுள்ள குறுங்குடித் தலம் பற்றிய வருணனையில் இடம் பெற்றுள்ளது.

சம்பந்தரின் காலத்தில் வாழ்ந்தவரான திருநாவுக்கரசர் பாடிய தாண்டகம், எழுகூற்றிருக்கை ஆகிய செய்யுள் அமைப்புக்களைப் போன்றே திருமங்கையாழ் வாரும் தாண்டகம் எழுகூற்றிருக்கை ஆகியவற்றைப் பாடியுள்ளார். ஆழ்வாரும் நாவுக்கரசும் ஒரே மாதிரியான செய்யுள் அமைப்புக்களை மட்டுமல்ல, ஒரே சொற்களையும் பயன்படுத்தியுள்ளமை காணப்படுகிறது.

1. "திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்"
2. "பந்தணை விரலி"
3. "குரவை கோத்தானும்" [16]

என்னும் தேவாரத் தொடர்களும்,

1. "திருநாமம் எட்டெழுத்துஞ் சொல்லி நின்று"
2. "பந்தணை மெல்விரலாள்"
3. "குரவை முன்னே கோத்தானை"

என்னும் பெரிய திருமொழித் தொடர்களும் ஒரே மாதிரியான சொற்களைக் கொண்டிருக்கின்றன. செய்யுள் போக்கில் காணப்படும், இத்தகைய ஒப்புமைக் கூறு ஆழ்வார் திருநாவுக்கரசர் வாழ்ந்த ஏழாம் நூற்றாண்டினர் என்றெண்ணச் செய்கிறது.

திருஞான சம்பந்தரால் திருத்தி அடிமை கொள்ளப்பட்ட பாண்டிய மன்னன் அரிகேசரி மாறவர்மன் என்றும் அவனுக்கும் பல்லவருக்குமிடையே நென்மேனி என்னுமிடத்தில் ஒரு பெரும்போர் நிகழ்ந்தது என்றும் அதில் பாண்டியனுக்குப் பெரிதும் துணையாயிருந்தவன் அவனுடைய படைத்தலைவன் வில்லவனே என்றும் கூறும் வரலாற்று ஆசிரியர் கூற்றும்[17]

"விடைத்திறல் வில்லவன் நென்மெனி யில்வெரு
வச்செரு வேல்வலங் கைப்பிடித்த
படைத்திறல் பல்லவர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரமதுவே"

என்னும் பெரிய திருமொழிப் பாடலில் இடம்பெறும் 'வில்லவன்' என்னும் பெயரும் ஒன்று போலிருப்பதால் சம்பந்தரும் ஆழ்வாரும் சமகாலத்தவர் என்று கொள்ள இடமுண்டு. "ஏழாம் நூற்றாண்டில் சைன பௌத்தர்கள் தென்னாட்டில் மேலோங்கியிருந்தவர் என்பதும் அப்பரும் சம்பந்தரும் வாதாடி அவர்கள் ஆதிக்கத்தைத் தொலைத்தவர்கள் என்பதும் சரித்திரப் பிரசித்தமானவை. திருமங்கை மன்னனும் சோழன் முன்னிலையில் புத்தர் முதலிய புறச் சமயத்தவரை வாதில் வென்றனர்"[18] என்று கூறும் கருத்தும் காணப்படுகிறது. சமண பௌத்தர்கள்

வைதிக சமயத் தவரையும் அவர்களது கொள்கைகளையும் இகழ்ந்துரைத்தும் இடையூறு செய்தும் தம் சமயத்தைப் பரப்பி வரும்போது திருமங்கையாழ்வார் அவர்களுடைய பண்புகளையும் கொள்கைகளையும் வெறுத்துப் பாடியுள்ளார். எனவே இருவரும் சமகாலத்தவர் என்னும் கருத்து உறுதிப்படுகிறது. மேற்கூறிய காரணங்களுக்குரிய மறுப்புக்கள் கீழ்க்கண்டவாறு அமைகின்றன.

மறுப்பு:

1. ஆழ்வாரும் சம்பந்தரும் சந்தித்து அளவளாவிய போது ஆழ்வார் பாடியதாகக் கூறப்படும் பெரியதிருமொழிப் பாடலில் சம்பந்தரிடம் பாடிக் காட்டியதாகக் குறிப்பு ஒன்றும் இல்லாததால் அதைக் கொண்டு ஆழ்வார் கி.பி. ஏழாம் நூற்றாண்டினர் என்று கொள்ளும் கருத்துப் பொருந்துவதாக இல்லை.

2. தமக்கு முன்னர் வாழ்ந்த சைவ சமயக் குரவர்களான நாவுக்கரசர், சம்பந்தர் ஆகியோரின் பாடல்களில் ஈடுபட்டு 'முன்னோர் மொழி பொருள் பொன்னே போல் போற்றுதும்' என்னும் எண்ணத்தினராய் அவர்தம் செய்யுள் அமைப்புக்களையும் சொற்களையும் கருத்துக்களையும் எடுத்தாண்டிருக் கலாமேயன்றி அதனால் ஆழ்வார் கி.பி. ஏழாம் நூற்றாண்டினர் என்று கருதுவது பொருந்தா ஒன்றே.

3. "அரிகேசரி என்பான் கி.பி. 640 ஆம் ஆண்டில் பட்டம் எய்தினன். இவன் மாறவர்மன் என்ற பட்டம் புனைந்தவன். இவனைச் சுந்தர பாண்டியன் எனவும் கூன் பாண்டியன் எனவும் திருவிளையாடற் புராணம் கூறாநிற்கும். இவன் முதலில் சமண மதப் பற்றுடையவனாயிருந்து அம் மதத்தைப் பெரிதும் ஆதரித்து வந்தான். பிறகு சைவ சமயக் குரவருள் ஒருவராகிய திருஞான சம்பந்த மூர்த்திகளாற் சைவனாக்கப்பட்டான். இவன் முன்னிலையிற்றான் திருஞான சம்பந்தருக்கும் சமண முனிவர் எண்ணாயிரவர்க்கும் அனல் வாதமும் புனல் வாதமும் நிகழ்ந்தன"[19]

"திருமங்கையாழ்வார் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ள பாண்டியன் கி.பி. 710 முதல் 765 வரை ஆட்சி புரிந்த அரிகேசரி பராங்குச மாறவர்மன் என்பது அறியப்படுகிறது"[20]

இவ்விரு கருத்துக்களையும் நோக்குமிடத்து சம்பந்தர் காலப் பாண்டியனும் ஆழ்வார் காலப் பாண்டியனும் மாறவர்மன் என்னும் ஒரே பட்டப் பெயர் உடையவர்கள் என்பதும் இருவரும் வெவ்வேறு காலத்தவர் என்பதும் தெரிகிறது.

இவ்விரு பாண்டியருமே அவரவர் வாழ்ந்த காலத்திலிருந்த பல்லவ மன்னர்களுடன் போர் செய்திருக்க வேண்டும். அவர் தம் படைத் தலைவர்கள் 'வில்லவன்' என்னும் பட்டத்தை உடையவராய் இருந்திருத்தல் வேண்டும். இவற்றால் ஆழ்வார் கி.பி. ஏழாம் நூற்றாண்டினர் என்னும் கருத்து பொருந்துவதாக இல்லை என்பதை அறிகிறோம்.

4. சமண, பௌத்தர்கள் ஏழாம் நூற்றாண்டில் மட்டுமல்ல, எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளிலும் வாழ்ந்திருக்கிறார்கள் என்று குறிப்பிடும் வரலாற்றுச் செய்திகளைக் கொண்டு ஆழ்வார் வாழ்ந்த காலத்திலும் சமண, பௌத்தர் செல்வாக்கு இருந்திருக்க, அதை வெறுத்து அவர் பாடியிருக்கிறார் என்னும் கருத்து பெறப்படுவதால் ஆழ்வார் கி.பி. ஏழாம் நூற்றாண்டினர் என்னும் கருத்து மறுக்கப்படுகிறது.

## கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர்:

திருமங்கையாழ்வார் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பதற்குச் சான்றுகள் பலவுள.

1. "திருமங்கையாழ்வார் கி.பி. 8 ஆம் நூற்றாண்டினர். இரண்டாம் நந்திவர்மன் காலத்தினர். இவர் சோழ நாட்டின் ஒரு பகுதியான ஆலி நாட்டை ஆண்ட குறுநில மன்னர்"[21] என்பர் வரலாற்றுஆய்வாளர்.
2. பெரிய திருமொழிப் பாடலில் பரமேசுவர விண்ணகரத் தலத்தைப் பாடுமிடத்து நந்திவர்மன் என்ற பல்லவ மன்னனின் தெய்வபக்தியையும் வெற்றிச் சிறப்பையும் ஆழ்வார் குறிப்பிடுகின்றார்.
3. இரண்டாம் பத்து ஒன்பதாம் திருமொழியின் மூன்று பாடல்களில் பல்லவ மன்னன் தென்னவனை வென்றான் என்ற செய்தி குறிப்பிடப்படுகிறது.

தேர்மன்னு தென்னவ னைமுனை வில்செரு
வில்திறல் வாட்டிய திண்சிலையோன்,
பார்மன்ன பல்லவர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணகர மதுவே

தேம்பொழில் குன்றெயில் தென்னவ னைத்திசைப்
பச்செரு மேல்வியந் தன்றுசென்ற,
பாம்புடைய பல்லவர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரமதுவே

உலகுடை மன்னவன் தென்னவ னைக்கன்னி
மாமதிள் சூழ்கரு வூர்வெருவ
பலபடை சாயவென் றான்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரமதுவே

4. பல்லவனை எதிர்த்து நின்ற பாண்டியன் மாறவர்மன் என்பதும் அவனே அரிகேசரி பராங்குச மாறவர்மன் என்பதும் அறியக்கிடக்கிறது.

பரமேச்சுர விண்ணகரம் என்பது காஞ்சீபுரத்திலுள்ள வைகுண்டப் பெருமாள் கோயிலாகும். பரமேச்சுர விண்ணகரம் என்பதற்கு பரமேச்சுரனால் கட்டப்பட்ட திருமால் கோயில் என்பது பொருள். பல்லவர் குலத்தின் முந்தைய மன்னன் பரமேச்சுரவர்மன் கட்டியதாக இருக்கலாம் என்னும் கருத்து நிலவுகிறது. ஆனால் ஆழ்வார் 'பல்லவன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம்' என்று கூறுமிடங்களிலெல்லாம் அவ்வாறு பணிந்த பல்லவனது செயல்களையே கூறுகின்றார். ''காஞ்சீபுரத்திலுள்ள வைகுந்தப் பெருமாள் கோயில் முன்னாளில் பரமேச்சுர விண்ணகரம் என்னும் பெயரால் விளங்கிற்று. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருத்தலங்களில் ஒன்று அவ்விண்ணகரம். பரமேச்சுரன் என்னும் இயற்பெயருடைய இரண்டாம் நந்திவர்மனால் அக்கோயில் கட்டப்பட்டது''[22] என்றிருப்பதால் பல்லவமன்னன், பரமேச்சுரவர்மன், நந்திவர்மன் ஆகிய மூவரும் ஒருவரே எனலாம்.

கும்பகோணத்திற்குத் தெற்கே நான்கு மைல் தூரத்திலுள்ள விண்ணகரத்தை நந்தி பணிசெய்த நகர்[23] என்றும், மண்ணில் இதுபோன்ற நகரில்லை என வானவர்கள் தாம் நண்ணி உறைகின்ற நகர்[24] என்றும் புகழ்ந்துள்ளார்.

5. சைவ சமயக் குரவருள் ஒருவரான மாணிக்கவாசகர் பாடிய திருவாசகம் கோத்தும்பி, சாழல் ஆகிய மகளிர் ஆடல், நாட்டுப் பாடல் வடிவங்களைக் கொண்டிருப்பது போன்று ஆழ்வாரும் கோல்தும்பி, சாழல், பொங்கத்தம் பொங்கோ, குழாமணிதூரம் போன்றவற்றை பக்தி இலக்கிய வடிவமாக ஆளுகின்றார். ஆழ்வார் பத்துப் பாடல்களில் 'கோல்தும்பீ' என்னும் ஈறொப்புமையுடன் அமைக்க, மாணிக்கவாசகர் இருபது பாடல்களில் கோத் தும்பி என்று அமைக்கிறார். இவ்வகைக் கவிதைக்கு பழைய மரபு இருந்த தாகக் காட்ட இயலவில்லை. ஆனால் இருவர் காலத்திலும் இவ்வகைக் கவிதை பாடும் மரபு இருந்திருக்கிறது. அப்படியானால் மாணிக்கவாசகர் காலமாகிய எட்டாம் நூற்றாண்டே ஆழ்வார் காலம் என்று கருதப்படுகிறது.

ஆழ்வார் இரண்டாம் நந்திவர்ம பல்லவனும் அரிகேசரி பராங்குச மாறவர்ம பாண்டியனும் ஆட்சி செலுத்திய எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பதும் தெரியவருகிறது.

## கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியும்:

காரணம் :

பெரிய திருமொழியின் அட்டபுயகரம் என்னும் தலத்தை வருணிக்கும் திரு மொழியில் 'வயிரமேகன்' என்பான் குறிப்பிடப்படுகிறான்.

''மன்னன் தொண்டையர் கோன்வணங்கும்
நீள்முடி மாலை வயிரமேகன்''

என்னும் பாடல் அடி வயிரமேகன் என்னும் பெயருடைய தந்திதுர்க்கனை ஆழ்வார் பாடியதைக் குறிப்பிடுகிறது. ''வயிரமேகன் என்பான் ஆழ்வார் புகழ்ந்த பல்லவருள் ஒருவன் என்றே கருதப்படுமாயின், அவன் பல்லவமல்லன் என்ற நந்திவர்மனேனும் (715 - 780), அவன் மகன் தந்திவர்மனேனும் (780 - 830) ஆதல் வேண்டும். என்னெனின், பிற்கூறிய தந்திவர்மனது 9-ம் ஆட்சி வருஷத்தில் அமைந்த உத்தரமேரூர்ச் சாஸனத்திற்றான் வயிரமேகப் பெயர் முதன் முதலாகக் காணப்படுகின்றது''[25] என்னும் கூற்று ஆழ்வார்காலம் தந்திவர்ம பல்லவன் காலமாகிய எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியுமாகும் என்று கருதத் தூண்டுகிறது.

மறுப்பு :

ஆழ்வாரால் குறிப்பிடப்படும் வயிரமேகன் இராட்டிரகூட மன்னன் தந்திதுர்க்கனாவான். அவனுக்கும் இரண்டாம் நந்திவர்மனுக்கும் நடைபெற்ற போரில் நந்திவர்மன் தோற்றுவிட இறுதியில் அவனோடு சமாதானம் செய்து கொள்ளும் எண்ணத்தில் தந்திதுர்க்கன் தன் மகள் இரேவாவை நந்திவர்மனுக்கு மணம் முடித்துக் கொடுத்தான். நந்திவர்மனுக்கு இரேவாவின் வயிற்றில் பிறந்தவனே தந்திவர்மன் ஆவான். ''தந்திவர்மன் இரண்டாம் நந்திவர்மன் மகன். இவன் இராட்டிரகூடப் பெண்மணியான ரேவாவுக்குப் பிறந்தவன். இராட்டிரகூடத் தந்திதுர்க்கன் (வைரமேகன்) மகள் வயிற்றுப் பெயரன். ஆதலின், இவன் தந்திவர்மன் எனப்பட்டான். இவன் அப்பாட்டனைப் போலவே 'வைரமேகன்' என்னும் பெயரும் பெற்றிருந்தான்''[26] என்று கூறுவதனால்

இதனை நன்கறியலாம். எனவே ஆழ்வார் கூறும் 'வயிரமேகன்' தந்திவர்மனல்ல என்பதும் இராட்டிரகூட மன்னன் தந்திதுர்க்கனே என்பதும் அறியப்படுகிறது. 'தொண்டையர்கோன் வணங்குகின்ற வெற்றி மாலையையுடைய வயிரமேகன்' என்று ஆழ்வார் கூறுவதனால் வயிர மேகனை பல்லவன் ஏன் வணங்க வேண்டும் என்னும் வினா எழுகின்றது. இராட்டிரகூடனான வயிரமேகன் மாமன் உறவுடையனாதலால் நந்திவர்மனால் பெருமைப்படுத்தப்பட்டிருக்க வேண்டும். ''இராட்டிரகூடரின் தலைவனான தந்திதுர்க்கன் தக்கணத்தில் சாளுக்கியரை வென்று தனது ஆதிக்கத்தை கி.பி. 754 இல் நிலை நாட்டினான். பல்லவமல்லன் இராட்டிரகூடருக்கு அனுசரணையாக இருந்து சளுக்கிய மரபினரை அழித்தொழித்தான். மகிழ்ச்சியடைந்த தந்திதுர்க்கன் தன் மகள் இரேவாவை பல்லவ மல்லனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். தந்தி துர்க்கனின் பட்டப் பெயர் வைரமேகன் ஆகும். வயிரமேகனையும் பல்லவ மல்லனையும் காஞ்சியில் கண்டதாக திருமங்கையாழ்வார் பாடியிருக்கிறார்.''[27] ''திருமங்கையாழ்வார் தம்முடைய பாடல்களில் இரண்டாம் நந்திவர்ம பல்லவனையும் இராட்டிரகூட தந்திதுர்க்கனையும் குறிப்பிடுவதால், எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று அறிகிறோம்''[28] என்று காணப்படும் வரலாற்றுச் செய்திகளாலும் இரண்டாம் நந்திவர்ம பல்லவனையும் இராட்டிரகூட தந்திதுர்க்கனையும் ஆழ்வார் தம் பாடல்களில் குறிப்பிடுவதாலும், மேற்கூறிய அரசர்கள் காலமாகிய எட்டாம் நூற்றாண்டே திருமங்கையாழ்வார் காலம் என்பது திண்ணம்.

### கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினர்:

''பல்லவர்களுள் சிறந்து விளங்கிய மூன்றாவது நந்திவர்மன் இயற்றிய திருப்பணியையே திருமங்கை மன்னர் தம்முடைய பாடலில் ''நந்தி பணி செய்த'' என்று குறிப்பதாகத் தெரியவருவதாலும் ''பணி செய்த'' என்று இறந்த காலத்தில் கூறினமையாலும் மூன்றாவது நந்திவர்மன் பணி செய்த காலத்தின் பின் இவர் வாழ்ந்திருக்க வேண்டும்''[29] ''நீண்முடி வணங்கும் வைரமேகன்'' என்று திருமங்கையாழ்வார் நிகழ்காலத்துக் கூறுவதால் இவர் அவன் காலத்தவர் ஆவர். வைரமேகன் காலம் திருவொற்றியூர்க் கல்வெட்டொன்றில் கி.பி. 880 என்பது பெறப்படும். எனவே திருமங்கையாழ்வார் 9-ம் நூற்றாண்டில் பிற்பகுதியிலிருந்தோராவர்''[30] என்று கூறப்படும் செய்திகள் ஆழ்வார் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று கருதப்படுவதற்குக் காரணமாக அமைகின்றன.

மறுப்பு:

திருமங்கையாழ்வார் வாழ்ந்த காலத்தில் பல்லவர்களுள் தலைசிறந்து விளங்கிய மன்னர்களுள் ஒருவனான மூன்றாம் நந்திவர்மன் வாழ்ந்திருப்பின் அவனுடைய அருஞ்செயல்களுள் ஒன்றாகக் கருதப்படும் தெள்ளாற்றில் வென்றமை பற்றி அவர் கூறாதிரார் என்பதாலும், வைரமேகன் என்பது இரண்டாம் நந்திவர்மன் காலத்தவனாகிய இராட்டிரகூட மன்னனையே குறித்து இரண்டாம் நந்திவர்மன் காலத்தவனாகவே அவனை எண்ணச் செய்கிறது என்பதாலும் 'நந்தி பணிசெய்த' என்பதில் குறிப்பிடப்படும் 'நந்தி' என்னும் சொல் இரண்டாம் நந்திவர்மனையே குறிக்கும் என்பதாலும் இரண்டாம் நந்திவர்மன் இராட்டிரகூட வேந்தனாகிய வயிரமேகனை வணங்குவதையே 'நீண்முடி வணங்கும் வயிரமேகன்' என்று ஆழ்வார் கூறியதாகத் தெரிய வருவதாலும் அவர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினர் என்னும் கருத்து பொருந்தாமை பெறப்படும்.

'திருமங்கையாழ்வாரை ஒன்பதாம் நூற்றாண்டைச்சார்ந்தவர்' என்று கூறுவார்[31] அதற்குரிய சான்றாகக் காட்டும் அரசர்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகள், அரசர்கள் காலம் பற்றி வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதனின்றும் சற்று மாறுபட்டு விளங்குவதால் அது பொருந்தாமை புலனாகும்.

## கி.பி. பத்தாம் நூற்றாண்டினர்:

திருமங்கையாழ்வார் கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவராதல் வேண்டும் என்று கருதும் கருத்துக்கு அரணாக திருமாலின் பத்து அவதாரங்களுள் பரசுராமர், கல்கி அவதாரங்கள் பற்றிய பேச்சு, திவாகரம் என்னும் நூல் எழுந்த காலமாகிய பத்தாம் நூற்றாண்டுக்கு முன்பு பேசப்படாமை ஆழ்வார் பாடல்களில் அவ்வவதாரங்களின் பேச்சு ஆகியவற்றைக் காட்டுவர். [32]

மறுப்பு:

மிகவும் தொன்மையதான அவதாரங்கள் பற்றிய கருத்து இருந்து அதைத் தம் நூலகத்துத் தேவையின்மை கருதிக் குறிக்க வேண்டாத சூழ்நிலை முற்பட்ட காலத்துப் புலவர்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடுமாதலால் மேற்காட்டிய கருத்தும் ஏற்கவியலா ஒன்றாகவே உள்ளது.

திருமங்கையாழ்வார் வாழ்ந்த காலம் பற்றிய கருத்துக்கள் பல்வேறாக இருப்பினும் கி.பி. எட்டாம் நூற்றாண்டுதான் அவர் வாழ்ந்த காலம் என்பது ஆய்வாளர் கண்ட முடிவாகும்.

## சான்றெண் விளக்கம்


1. திருவேங்கடத்தான் மன்ற வெளியீடு, ஸ்ரீ நாலாயிர திவ்வியப் பிரபந்தம், முன்னுரை, ப.5.
2. ந. சுப்புரெட்டியார், சிலநோக்கில் நாலாயிரம், ப.337.
3. Anna, Saints of India. P- 46
4. திராவிட சமயம், சமய ஒப்பியல் ஆய்விதழ், ப.7.
5. ரா. கீதாசார்யன், "திருமங்கை மன்னன்" தினமணி, 14-4-87, ப.6.
6. கழகத்தமிழ் அகராதி, ப.88.
6. கல்லாடன், செந்தமிழ்ச் செல்வி, நாற்பத்திரண்டாம் சிலம்பு, ப.367.
8. மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு, ப.276.
9. ஸ்ரீவத்ஸன் (ப.ஆ) நாலாயிரதிவ்வியப் பிரபந்தம், முன்னுரை, ப.அ.58
10. J. S. M. Hooper, Hymns of the Alwars P. 16
11. கா. ர. கோவிந்தராச முதலியார், ஆழ்வார்கள் வரலாறு, ப.63.
12. பி. ஸ்ரீ. காதலால் கதி பெற்றவர் ப. 47.
13. வாழ்வியற் களஞ்சியம், ப.657.
14. மா. இராசமாணிக்கனார், மு.நூ. ப. 276.
15. சம்பந்தர் தேவாரம், முதல் திருமுறை, திருக்குற்றாலப் பதிகம், பா.3.
16. திருநாவுக்கரசர் தேவாரம், திருவாலங்காட்டுப் பதிகம், பா.4, திருவாவடுதுறைப் பதிகம்; பா.10, பா.7.
17. மு. ஆரோக்கியசாமி, தமிழ் நாட்டு வரலாறு, ப.113.
18. மு. இராகவையங்கார், ஆழ்வார்கள் காலநிலை, ப.187.

19. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், *பாண்டியர் வரலாறு, ப.39.*

20. கே.கே. பிள்ளை, *தென்னிந்திய வரலாறு 1, ப.127.*

21. மா. இராசமாணிக்கனார், *பல்லவர் வரலாறு, ப.276.*

22. இரா.பி. சேதுப்பிள்ளை, *தமிழகம் ஊரும் பேரும், ப.329.*

23. பெரிய திருமொழி *5.10:7*

24. மே.நூ. *5.10:8*

25. மு. இராகவையங்கார், *மு.நூ.ப. 151.*

26. மா. இராசமாணிக்கனார், *மு.நூ.ப.189.*

27. வ. பொன்னுசாமி பிள்ளை, *தமிழக வரலாறு, ப.86.*

28. க. அ. நீலகண்ட சாஸ்திரி, *தமிழர்பண்பாடும் வரலாறும், ப.155.*

29. கா. சுப்பிரமணிய பிள்ளை, *இலக்கிய வரலாறு-2ம் பாகம், ப.320.*

30. மே.நூ. *ப.322.*

31. S. Vaiyapuri Pillai, *History of Tamil Language and Literature P. 128.*

32. மறைமலையடிகள், *மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் - இரண்டாம் பகுதி, பக்.533,536,542.*

***

# 2. பெரிய திருமொழி அமைப்பு

உயரிய குறிக்கோள், கருத்துக்கள் ஆகியவற்றைத் தன்னகத்துக் கொண்டு சிறப்புக் குன்றாமல் மக்கள் மனத்தில் நிலையான இடம் பெற்று விளங்குவதே இலக்கியம். இத்தகைய இலக்கியங்களிலும் இருவகை உள. ஒன்று புலமையாலும் பயிற்சியாலும் பொருளுக்காகவோ பிறர் விருப்பத்திற்காகவோ பாடப்படுவது. மற்றொன்று தெய்வத் திருவருளாலும் ஞானத்தாலும் இயல்பாகத் தோன்றுவது. தெய்வத் திருவருளால் தோன்றும் இலக்கியங்களில் நடைமுறை உண்மை, வாழ்வியல் கருத்துக்கள், நிலையாமைக் கருத்துக்கள் ஆகியவையே பெரும் பகுதியாக இடம்பெறும். கடவுளரின் திருவருட் செயல்கள், அவருறையும் தலங்களின் வருணனைகள் ஆகியவையும் காணப்படும். இத்தகைய மெய்ஞ்ஞான இலக்கியங்களாகத் தலைசிறந்து விளங்குவனவற்றுள் திருமங்கையாழ்வாரின் பாடல்களும் இடம் பெறுகின்றன. அவருடைய பெரிய திருமொழி ஆயிரத்து எண்பத்து நான்கு பாடல்களைக் கொண்டதொரு பக்திப் பனுவலாகும். அனைத்துப் பாடல்களுமே திருமாலை முழுமுதற் பரம்பொருளாகக் கொண்டு பாடப்பட்டவை.

தெய்வீகப் பாடல்களாதலால் 'திரு' என்னும் அடைமொழிபெற்று 'திருமொழி' ஆயிற்று. ஏனைய ஆழ்வார்கள் பாடியவற்றினின்றும் அதிகமான திருத்தலங்களில் பாடப்பெற்றிருப்பதால் 'பெரிய' என்னும் அடைமொழிக்கு உரியதாயிற்று என்று கொள்ளலாம். ஏனையோர் பாடல்களுக்கு பெரியாழ்வார் திருமொழி, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி என்பன போன்ற பெயர்கள் பாடினோர் பெயராலும் பாட்டுடைத் தலைவனின் பெயராலும் வழங்கப்பட, திருமங்கையாழ்வாரின் பாடல்கள் மட்டுமே பாடினோர் பெயராலோ, பாட்டுடைத் தலைவன் பெயராலோ வழங்கப்படாமல் 'பெரிய திருமொழி' என்று வழங்கப்படுகின்றது. நம்மாழ்வார் பாடிய பாடல்களின் எண்ணிக்கை திருமங்கையாழ்வாரின் பாடல் எண்ணிக்கையைவிட அதிகமாக இருப்பினும் அவருடைய பாடல்கள் வைணவ மறையாக விளங்குகின்ற காரணத்தால் 'திருவாய் மொழி' என்னும் பெயரைப் பெற்றுள்ளது. எனவே அடுத்ததாக எண்ணிக்கையில் அதிகமான பாடல்களைக் கொண்ட திருமங்கையாழ்வாரின் பாடல்கள் 'பெரிய' என்னும் அடைமொழி பெற்று 'பெரிய திருமொழி' என்று வழங்கப் பட்டிருத்தல் வேண்டும் எனலாம். விட்டிணு சித்தர் இறைவனுக்கு வாழ்த்துச் சொல்வதால் 'பெரியாழ்வார்' என்று அழைக்கப்பட்டமைபோல திருமங்கையாழ்வாரின் பாடலும் அன்பின் மிகுதியால் இறைவன் எழில் நிலைபெற்றிருக்கும் வகையில் அவன் பெருமை பற்றிக் கூறுவதால் 'பெரிய திருமொழி' என்று அழைக்கப் படலாயிற்று என்றும் கூறலாம்.

### தலங்கள் :

சோழ நாட்டில் நாற்பது, நடுநாட்டில் இரண்டு, தொண்டை நாட்டில் இருபத்திரண்டு, வடநாட்டில் பதினொன்று, மலைநாட்டில் பதின்மூன்று, பாண்டி நாட்டில் பதினெட்டு எனக் கூறப்படும் நூற்று ஆறு திருத்தலங்களுடன் நிலவுலகில் காணமுடியாத திருப்பாற்கடல், பரமபதம் ஆகிய இரண்டினையும் சேர்த்து நூற்றெட்டுத் திருத்தலங்கள் வைணவத் திருத்தலங்களாகக் கூறப்படுகின்றன.[1] அவற்றுள் எண்பத்தாறு திருத்தலங்களுக்கு திருமங்கையாழ்வார் சென்று பாடியிருக்கிறார் என்று அவர் பாடிய பாடல்களைக் கொண்டு வரையறுக்க முடிகிறது. அவற்றுள்ளும் சோழநாட்டில் முப்பத்து நான்கும், நடுநாட்டில் இரண்டும், தொண்டை நாட்டில் பதின்மூன்றும், வடநாட்டில் பத்தும், மலைநாட்டில் மூன்றும், பாண்டிநாட்டில் எட்டுமாக உள்ள எழுபது தலங்களில் பாடிய பாடல்களைக் கொண்டுள்ளது பெரிய திருமொழி.[2] நிலவுலகில் காண முடியாத திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் இறைவனை ஞானத்தினால் அறிந்து அவனது பெருமைகளை இருபத்திரண்டு பாடல்களில் கூறியுள்ளார்.[3]

வலிய வந்து தம்மை ஆட்கொண்ட இறைவனால் உபதேசிக்கப்பெற்ற எட்டெழுத்து மந்திரத்தின் பெருமைகளையும் சிறப்புக்களையும் அவற்றைத் தாம் கண்டு கொண்ட விதத்தையும் ஒவ்வொரு திருத்தலமாகச் சென்று பாடியவர் தாம் ஆலி நாட்டு மன்னராக விளங்கியமை, போதிய கல்வியறிவு வாய்க்கப்பெறாமல் இருந்தமை, கள்வனாகத் திரிந்து பிறர் பொருளைப் பற்றியமை ஆகியவற்றைக் குறிப்பிடுவதோடு தம்மிடமிருந்த புன்மைக் குணங்கள் அகன்றது 'நாராயணா' என்னும் திருமந்திரத்தினாலேயே என்றும் சொல்லுகிறார்.

### தலப்பெருமை :

திருநறையூர்த் தலத்தின் பெருமை மட்டும் ஆறாம் பத்தில் நான்கு முதல் பத்து முடிய உள்ள திருமொழிகளோடு ஏழாம் பத்தில் ஒன்று முதல் மூன்று முடிய உள்ள திருமொழிகளும்சேர நூறு பாடல்களிலும், இரண்டாம் பத்தின் நான்காம் திருமொழியிலுள்ள முதற் பாடல், நான்காம் பத்தின் ஒன்பதாம் திருமொழியிலுள்ள இரண்டாவது பாடல், ஆறாம் பத்தின் மூன்றாம் திருமொழியிலுள்ள மூன்றாவது பாடல், நான்காம் திருமொழியிலுள்ள முதற்பாடல், ஏழாம் பத்தின் ஏழாம் திருமொழியிலுள்ள நான்காவது பாடல், எட்டாம் பத்தின் இரண்டாம் திருமொழியிலுள்ள இரண்டாவது பாடல், பத்தாம் பத்தின் முதல் திருமொழியிலுள்ள ஐந்தாவது பாடல் ஆகியவற்றிலுமாக மொத்தம் நூற்று ஏழு பாடல்களில் பேசப்படுகிறது. இத்தலத்துறையும் நம்பியை ஆழ்வார் போற்றிப்

பாடும் பாடல்கள் ''பெரிய திருமொழியின் நடுநாயகம் போல் விளங்கும் பத்துத் திருமொழிகளும் கரும்பின் இடைப்பாகம் போன்றன''[4] என்று பாராட்டப்பெறுவது இறைவனின் சிறப்பும் அதனால் அத்தலத்திற்கு ஏற்பட்டுள்ள பெருமையும் கருதியேயாம்.

மான்கொண்ட தோல்மார்வில் மாணியாய் மாவலிமண்
தான்கொண்டு தாளால் அளந்த பெருமானை
தேன்கொண்ட சாரல் திருவேங்கடத் தானை
நான்சென்று நாடி நறையூரில் கண்டேனே

என்று திருவேங்கடத்தானை திருநறையூரில் கண்டதாகக் கூறுவதோடு திருவாலி, திருநீர்மலை, திருநாவாய், திருமெய்யம், திருக்குடந்தை ஆகிய திருத்தலங்களில் உறையும் அர்ச்சாவதார மூர்த்திகளையும் இராம, கிருட்டிண விபவாவதார மூர்த்திகளையும் அங்கு கண்டு கொண்டதாகக் கூறுகிறார்.

வைணவர்கள், நிலவுலக வைகுண்டமான திருவரங்கத்திற்கு அடுத்து சிறந்த தலமாக திருமெய்யத்தைக் குறிப்பிடுவர். அத்தலத்தில் உறையும் பெருமானை கிடந்த கோலத்தனாகக் காட்டும் ஆழ்வார்,

தண்ணார்ந்த வார்புனல்சூழ் மெய்யமென்னும்
தடவரைமேல் கிடந்தானை ....

என்று கூறுகிறார். ''ஆசியாவிலேயே மிகப் பெரிய பள்ளிகொண்ட பெருமாள் திருமெய்யத்தின் மலையைக் குடைந்து அமைக்கப்பட்டுள்ளார்''[5] என்னும் கூற்றும் திருமெய்யத்தின் பெருமையைக் குறிப்பிடுகிறது.

## பகுப்பு :

ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் பாடல்களின் பகுப்பு முறை, 'பத்து', 'திருமொழி', 'பாடல்' என்னும் முறையில் அமைந்துள்ளது. அதற்கேற்ற வகையில் பெரிய திருமொழியும் பதினொரு பத்தாகப் பகுக்கப் பட்டுள்ளது. இவற்றுள் ஒரு பத்து என்பது பத்துத் திருமொழிகள் கொண்டதாம். ஆனால் பதினோராம் பத்தில் மட்டும் எட்டுத் திருமொழிகளே உள்ளன. ஒவ்வொரு திருமொழியும் பத்துப் பாடல்களைக் கொண்டது. பத்தாம் பத்து ஏழாம் திருமொழியில்மட்டும் பதினான்கு பாடல்கள் உள்ளன.

பெரிய திருமொழி பதினொரு பத்துக்களாகப் பகுக்கப்பட்டு நூற்றெட்டுத் திருமொழிகளாக வகை செய்யப்பட்டு, ஆயிரத்து எண்பத்து நான்கு பாடல்களைக்

கொண்டதாக விளங்குகிறது. இவற்றுள் பத்தாம் பத்து ஏழாம் திருமொழி கிருட்டிணாவதாரப் பெருமை தவிர வேறோர் அவதாரத்தின் வரலாறு சிறிதும் கலவாத வகையில் பாடப்படுகிறது. கண்ணனின் பிள்ளை விளையாட்டுக்களும் அவன் பெரியவனான பிறகு செய்த செயல்களும் பாடப்பெறுவதால், அவை நீண்டு கொண்டேபோக அதனால் பதினான்கு பாடல்கள் இத்திருமொழியில் அமைந்துள்ளனவாக அறியக் கிடக்கிறது.

## திருமொழி அமைப்பு :

முதல் பத்தின் முதலாவது திருமொழி திருவெட்டெழுத்து மந்திரத்தின் பெருமையைப் பேசும் திருமொழியாக அமைக்கப் பட்டுள்ளது. இரண்டாம் திருமொழி முதல் பத்தாம் பத்தின் முதல் திருமொழி ஈறாக உள்ள தொண்ணூறு திருமொழிகள் திருத்தலங்களிலுள்ள அர்ச்சாவதார மூர்த்தியின் தலைமைத் தன்மையையும், கருணைத்திறத்தையும் அன்பர்க்கு எளியனாயும் அல்லவர்க்கு அரியனாயும் இருக்கும் சிறப்பையும் கூறுவனவாக உள்ளன.

பத்தாம் பத்தின் இரண்டாம் திருமொழி 'பொங்கத்தம் பொங்கோ' என்னும் தலைப்பிலும் மூன்றாம் திருமொழி 'குழமணிதூரம்' என்னும் தலைப்பிலும் பாடல்களைக் கொண்டுள்ளன. நான்காம் திருமொழி முதல் எட்டாம் திருமொழி ஈறாக அமைந்துள்ள பாடல்கள் கண்ணனின் சிறுபிள்ளைச் செயல்களையும் ஆய்ச்சியரின் முறையீட்டையும் குறிப்பிடுகின்றன. ஒன்பதாம் திருமொழி 'பழமொழியால் பணிந்துரைத்த பாட்டு' என்னும் தலைப்பிலும், பத்தாம் திருமொழி 'பறவைகளை நோக்கி மாயனை அழை' என்னும் தலைப்பிலும் அமைந்துள்ளன.

பதினோராம் பத்தின் முதல் மூன்று திருமொழிகள் நாயக-நாயகி பாவனையில் பாடல்களைக் கொண்டுள்ளன. நான்காம் திருமொழி தசாவதாரங்களின் சிறப்பை விளக்குவதாக உள்ளது. ஐந்தாம் திருமொழி திருச்சாழல் பாட்டாகவும் ஆறு முதல் எட்டு வரையுள்ள திருமொழிகள் கண்ணனை வணங்குவதால் ஏற்படும் பயனைக் காட்டும் பாடல்களாகவும் அமைந்துள்ளன.

## சாத்துப்பாட்டு :

பெரிய திருமொழியில் இசை நூல்அகராதியில் கூறியிருப்பது போன்று 'சுவநாம முத்திரை', 'தல முத்திரை' ஆகிய இரண்டும் பொறிக்கப்பட்டுள்ளன. பாடல் இயற்றுபவரின் பெயரையோ, அவருடைய ஊரையோ, பாடலின் பண்ணையோ, தாளத்தையோ சிறப்பாகக் குறிப்பதன் பொருட்டு முத்திரைகளைப் பயன்படுத்துவது உண்டு. அதன்படி, பாடல் இயற்றுபவர் தம் பெயரைப் பாடலில்

பதித்து வைப்பது 'சுவநாம முத்திரை'. தம் ஊரையும் நாட்டையும் பாடலில் பதிப்பது 'தல முத்திரை'. இவ்விருமுத்திரைகளும் பெரிய திருமொழியில் ஒவ்வொரு திரு மொழியிலுமுள்ள ஈற்றுப் பாடலில் இடம் பெறுவதைக் காணலாம். ''திருமங்கை மன்னர் முதலிய பெரியோர்கள் பதிகங்களின் ஈற்றில் பாடும் செய்யுட்கள் 'பயன் கூறுவன' எனவும் 'சாத்துப் பாட்டு' எனவும் கூறப்படும். பொதுவின் இங்ஙனம் நூல் ஆசிரியர் பெயர் முதலியன அமைய நூலின் ஈற்றில் அந்நூல் ஆசிரியராலேயே பாடப்படும் செய்யுட்கள் நாந்திச் செய்யுட்கள் எனப்படும்'' என்பர்.[7] இக்கூற்றுக் கேற்ப பெரிய திருமொழியில் நாந்திச் செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. திருமங்கையாழ்வாரைப் போலவே பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், மதுரகவியாழ்வார், நம்மாழ்வார் ஆகியோரும் சைவசமயக் குரவரான திருஞான சம்பந்தரும் நாந்திச் செய்யுள் பாடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

## வேதத்திற்கு அங்கம் :

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழிப் பாடல்கள் மட்டுமன்றி அதன் தொடர்ச்சியாக மற்றும் சில பாடல்களும் பாடியுள்ளார். தாண்டக அமைப்பில் குறுந்தாண்டகம், நெடுந்தாண்டகம் என்னும் இரண்டும் முறையே இருபது பாடல்கள், முப்பது பாடல்கள் கொண்டதாக அமைந்துள்ளன. ஒரேயொரு பாடல் கொண்ட திருவெழுகூற்றிருக்கை, நூற்று ஐம்பத்தைந்து அடிகளையுடைய சிறிய திருமடல், இருநூற்றுத் தொண்ணூற்று ஏழு அடிகள் கொண்ட பெரிய திருமடல் ஆகிய இவையும் பெரிய திருமொழியைத் தொடர்ந்து பாடப்பட்டுள்ளன. இவை ஆறும் நம்மாழ்வார் பாடிய திருவாய் மொழியாகிய வைணவர்களின் வேதத்திற்கு வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தம், சிகைடி, கல்பம் என்னும் ஆறு அங்கங்களாகத் திகழ்கின்றன.[8]

## யாப்பு :

''கற்றிலேன் கலைகளை'' என்று ஆழ்வார் பாடியிருந்த போதிலும் அரியபுலமைத் திறமும் அகன்ற கல்வியறிவும் பெற்ற தமிழ்ப் புலவர் அவர் என்பதற்கு இலக்கியச் சுவையுடன் பல்வேறு விதமான யாப்பமைப்பில் இயற்றப் பெற்றிருக்கும் பெரிய திருமொழிப் பாடல்கள் சான்றாக அமைகின்றன.

## பாவினங்கள் :

பெரிய திருமொழியில் பெரும்பாலும் விருத்தப் பாக்களே பயன்படுத்தப் பட்டுள்ளன. ஆசிரியத்துறை, அறுசீர், எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்கள், வஞ்சி

விருத்தம், கலித்தாழிசை, கலிவிருத்தம், கலிநிலைத்துறை, கொச்சகக் கலிப்பா, வெண்டுறை என்பன கையாளப்பெறும் பாவினங்களாக உள்ளன.

### ஆசிரியத் துறை :

இரண்டாம் பத்தின் முதல் திருமொழி, மூன்றாம் பத்தின் ஐந்தாம் திரு மொழி, ஒன்பதாம் பத்தின் பத்தாம் திருமொழி ஆகிய மூன்றும் ஆசிரியத்துறையின் பாற்படும்.

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் :

முதல் பத்தின் இரண்டு, மூன்று, ஐந்தாம் திருமொழிகளும் இரண்டாம் பத்தின் நான்கு, ஐந்து , எட்டாம் திருமொழிகளும் மூன்றாம் பத்தின் ஒன்று, மூன்றாம் திருமொழிகளும் நான்காம் பத்தின் இரண்டு, ஐந்து, ஆறு, ஒன்பதாம் திருமொழிகளும் ஐந்தாம் பத்தின் ஒன்று, மூன்று, ஐந்து, ஒன்பது, பத்தாம் திரு மொழிகளும் ஆறாம் பத்தின் ஏழு, பத்தாம் திருமொழிகளும் ஏழாம் பத்தின் நான்கு, ஐந்தாம் திருமொழிகளும் எட்டாம் பத்தின் ஒன்று, ஐந்து, ஆறு, எட்டாம் திருமொழிகளும் ஒன்பதாம் பத்தின் ஐந்து, ஏழாம் திருமொழிகளும் பத்தாம் பத்தின் மூன்று, நான்காம் திருமொழிகளும் ஆகிய இருபத்தொன்பது திருமொழிகள் அறு சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அடங்குவன.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் :

முதல் பத்தின் ஒன்று, நான்கு, ஆறு, எட்டாம் திருமொழிகள், இரண்டாம் பத்தின் மூன்று, ஏழு, ஒன்பதாம் திருமொழிகள், நான்காம் பத்தின் மூன்று, பத்தாம் திருமொழிகள், ஐந்தாம் பத்தின் ஏழாம் திருமொழி, ஆறாம் பத்தின் ஆறாம் திருமொழி, ஒன்பதாம் பத்தின் ஒன்று, இரண்டு, எட்டாம் திருமொழிகள், பத்தாம்பத்தின் ஏழு, ஒன்பதாம் திருமொழிகள் ஆகிய பதினாறும் எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தைச் சார்ந்தன.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் :

இரண்டாம் பத்தின் பத்து; மூன்றாம் பத்தின் இரண்டு,நான்கு, எட்டு, ஒன்பது, பத்து; நான்காம் பத்தின் பத்து; ஐந்தாம் பத்தின் எட்டு; ஏழாம் பத்தின் மூன்று, ஏழு, எட்டு, பத்து; பத்தாம் பத்தின் இரண்டு, ஆறு; பதினோராம் பத்தின் நான்கு ஆகிய பதினைந்து திருமொழிகளும் எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தின் பாற்படுவன.

### வஞ்சிவிருத்தம் :

ஆறாம் பத்தின் முதல் திருமொழி வஞ்சி விருத்தத்தைச் சார்ந்தது.

வண்டுணு நறுமல ரிண்டை கொண்டு
பண்டைநம் வினைகெட வென்று, அடிமேல்
தொண்டரு மமரரும் பணிய நின்றங்
கண்டமொ டகலிட மளந்தவனே !
ஆண்டாயுனைக் காண்பதோ ரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனை வாழ்க்கையை விண்ணகர் மேயவனே

என்னும் பாடல் சான்றாகும். இப்பாடலின் முதல் நான்கடிகள் வஞ்சி விருத்தத்தில் அமைந்திருக்க தொடர்ந்து வரும் இரண்டடிகளும் வஞ்சி விருத்தத்தில் சேராத தனித் தன்மையுடையன. இங்ஙனமே ஏனைய ஒன்பது பாடல்களும் அமைந்துள்ளன. அவற்றின் தனித்தன்மையனவான இரண்டு அடிகளும் ஒரே வகையான சொற்கள் கொண்டவையாக விளங்குகின்றன. ஆறடிகளாலான இப் பாடல்கள் ஒவ்வொன்றும் இரு பகுதிகளாலாயின. முதற் பகுதி வஞ்சி விருத்த அமைப்புடையது. தொடர்ந்து வரும் பகுதி, தாழிசை வடிவு பெறுவதுடன் பாடல் தோறும் மீண்டும் வருகின்றது. இவ்வமைப்புடைய 'மேல் வைப்பு' என்ற புதுவகையானதொரு யாப்பு முறையை திருமங்கையாழ்வார் புகுத்தியுள்ளார்.

### கலிப்பாவினம் :

முதல் பத்தின் ஏழு, ஒன்பது; இரண்டாம் பத்தின் இரண்டு; மூன்றாம் பத்தின் ஏழு; ஐந்தாம் பத்தின் நான்கு; ஆறாம் பத்தின் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து; ஏழாம் பத்தின் ஆறு; ஒன்பதாம் பத்தின் மூன்று, ஆறு, ஒன்பது; பதினோராம் பத்தின் இரண்டு, ஆறு ஆகிய பதினைந்து திருமொழிகளும் கலித்துறையுள் அடங்குவன. முதற் பத்தின் பத்து; நான்காம் பத்தின் ஏழு, எட்டு; ஐந்தாம் பத்தின் இரண்டு, ஆறு; ஏழாம் பத்தின் ஒன்று, எட்டு; பதினோராம் பத்தின் ஒன்று, எட்டு ஆகிய பன்னிரண்டு திருமொழிகள் கலி விருத்தத்தைச் சார்ந்தன.

பத்தாம் பத்தின் ஐந்தாம் திருமொழி கலித்தாழிசையிலும் நான்காம் பத்தின் முதல் திருமொழி கொச்சகக் கலிப்பாவிலும் இரண்டாம் பத்தின் ஆறு; மூன்றாம் பத்தின் ஆறு; ஆறாம் பத்தின் எட்டு, ஒன்பது; எட்டாம் பத்தின் இரண்டு, மூன்று, நான்கு, ஒன்பது, பத்தாம் திருமொழிகள், ஒன்பதாம் பத்தின் நான்காம் திருமொழி, பதினோராம் பத்தின் மூன்று, ஐந்து, ஏழு ஆகிய பதின்மூன்று திருமொழிகளும் தரவு

கொச்சகக் கலிப்பாவிலும் ஏழாம் பத்தின் ஒன்பதாம் திருமொழி சந்தக் கலி விருத்தத்திலும் ஒன்பதாம் பத்தின் ஒன்பதாம் திருமொழி கட்டளைக் கலித்துறையிலும் அமைந்துள்ளன.

### வெண்டுறை :

பறவைகளை நோக்கி மாயனை அழைத்து வருமாறு தூது அனுப்புவதாக அமைந்துள்ள பத்தாம் பத்தின் பத்தாம் திருமொழி வெண்டுறை அமைப்பையுடையது.

### ஒரே சொற்றொடர் அமைந்திருத்தல் :

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த மூன்றாம் பத்தின் ஒன்பதாம் திருமொழியும் பத்தாம் திருமொழியும் பாடல்களின் சொற்றொடர் அமைப்பில் ஒத்திருக்கின்றன. இவ்விரு திருமொழிகளிலும் அமைந்துள்ள இரண்டாவது பாடலில் அவ்வத்தலங்களில் வாழும் மக்களின் பெருமையைப் பேசு மிடத்து ஒரே தன்மையனவான சொற்றொடரை அமைத்துப் பாடியிருப்பதைக் காணலாம். இது பெரிய திருமொழியின் தனிச் சிறப்பாகும்.

திண்ணியதோ ரரியுருவாய்த் திசையனைத்தும் நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திசைப்ப, இரணியனை
நண்ணியவன் மார்வகலத் துகிர்மடுத்த நாதன்
நாடோறும் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில்
எண்ணில்மிகு பெருஞ்செல்வத் தெழில் விளங்கு மறையும்
ஏழிசையும் கேள்விகளு மியன்றபெருங்குணத்தோர்
மண்ணில்மிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமட நெஞ்சே

என்பது திருவைகுந்த விண்ணகரத்தின் பெருமையையும் தலத்தின் சிறப்பையும் விளக்கும் பாடலாகும். திரு அரிமேய விண்ணகரத் தலத்தைப் பாடும் பாடலும் இதே அமைப்பைப் பெற்று ஒரே தன்மையவாய் சொற்கள் அமைந்துள்ளன.

வென்றிமிகு நரகனுர மதுவழிய விசிறும்
விறலாழித் தடக்கையன் விண்ணவர்கட்கு, அன்று
குன்றுகொடு குரைகடலைக் கடைந்தமுத மளிக்கும்
குருமணியென் னாரமுதம் குலவியுறை கோயில்

என்றுமிகு பெருஞ்செல்வத் தெழில் விளங்கு மறையும்
ஏழிசையும் கேள்விகளு மியன்றபெருங் குணத்தோர்
அன்றுலகம் படைத்தவனே யனையவர்கள் நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே

என்பது அப்பாடலாகும்.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த நான்காம்பத்தின் மூன்றாம் திருமொழி திருநாங்கூர்ச் செம்பொன்செய் கோயிலைப் பாடியது. இத்தலம் திருநாங்கூரின் நடுப்பகுதியில் உள்ளது என்பதை எட்டாவது பாடல் நீங்கலாக ஏனைய பாடல்தோறும் குறிப்பிடுதலைக் காணலாம். இத்தலம் திருநாங்கூரின் நடுப்பகுதியில் உள்ளதால் ஐந்து திருத்தலங்களைப் பேசிய திருமொழிகள் முன்னால் வைக்கப்பட்டு நடுவில் இத்தலம் பற்றிய திருமொழி அமைக்கப்பட்டு பின்னர் ஐந்து திருமொழிகள் அமைக்கப்பட்டது எனலாம்.

### சொல்லும் கருத்தும் ஒத்திருத்தல் :

திருவேங்கடமலை போல் சோழ நாட்டில் சில திருத்தலங்கள் உள. அவற்றுள் திருவெள்ளக் குளமும் ஒன்று. திருவேங்கடம் பற்றிப் பாடியுள்ள முதற் பத்தின் பத்தாம் திருமொழியும் திருவெள்ளக்குளம் பற்றிப் பாடியுள்ள நான்காம் பத்தின் ஏழாம் திருமொழியும் கலிவிருத்தம் என்னும் ஒரே யாப்பில் பாடப்பட்டிருப்பது மட்டுமல்லாமல் ஒரே விதமான சொல்லமைப்பும் கருத்தமைப்பும் உடையனவாக அமைந்துள்ளன. இரண்டு திருமொழிகளும் 'கண்ணார்கடல்' என்றே தொடங்குகின்றன. இரண்டிலும் முதல் பாடலின் ஈற்றடி 'அண்ணா அடியேன் இடரைக் களையாயே', என்று ஒத்தே அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக,

கண்ணார் கடல்போல் திருமேனி கரியாய்
நண்ணார்முனை வென்றிகொள் வார்மன்னு நாங்கூர்
திண்ணார் மதில்சூழ் திருவெள்ளக் குளத்துள்
அண்ணா, அடியே னிடரைக் களையாயே

என்று திருவெள்ளக்குளத் தலத்தைப் பாடிய பாடல் அமைந்திருக்க,

கண்ணார் கடல்சூ ழிலங்கைக் கிறைவன்றன்
திண்ணாராகம் பிளக்கச் சரஞ்செல வுய்த்தாய்
விண்ணோர் தொழும்வேங் கடமா மலைமேய
அண்ணா, அடியே னிடரைக் களையாயே

என்று திருவேங்கடத் தலத்தினைப் பாடிய பாடல் அமைந்துள்ளமையைக் காண்கிறோம்.

*சொல்லலங்காரம் :*

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்துள்ள ஏழாம் பத்தின் பத்தாம் திருமொழியிலுள்ள பாடல்கள் அனைத்தும் இரண்டாம் வேற்றுமை உருபைக் கொண்ட சொற்களை அமைத்தே பாடப்பட்டுள்ளன.

திருத்த னைத்திசை நான்முகன் தந்தையைத்
தேவ தேவனை மூவரில் முன்னிய
விருத்த னை, விளங் கும்சுடர்ச் சோதியை
விண்ணை மண்ணினைக் கண்ணுதல் கூடிய
அருத்த னை, அரி யைப்பரி கீறிய
அப்பனை அப்பி லாரழ லாய்நின்ற
கருத்த னை, களி வண்டறையும்பொழில்
கண்ண மங்கையுள் கண்டுகொண் டேனே

என்பது அத்தகைய பாடல்களில் ஒன்று.

*சாழல் பாடல் :*

சாழல் என்பது மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்றாகும் ''நல்லார் தம்தோள் வீசு நற்சாழல் .... வரிக்கூத்தின் குலம்''[9] என்னும் கருத்து இது வரிக்கூத்து வகைகளுள் ஒன்று என்பதைக் கூறுகிறது. இப்பாடல் வகை இரண்டு பெண்கள் பேசிக் கொண்டே விளையாடுவதாக அமைந்தது. ஒருத்தி இறைவனின் எளிமைக் குணத்தைப் பேசி அவனுக்கு இழிவு கூறுவதுபோல் முதலில் பாட, மற்றொருத்தி அவ்வாறு எளியவனாயிருப்பவனின் பெருமையை விளக்கி விடைகூறுவாள். இதை 'உரையாடல் பாட்டு' என்றும் 'வினாவிடைப்பாட்டு' என்றும் கூறுவர். இவ்வகையிலமைந்த பாடல்கள் ஒவ்வொன்றும் ஈற்றில் 'சாழலே' அல்லது 'சாழலோ' என்பதைக் கொண்டு முடியும். 'சாழலே' என்று முடியும் இவ்வகைப் பாடலை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் பெரிய திருமொழியில் மட்டுமே காணலாம். பதினோராம் பத்தின் ஐந்தாம் திருமொழி இப்பாடல் வகையைச் சேர்ந்தது. இயற்பழித்துரைத்தலும் இயற்பட மொழிதலுமாகிய சாழல் என்னும் இப்பாடல் வகை மாணிக்கவாசகர் பாடலிலும் இடம் பெறுவதால் இப்பாடல் வகை எட்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகலாம்.

*கோல்தும்பி :*

'கோல்தும்பி' என்பது வண்டைப் பார்த்துக் காதலி யொருத்தி கூறுவதாக அமையும் பாடல். காதலன் அணிந்திருக்கும் மாலையில் அமர்ந்து மீண்டும் வந்து

ஊதினால்போதும், அதனால் தான் ஆறுதல் பெற முடியும் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது. ஆழ்வார் காலத்தவராகக் கருதப்படும் மாணிக்கவாசகரும் 'கோத்தும்பி' என்று அமைத்துப் பாடுவதை நோக்குமிடத்து ஆழ்வார் வாழ்ந்த காலத்தில் இத்தகைய கவிதை பாடும் மரபு இருந்தது என்பதை அறிய முடிகிறது.

## பொங்கத்தம் பொங்கோ :

" 'பொங்கத்தம் பொங்கோ' என்பது எங்களுடைய தோல்வியையும் உங்களுடைய வெற்றியையும் தெரிவிக்குமாறு நாங்கள் ஒரு கூத்தாடுகிறோம் காணுங்கள் என்று சொல்லி ஆடுவது"[10] என்பர். மேலும் "தோற்றவர்கள் தோல்வியாலே பறையடிக்க ஆடுவதொரு கூத்துண்டு, அந்த சப்தாநுகாரம்"[11] என்ற கருத்தும் இங்குநோக்கத்தக்கதாம். 'பொங்கத்தம் பொங்கோ' என்னும் தொடர்மொழி திருமங்கையாழ்வார் தவிர வேறு எந்த ஆழ்வாராலும் பயன்படுத்தப்படவில்லை. பெரியதிருமொழியில் பத்தாம் பத்தின் இரண்டாம் திருமொழி இப்பாடல் வடிவத்தில் அமைந்துள்ளது. இலங்கைப் போர்க்களத்தில் இராவணன் இறந்துபட, மாண்டு போனவர்களில் மிகுந்திருந்த அரக்கர்களும் தங்கள் உயிருக்கு மன்றாடு நிலையில் திருமாலுடைய வெற்றிச் சிறப்பை எடுத்துரைத்துப் பேசுவதுபோல் பாடல்கள் அமைந்துள்ளன. இத்திருமொழியில் பாடல்களனைத்தும் 'தடம் பொங்கத் தம் பொங்கோ ' என்னும் முடிபைக் கொண்டே முடிகின்றன.

எஞ்ச லில்இலங் கைக்கிறை யெங்கோன்
    றன்னை முன்பணிந்து, எங்கள்கண் முகப்பே
நஞ்சு தானரக் கர்குடிக் கென்று
    நங்கை யையவன் தம்பியே சொன்னான்,
விஞ்சை வானவர் வேண்டிற்றே பட்டோம்
    வேரி வார்பொழில் மாமயி லன்ன,
அஞ்சி லோதியைக் கொண்டு நடமின்
    அஞ்சி னோம்தடம் பொங்கத்தம் பொங்கோ

என்பது போல் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

## குழமணி தூரம் :

இது கூத்து வகையுள் ஒன்று. போரில் தோற்றவர்கள் தங்கள் தோல்விக்கு ஈடாக ஆடும் கூத்து 'குழமணி தூரம்' எனப் பெயர் கொண்டதாகும். இது தலைகீழாக ஆடப்படும் கூத்து. அவ்வகையில் கூத்தாடுகின்ற அரக்கர்கள் கூறும் பாடல்களாக, பத்தாம் பத்தின் மூன்றாவது திருமொழி அமைந்துள்ளது. இதில் பாடல்கள் அனைத்தும் 'குழமணி தூரம்' என்னும் முடிபைக் கொண்டே முடிகின்றன.

### ஆற்றுப்படை வடிவம் :

தாம் பெற்ற பயனைப் பிறரும் பெற வேண்டும் என்னும் நோக்கில் அவர்களை வழிப்படுத்துவது ஆற்றுப்படையாகும். புரவலனாகிய இறைவனிடம் பரிசிலாகிய அருளை வேண்டியணுகும் இரவலனாகிய பக்தனை பெரிய திரு மொழியில் காண்கிறோம். புரவலன்பால் சென்றால் வறுமை அகலும் என்பதுபோல் இறைவனைச் சார்ந்தால் இருள் நீங்கி அருள் கிடைக்கும் என்று நெஞ்சை ஆற்றுப்படுத்தும் வகையிலும் பாடல்கள் அமைந்துள்ளன. இது முதல் பத்தின் இரண்டு, ஐந்து, எட்டு ; மூன்றாம் பத்தின் எட்டு, ஒன்பது, பத்து; ஐந்தாம்பத்தின் பத்து; ஆறாம் பத்தின் நான்கு, ஒன்பது; ஒன்பதாம் பத்தின் எட்டு ஆகிய பத்துத் திருமொழிகளில் காணப்படுகிறது.

ஆண்டவனிடம் அடியவரை வழிப்படுத்தலும் மூன்றாம் பத்தின் இரண்டு, நான்கு; ஆறாம் பத்தின் ஆறு ஆகிய மூன்று திருமொழிகளில் அமைந்துள்ளது. மனிதனைப் பாடாது இறைவனைப் பாடவேண்டி புலவர்களை ஆற்றுப்படுத்துதல் முதல் பத்தின் முதல் திருமொழியிலுள்ள ஏழாவது பாடலில் காணப்படுகிறது. இவ்வாறு ஆற்றுப்படை வடிவமும் பெரிய திருமொழியில் அமைந்துள்ளது காணலாம். இறைவனின் திருக்கலியாண குணங்களில் ஈடுபட்டு இவை பாடப் பட்டதால் பாடாண் பாட்டுக்களாகவும் இறைவனின் சிறப்புக்களைப் புகழ்வதால் கடவுள் வாழ்த்தாகவும் நாயகன் நாயகி மனநிலையைப் புலப்படுத்தலால் அகப் பாடலாகவும் பெரியதிருமொழிப் பாடல்களுள் சில அமைகின்றன என்று கூறலாம்.

### அந்தாதித்தொடை அமைப்பு :

முதல் பாடலின் இறுதிச் சீரோ, இறுதிச் சொல்லோ, இறுதி அடியோ தொடர்ந்து வரும் அடுத்த பாடலின் முதற் சீராக, முதல் சொல்லாக, முதல் அடியாக வருவது அந்தாதித் தொடை. முதல் பாடலின் இறுதிச் சொல் அடுத்த பாடலின் முதல் சொல்லாக வரும் அந்தாதி அமைப்பு பெரிய திருமொழியில் பதினோராவது பத்தின் மூன்றாம் திருமொழிப் பாடல்களில் காணப்படுகிறது.

### வரிசை உத்தி :

பாடல்களில் சொற்களை அமைக்குமிடத்து அவற்றிற்கு அடைமொழியாக எண்களை வரிசையாக அமைத்துப் பாடுவது 'எண்ணல் உத்தி' அல்லது 'வரிசை உத்தி' எனப்படும். இங்கு, வைணவ சமயக் கருத்துக்களைக் கூறுமிடத்தெல்லாம் முத்தீ, நால்வேதம், ஐவேள்வி, ஆறங்கம், ஏழிசை, எண்திக்கு என்று கூறும் முறை

காணப்படுகிறது. பதின்மூன்று பாடல்கள் இவ்வமைப்பில் விளங்குவன. இவற்றுள் மூன்றாம் பத்திலுள்ள நான்காம் திருமொழியின் முதல் பாடல் ஒன்றிலிருந்து ஏழு வரையிலான எண்களை அமைத்துப் பாடப்பட்டதாக உள்ளது.

ஒருகுறளா யிருநிலம்மூ வடிமண் வேண்டி,
உலகனைத்து மீரடியா லொடுக்கி, ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர், தக்ககீர்த்தி
அருமறையின் திரள்நான்கும் வேள்வி யைந்தும்
அங்கங்கள் அவையாறு மிசைக ளேழும்
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரம் சேர்மி னீரே

என்பது அப்பாடல். பாடல்களில் எண்களை வைத்து நயம்படப்பாடும் முறைக்கு 'எண்ணு வண்ணம்' என்னும் பெயரும் உண்டு. எண்களின் பயிற்சியால் அமையும் அழகு 'எண்ணு வண்ணம்'. இம்முறையில் பாடப்பெறும் பாடலின் கருத்து ஒரே பொருளை மையமாக உடையதாகப் பெரும்பாலும் இருக்கும்.

## திருமொழித் தலைப்பு :

ஒவ்வொரு திருமொழியும் அதன் முதற் பாடலிலுள்ள முதற்சீர் அல்லது முதலிருசீர்களால் தலைப்பிடப்பட்டுள்ளது.

## அணிநலன் :

உவமை, இல்பொருளுவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சி, முரண், மடக்கு ஆகிய அணிகள் அமைந்துள்ளன.

## உவமைப்பொருள்கள் :

போல, ஒப்ப, அன்ன என்னும் உருபுகள் வெளிப்படையாகவும் மறைந்தும் அமைந்து பாடலுக்கு அழகூட்டுகின்றன. இறைவனுடைய திருவடிகளின் மென்மைத் தன்மைக்கு தாமரையும், தளிரும்; நெடிதுயர்ந்த உருவத்திற்கு வரையும்; மேனியின் கரிய நிறத்துக்கு மேகம், கடல், குவளை ஆகியவற்றின் நிறமும்; கண்களின் சிவந்த நிறத்துக்கு தாமரை மலரும் ; சிவந்த வாய்க்கு செந்தாமரையின் மென்மை யும், நிறமும், பவளமும் உவமைகளாக ஆளப்பட்டுள்ளன. பெண்களின் நெற்றிக்கு பிறையும்; கண்களுக்கு குவளையும், கண்களின் வடிவத்திற்கு அம்பும்,

வேலும்; மருண்டபார்வைக்கு மான்நோக்கும்; வாய்க்கு கொவ்வைக்கனியும்; பேச்சின் இனிமைக்கு தேனும்; தோளுக்கு வேயும்; இடைக்கு மின்னலும்; அடிகளின் மென்மைக்குப் பஞ்சும்; நடைக்கு அன்னமும் உவமிக்கப்பட்டுள்ளன.

## உவமைத் தொடர்கள் :

பாடல்தோறும் உவமைத் தொடர்களை அமைத்துப் பிறவித்துன்பம் கொடியது என்பதை விளக்கும் பகுதியாக பதினொன்றாம் பத்தின் எட்டாவது திருமொழியில் ஆறுபாடல்கள் அமைந்துள்ளன.

ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்
ஒழிந்தன கழிந்தன கழிந்தவந் நாள்கள்

தாய்நி னைந்தகன் றேயொக்க வென்னையும்
தன்னை யேநினைக் கச்செய்து

என்பன போன்று ஆழ்வாரின் உலகியலுணர்வுகளையும் இறையனுபவத்தையும் காட்டுகின்ற பல உவமைத் தொடர்களும் இடம்பெற்றுள்ளன.

## இல்பொருளுவமை :

உலகத்தில் இல்லாத-இருக்க முடியாத பொருளை உவமையாகக் கூறுதல் 'இல்பொருளுவமை' எனப்படும். பொன்னாலாகிய மலை கிடையாது. கற்பகத்தரு இந்நிலவுலகில் இல்லை. இவை போன்றவற்றை உவமையாகக் கூறியிருத்தலால் இல்பொருளுவமையணி நூலில் இடம் பெற்றிருப்பதைக் காண முடிகிறது. இறைவனை வருணிக்கும் போது சில விடங்களில் இவ்வணி இடம் பெறுகிறது.

போரானைக் கொம்பொசித்த போரேற்றினை
புணர்மருத மிறநடந்த பொற்குன்றினை
காரானை யிடர்கடிந்த கற்பகத்தை

என்னும் பாடலில் இதைக் காணலாம்.

## உருவகம் :

பரம்பொருளாகிய இறைவன் போரேறு, கருமுகில், கருங்களிறு, நந்தா விளக்கு, கருமணி, மரகதம், பவளத்திரள், நாண்மதி, வெஞ்சுடர் என்பனவாகிய கண்ணால் கண்டு மகிழக்கூடிய பொருள்களாலும் கனி, அமுதம், தீங்கரும்பு, தேன்,பால், கரும்பின்சாறு, நெய், அக்காரக்கனி என்பனவாகிய சுவைத்து அனுபவிக்கக்கூடிய பொருள்களாலும் உருவகிக்கப்பட்டுள்ளான்.

ஏழாம் பத்தின் பத்தாம் திருமொழியிலுள்ள எட்டாவது பாடலில் தீயவர்க்கு நஞ்சாக இருப்பவன் என்னும் பொருளில் 'நஞ்சினை' என்று உருவகிக்கப்படுகிறான். காதால் கேட்டு மகிழக்கூடிய 'பண்' என்னும் சொல் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பண்ணி னைப்பண்ணில் நின்றதோர் பான்மையைப்
பாலுள் நெய்யினை மாலுரு வாய்நின்ற
விண்ணி னை, விளங் கும்சுடர்ச் சோதியை
வேள்வி யைவிளக் கினொளி தன்னை,
மண்ணி னைமலை யையலை நீரினை
மாலை மாமதி யைமறை யோர்தங்கள்
கண்ணி னைகண்க ளாரள வும்நின்று
கண்ண மங்கையுள் கண்டுகொண் டேனே

என்னும் பாடல், முழுவதும் உருவகச் சொற்களையே கொண்டுள்ளது. 'எய்ப்பினில் வைப்பு '[12] என் னும் தொடர் ஓரிடத்தில் உருவகமாகப் பயன் படுத்தப்பட்டுள்ளது.

இறைவனை வருணிக்குமிடத்து கடல்நீர் ஆடையாகவும் பூமிப்பரப்பு அவன் திருவடியாகவும், புவனம் திருமேனியாகவும், திசைகளெட்டும் திருத் தோள்களாகவும், அண்டம் திருமுடியாகவும் உருவகம் செய்யப்பட்டுள்ளது.[13]

## தற்குறிப்பேற்றம் :

இயல்பாக இருக்கக்கூடிய ஒன்றன் மீது புலவன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்றம். திருமால் உறையும் திருத்தலங்களின் இயற்கைச் சூழல் வருணிக்கப்படும் இடங்களில் தற்குறிப்பேற்ற அணி பயன்படுத்தப்பட்டுள்ளது.

தாமரை மலரில் அன்னம் அமர்ந்துள்ளதையும் நெற்கதிர்கள் அசைந்து கொண்டிருப்பதையும் வருணிக்கும்போது தாமரை மலராகிய படுக்கையில் அன்னம் பெடை யோடிருக்க செந்நெற்கதிர்களாகிய பெண்டிர் சாமரை வீசுவ தாகக் கூறப்பட்டுள்ளது.[14] சோலையில் குயில்கள் கூவுவது இறைவனை நோக்கி 'எங்கள் துன்பத்தைப் போக்கு' என்று கூறுவதாக தற்குறிப்பேற்றமாகக் கூறப்பட்டுள்ளதனைக் காணலாம்.[15]

மூன்றாம் பத்தின் நான்காம் திருமொழியிலுள்ள மூன்று, ஐந்து, எட்டு; பத்தாம் திருமொழியிலுள்ள ஒன்பது; நான்காம் பத்தின் இரண்டாம் திருமொழியிலுள்ள ஐந்து; மூன்றாம் திருமொழியிலுள்ள ஆறு; ஐந்தாம் பத்தின்

முதல் திருமொழியிலுள்ள ஆறு; இரண்டாம் திருமொழியிலுள்ள ஒன்பது; ஆறாம் பத்தின் ஏழாம் திருமொழியிலுள்ள இரண்டு, மூன்று, நான்கு, ஆறு; ஏழாம் பத்தின் எட்டாம் திருமொழியிலுள்ள இரண்டு; ஒன்பதாம் பத்தின் முதல் திருமொழியிலுள்ள ஐந்து ; இரண்டாம் திருமொழியிலுள்ள ஒன்பது ஆகிய பாடல்கள் தற்குறிப்பேற்ற அணி பொருந்தப் பெற்றனவாக உள்ளன.

### உயர்வு நவிற்சி :

இயல்பாக விளங்குகின்ற ஒன்றை நம்பவொண்ணா கற்பனையாக மிகுதிப்பட உரைப்பது உயர்வு நவிற்சியாகும். கமுக மரத்தின் பசும்பாளை, காய் இவையெல்லாம் முத்தாகவும் பவளமாகவும் மரகதமாகவும் தோற்றமளிப்பதாகக் கூறப்பட்டுள்ளது.[16] மாளிகையின் உச்சியில் வைக்கப்பட்டிருக்கும் சூலம் மேகத்தைத் கிழிப்பதால் முத்துக்கள் சிதறுகின்றன[17] என்று கூறுமிடத்து உயர்வு நவிற்சி அணி இடம் பெறுகிறது. இதேபோன்று இரண்டாம் பத்தின் பத்தாம் திரு மொழியிலுள்ள மூன்று; மூன்றாம் பத்தின் பத்தாம் திருமொழியிலுள்ள ஆறு; நான்காம் பத்தின் நான்காம் திருமொழியிலுள்ள நான்கு; ஏழாம் பத்தின் எட்டாம் திருமொழியிலுள்ள எட்டு ஆகிய பாடல்களும் உயர்வு நவிற்சியணி பெற்றுள்ளன.

### முரண் அணி :

ஒன்றோடொன்று முரண்பட்ட பொருள்களைக் குறிக்கும் சொற்களை அருகருகேயோ ஒரே தொடரிலேயோ அமைத்து அழகு செய்வது முரண் அணி. ஐம்பெரும் பூதங்களைப் பற்றிக் கூறுமிடங்களிலெல்லாம் ஒன்றற்கொன்று முரணாக உள்ள நீர், நெருப்பு என்னும் சொற்கள் அமைந்துள்ளன. இறைவனின் நிறத்தைக் குறிப்பிடுமிடங்களில் வெள்ளியான்-கரியான் என்னும் சொற்கள் இடம் பெற்றுள்ளன. இரவு-பகல், அகடு-முகடு, சுடர்-இருள், பிறந்து-இறந்து, நீண்டான்-குறள், இறப்பு-எதிர், பாவம்-அறம், இன்பம்-துன்பம், சாதல்-பிறத்தல், சிறுமை-பெருமை, இம்மை-மறுமை, காலை-மாலை, அந்தமாய்-ஆதியாய், பொய்-மெய் ஆகிய முரண்சொற்கள் அமைந்து கிடக்கின்றன.

### மடக்கணி :

பாடலின் ஓரிடத்துக் குறிப்பிட்ட சொல்லோ, சொற்றொடரோ, அன்றி ஒன்றுக்கும் மேற்பட்ட சொற்களோ, அடியோ மடங்கி வந்து பாடலுக்கு அழகு தருமாயின் அது மடக்கணியாகும். ஒருசொல் அல்லது சொற்களுக்குப் பின்னர் வேறு பிற சொற்கள் இடையில் வர, மீண்டும் மேற்குறித்த அதே சொல்லோ

அல்லது சொற்களோ வந்து நிற்குமாயின் அது இடையிட்டு வரும் மடக்கு எனப்படும்.

பத்தாம் பத்தின் ஐந்தாம் திருமொழி, பத்தாம் திருமொழிப் பாடல்கள் இடையிட்டு வரும் மடக்கணியின்பாற்படும்.

பெற்றார் தளைகழலப் பேர்ந்தங் கயலிடத்து
உற்றா ரொருவரு மின்றி யுலகினில்
மற்றாரு மஞ்சப்பேய் வஞ்சப்பெண் நஞ்சுண்ட
கற்றாயனே, கொட்டாய் சப்பாணி
கார்வண்ணனே! கொட்டாய் சப்பாணி

திருத்தாய் செம்போத்தே!
திருமா மகள் தன்கணவன்
மருத்தார் தொல்புகழ் மாதவனைவர
திருத்தாய், செம்போத்தே

எனவரும் பாடல்களைச் சான்றாகக் கொள்ளலாம். இவற்றில் 'கொட்டாய் சப்பாணி' எனும் தொடர் நான்காமடியில் இடையிட்டு வந்த மடக்காகவும் 'திருத்தாய் செம்போத்தே' எனும் தொடர் முதலிரண்டு அடிகளிலும் இடையிட்டு வந்த மடக்காகவும் காணப்படுகின்றது.

தாம்மோர் உருட்டித் தயிர்நெய் விழுங்கிட்டு
தாமோ தவழ்வரென் றாய்ச்சியர் தாம்பினால்
தாமோ தரக்கையா லார்க்கத் தழும்பிருந்த
தாமோ தரா ! கொட்டாய் சப்பாணி
தாமரைக் கண்ணனே ! சப்பாணி

என்னும் பாடலில் நான்காமடியில் முதற்சொல் மடங்கி வந்து சொல் மடக்காகவும் இடையிட்டு வந்த மடக்காகவும் அமைந்திருக்கக் காண்கிறோம்.

## சான்றெண் விளக்கம்

1. காண்க பிற்சேர்க்கை - *1*
2. காண்க பிற்சேர்க்கை - *1*
3. காண்க பிற்சேர்க்கை - *2*
4. வீரராகவாச்சாரியார் (உ.ஆ) - *பெரிய திருமொழி, ப.640*

5. முத்துவெங்கடேசன் — *திருமங்கை மன்னன் போற்றிய திரு மெய்யம், தினமணி நாளிதழ், 21-10-1987, ப.6.*
6. P. Sambamoorthy — *A Dictionary of South Indian Music and Musicians, Vol. I, P. 129.*
7. கா.ர. கோவிந்தராச முதலியார் — *ஆழ்வார்கள் வரலாறு 1 ப.75.*
8. ப. அருணாசலம் — *பக்தி இலக்கியம், ப. 59.*
9. உ.வே. சாமிநாதய்யர் (உ.ஆ) — சிலப்பதிகாரம் மூலமும் அடியார்க்கு நல்லார் உரையும், ப. 89.
10. க.ரா. கோவிந்தராச முதலியர் (உ.ஆ) — *மு. நூ, ப. 162.*
11. அண்ணங்கராச்சாரியார் (உ.ஆ) — *பெரிய திருமொழி, ப.104.*
12. மே.நூ. — *7.10:4.*
13. மே.நூ. — *6.6:3.*

பவ்வநீ ருடையாடை யாகச் சுற்றிப்
 பாரகலம் திருவடியாப் பவனம் மெய்யா
சென்னிமா திரமெட்டும் தோளா அண்டம்
 திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்
கவ்வைமா களிறுந்தி வெண்ணி யேற்ற
 கழல்மன்னர் மணிமுடிமேல் காக மேற
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
 திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.

14. மே.நூ. — *3.1:7*
15. மே.நூ. — *4.10:7*
16. மே.நூ. — *2.10:7*
17. மே.நூ. — *3.9:4*



# 3. இயற்கை வருணனை

கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பே இயற்கை அழகாகும். இவ்வியற்கை அழகின் இனிமையில் மனத்தைப் பறிகொடுத்து அதை வருணிக்காத புலவர்களே இல்லை எனலாம். இயற்கையன்னை வழங்கும் இனிய காட்சிகள் கண்களுக்கும் மனத்துக்கும் இணையற்ற இன்பம் பயக்கின்றன. கதிரவனின் ஒளி, நிலவின் குளிர்ச்சி, அலைவீசி ஓடி வரும் ஆறு, இழுமென இழிதரும் அருவி, அடர்ந்த காடு, மலர்கள் பூத்துக் குலுங்கும் சோலை, பண்பாடித் திரியும் தும்பி, இன்னிசைக் குரலெழுப்பும் குயில், தோகை விரித்தாடும் மயில் ஆகியவற்றில் இயற்கையின் அழகைக் காணலாம். இவற்றை கவிஞர்கள் தம் புலமை நலத்தால் இலக்கிய உத்திகளாம் வருணனை, கற்பனை, உணர்ச்சி, ஓசை நயம், சொல்லாட்சி, அணி போல் வனவாய மெருகேற்றி நயம்படப் பாடுவதில் வல்லவர்களாக விளங்கி வந்திருக்கின்றனர். தாம் பெற்ற உணர்ச்சியை பிறரும் பெறுவதற்காக அவர்கள் இந்த உத்திகளைக் கையாளுகின்றனர். இவ்வுத்திகள் அனைத்தும் ஒன்றுடன் ஒன்று இணைந்தும் இயைந்தும் விளங்கினால் தான் கவிதை நடைசிறக்கும்.

இயற்கையோடு இயைந்து வாழ்க்கை நடத்தும் தமிழரிடையே அதன் தன்மை பற்றி பல்வேறு கருத்துக்கள் உள்ளன. "இயற்கையியல், விருந்தியல் ஆகிய இரண்டும் சங்க இலக்கியத்தின் பண்புகளாக உள்ளன. வானோங்கு மலை, பொங்கு வீழருவி, நிரைத்தொளிரும் நீர்நிலை, தெளிந்தோடும் ஆறு ஆகியவற்றை எழில் ததும்பும் ஓவியங்களாகத் தீட்டிக் காட்டும் கவிஞர்கள் சங்க காலத்தில் உண்டு. பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் இயற்கையைத் தனியொரு பொருளாகக் கருதிப் பாடினாரல்லர். இவ்வியற்கைக் காட்சியே பாடலின் நாடகப் பண்பினுக்கு உரிய அரங்காக அமைகின்றது"[1] என்பது அவற்றுள் ஒன்று. மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுபாடுகளை நுனித்து அறிவதற்கு உரிய கருவியாக இயற்கையை பலவாறாகப் பயன்படுத்தி வந்துள்ளனர் தமிழ்ச் சான்றோர். அவ்வாறு அவர்கள் பயன்படுத்தியுள்ளமையை சங்ககாலந்தொட்டு இன்றைய நாள் வரை தோன்றிய இலக்கியங்கள் வாயிலாக நன்கு அறியலாம். எண்ணிப் பார்ப்பின் மனித நாகரிகம் தோன்றிய காலந்தொட்டு இயற்கை, மனிதனுடைய வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்தே வந்திருப்பதைக் காணமுடியும்.

முதன் முதலில் இயற்கையைக் கண்டு வியந்த மனிதன் காலப்போக்கில் இயற்கைப் பின்னணியோடு தன் செயல்களைத் தொடர்புறுத்தி அதை

அனுபவித்தான். பின்னர் இயற்கையிலுள்ள உயிரினங்களிடம் பகுத்தறிவுள்ள மனிதனின் பண்புகளை பொருத்திப் பார்த்து மகிழ்ந்தான். இயற்கையில் இறையொளியையே கண்டு மகிழ்ந்து போற்றினான். அந்நிலையில் இயற்கை சிறந்த உவமையாகவும் அடைமொழித் தொடர்களாகவும், வருணனையாகவும் அமைந்து அவனுக்கு கை கொடுத்தது. அகப்பொருள் பற்றிப் புகல வந்த தொல்காப்பியனார் அப்பொருள் பற்றி விளக்கும்போது

முதல்கரு உரிப் பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறை சிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை

என்று முதல், கரு, உரி என்னும் பிரிவுகள் உடையதாகப் பாகுபாடு செய்கிறார். இயற்கையின் பெருங்கூறுகளாக' விளங்கும் நிலமும் பொழுதும் அவர் கூறும் முதற்பொருளில் அடங்குகின்றன. மேலும் கருப்பொருள் விளக்கமாக,

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவுங் கருவென மொழிப

என்று கூறும்போது அவற்றிலும் மா, மரம், புள், பூ, நீர் ஆகிய இயற்கைப் பகுதிகளைச் சுட்டுவது காணலாம்.

## இயற்கை-பொருள் விளக்கம்:

'இயற்கை' எனும் தமிழ்ச் சொல்லினை 'இயல்', 'கை' என்னும் இரண்டு சொற்களாக நாம் பகுக்கலாம். 'இயல்' என்னும் பகுதிக்கு ஒழுங்கு, குணம், கூறுபாடு, தன்மை, பொருத்தம், செலவு, விதி, நட என்னும் பல்வகைப்பொருள்கள் உள்ளன. கை என்னும் சொல் அறுவகைப் பொருளைக் குறித்து நிற்பதை

ஒப்பனை படையுறுப் பொழுக்கஞ் சிறுமை
கரமும் பின் பிறந்தாளுங் கையே

என்று பிங்கல நிகண்டு எடுத்துக் காட்டுகிறது. இவற்றால் ஒழுங்குறப் பொருந்திய காட்சி மற்றும் செயல்களை 'இயற்கை' என்னும் சொல் சுட்டுவதும் இயல்பான தன் தன்மையில் மாறுபடாது நிற்பது இயற்கை என்பதும் அறியலாகும். அதனால் தான் தொல்காப்பியரும் இயற்கைப் பொருளைப் பற்றி கூறுமிடத்து இத்தன்மையது என்று வரையறைப் படுத்திக் கூற வேண்டும் என்பதை

இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்

என்னும் நூற்பாவால் எடுத்துக் காட்டுகிறார்.

## வருணனை - பொருள் விளக்கம்:

வருணனை அல்லது வர்ணனை என்னும் சொல்லுக்கு ஒப்பனை புனைவுரை, உவமேயம், வன்னிப்பு, தோத்திரம், கற்பனைச் சித்தரிப்பு என அகராதிகள் பொருள் இயம்புகின்றன. வருணனை என்பது தாம் சொல்ல வந்த செய்திகளை கற்பனை கலந்த படிமங்களாக்கி கலைத் தன்மையோடு சொல்லுவதாகும்.

## கற்பனையும் வருணனையும் :

கற்பனை எனப்படுவது கண்களால் கண்டு மகிழ்ந்தவற்றை உள்ளத்தால் உணர்ந்தவற்றோடு கூட்டிப் புதியன படைத்தல் ஆகும். படைப்பிலக்கியங்களுக்கு போலச் செய்தலே அடிப்படையாயினும் அது பொலிவுடன் அமையுமாறு உதவுவது கற்பனையே ஆகும். கவிஞன் தான் உணர்ந்த உணர்ச்சியையோ பெற்ற அனுபவத்தையோ நாமும் முழுமையாகவும் தெளிவாகவும் உணர்ந்தோ அனுபவித்தோ இன்புறுமாறு படைக்கும் கலைத்திறனே கற்பனை எனலாம். ''கற்பனை, இயைபுக் கற்பனை, படைப்புக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என மூன்றாகப் பகுக்கப்படுகிறது''[2] என்பர். வருணனை என்பது கற்பனை அவ்வளவாகக் கலக்காமல் இயல்பு நிலையை படம் பிடித்துக் காட்டுவதாகும். இதனை இலக்கண நூலார் இயல்பு நவிற்சி என்பர். உவமை, உருவகம், தற்குறிப் பேற்றம் முதலிய அணிகளும் வருணனைக்கு உரமூட்டும் எனலாம். பெருங் காப்பியத்திற்கு இலக்கணம் கூறிய ஆசிரியர்கள் கற்பனையையும் காப்பிய உறுப்புக்களுள் ஒன்றாகக் கூறியுள்ளனர். 'மலை, கடல், நாடு, வளநகர், பருவம், இருசுடர்த் தோற்றம் என்று இனையன புனைந்து கூற வேண்டும்' என்று தண்டியலங்காரம் கூறுகின்றது.

## பக்திப் பாடல்களில் இயற்கை வருணனை:

சங்க காலம் இயற்கையின் நடுவிலும் இறைவனைக் கண்டு இன்புற்ற காலம். அக்காலத்து வாழ்ந்த புலவர்களான நக்கீரர், கபிலர், பரணர் போன்றோர் இயற்கையை உடலாகக் கொண்ட இறைவன் புகழைப் பாடினர். இடைக் காலத்திலும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனை தனித்தும் இயற்கையின் கண்ணும் கண்டு போற்றினர். அவர்கள் தலங்கள் தோறும் சென்று இறைவனை

உள்ளமுருகிப் பணிந்ததோடன்றி ஆங்காங்குக் கண்ட இயற்கை வளங்களையும் பாடி மகிழ்ந்தனர். இயற்கையில் இறைவனைக் கண்டு மகிழ்ச்சிக் கூத்தாடினர். உலகம் முழுவதிலுமுள்ள கவிஞர் அனைவரும் இத்தகையோரே. ''ஆங்கிலக் கவிஞர் வேர்ட்சுவொர்த்து இயற்கைக் கடவுள் நெறியில் தோய்ந்த பெருங்கவிஞர். அவருடைய அரும்பாடல்கள் அவரது இயற்கை வழிபாட்டை - இயற்கையில் கலந்து அவர் எய்திய இன்ப அனுபவத்தை எடுத்துரைப்பன''[3] என்று கூறுவர். அறிவு முதிர்ந்து அருள் பெருகி அன்பு நிறைந்து, எதற்கும் கலங்காத உரம் வளர்ந்து, உண்மையொளி வீசும் ஒப்பற்றோராகிய தெய்வப் புலவர்கள் இறைவனின் பெருமைகளையும் இறை தத்துவத்தையும் இயற்கையை வருணிப்பதன் வாயிலாகப் புலப்படுத்தி பக்திப் பாடல்களைப் பாடினர். அவர் தம் பாடல்களில் குறிப்புப் பொருள் தரும் உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் இயற்கை வருணனையே அடிப்படையாக அமைந்தது. இலக்கியங்களில் காணப்படும் வருணனைகள் பொது வருணனை என்றும் சிறப்பு வருணனை என்றும் இரு பிரிவாகக் கூறப்படும். நாடு, நகரம், ஆறு, காலம் முதலியவைகளைப் பற்றிய வருணனை பொது வருணனையில் அடங்கும். சுவையுடைய செய்திகளைச் சொல்லுமிடத்து உள்ளுறை உவமம் போல் நின்று கூறப்படும் செய்திகளுக்குச் சுவையூட்டுவன சிறப்பு வருணனையில் அடங்கும். இவ்வருணனைகளே இலக்கியங்களுக்குச் சிறப்புச் செய்கின்றன. வருணனைகள் இல்லாத இலக்கியம் சுவையற்ற உணவு போலாகும்.

பக்தி இலக்கியங்களில் வருணனை அமைந்துள்ள பாங்கு கற்போரைக்களிபேருவகையில் ஆழ்த்தி இன்சுவை விருந்தளிப்பதாக அமைந்திருக்கக் காணலாம். எங்குமாய் யாவுமாய் விளங்கும் இறைவனைப் பாடியும் பரவியும் வழிபட்ட சமயச் சான்றோர்கள் இயற்கையில் இடைவிடாது நடை பெற்றுக் கொண்டிருக்கும் அழகிய அன்புக் காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் நோக்கி மனமாரப் பாடி மகிழ்ந்தனர். மலையின் மாட்சி, அருவியின் வீழ்ச்சி, வண்டுகளின் இன்னிசைப்பண்கள், குயிலின் பாட்டு, மயிலின் ஆட்டம், ஆற்று நீர் ஓட்டம், முகிலின் முழக்கம், மலர்களின் மலர்ச்சி, மரம், செடி, கொடிகளின் அழகுக் கோலங்கள், அலைகடல் ஓசை, திரை இழுத்து வரும் அகிற்கட்டை, சந்தனம், முத்து, பவளம், இரத்தினம், மீன்களின் துள்ளல் முதலியவற்றை இறைமையுணர்வுடன் இணைத்துப் பாடிய பெருமை சமயச் சான்றோர்களுக்கு உண்டு. அவர்கள் இயற்றிய பக்திப் பாடல்களில் திருத்தலங்களின் வருணனையோ, தலச்சிறப்போ வரும் இடங்களிலெல்லாம் இயற்கையின் எழிலோவியங்களைக் காணுகின்றோம். ''பாட்டு என்பது, அனுபவத்தையே

சொற்களாக மாற்றித்தரும் மொழிபெயர்ப்பாகும்''[4] என்றும் ''பாட்டில் உள்ள சொற்கள் குறிப்பிட்ட ஒரு பொருளை விளக்கவில்லை. அந்தப் பொருளையே படிப்பவர் மனத்தில் படைத்து விடுகின்றன''[5] என்றும் ஆபர் குரோம்பி பாடல்களுக்குக் கூறியுள்ள கூற்று பக்திப் பாடல்களுக்குப் பொருந்தியுள்ளமையை அறியலாம். எழில் ததும்பும் தலங்களுக்குச் சென்று அவ்வெழிலில் மனதைப் பறிகொடுத்த சமயச் சான்றோர்கள் குறிஞ்சி நிலத்தையும், முல்லை நிலத்தையும், மருத நிலத்தையும், நெய்தல் நிலத்தையும் வருணித்திருக்கும் பாங்கு, அவர்தம் பக்திப் பாடல்களைப் படிப்பவர் உள்ளத்தில், அப்பொருள்களை நிலைத்து நிற்கச் செய்து விடுகின்றது. தேவாரம் பாடிய மூவருள் ஒருவராகிய திருநாவுக்கரசர்

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே

என்று இறைவனுடைய திருவடிகளை இயற்கையோடு இணைத்துப் பாடி வணங்குவதும் இயற்கை வருணனை சிறக்க் பாவை பாடிய ஆண்டாள்

ஆழி மழைக்கண்ணா ! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து
பாழிஅந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்[7]

என்று கூறி வணங்குவதும் இங்கு எண்ணத்தக்கன. மாணிக்கவாசகர் இயற்கையின் அனைத்துக் கூறுகளிலும் சக்தியும் சிவமும் இணைந்து நிற்பதைக் கண்டார். சேக்கிழாரின் பெரியபுராணத்துள் காணப்படும்

காலெல்லாந் தகட்டுவரால் கரும்பெல்லாங் கண்பொழிதேன்
பாலெல்லாங் கதிர்ச்சாலி பரப்பெல்லாங் குலைக்கமுகு
சாலெல்லாம் தரளநிரை தடமெல்லாம் செங்கழுநீர்
மேலெல்லாம் அகிற்றூ பம் விருந்தெல்லாம் திருந்துமனை[8]

என்பது போன்ற பாடல்கள் ஆசிரியரின் பாட்டுவளத்தைப் பறை சாற்றுவனவாக, இயற்கை இன்பத்துக்குச் சுவை கூட்டுவனவாக உள்ளன.

## பெரிய திருமொழியில் அமையும் வருணனைகள்:

இலக்கியத்திற்கு அழகு தரும் உத்திகள் அனைத்தையும் திருமங்கையாழ்வார் தம்முடைய பெரிய திருமொழியில் புகுத்தியிருப்பது இலக்கிய அழகை மேம்படுத்தத் துணை செய்கிறது. இலக்கிய உத்தியில் முதலிடம் பெறும் இயற்கை வருணனை பெரிய திருமொழியில் சிறப்புறக் காணப் பெறுகின்றது. திருமங்கையாழ்வார் கண்டு அனுவித்த திருத்தலங்களின் வருணனை கற்பனை கலந்து இலக்கிய இன்பத்தை வாரி வழங்குவதாக அமைந்துள்ளது. சோலையின் அழகு, வயல்களின் வளம், பொய்கைகளின் பொலிவு, மீன்களின் துள்ளல், நெற்கதிர்களின் அசைவு, வண்டுகளின் இன்னொலி, குயில்களின் குரல், மயில்களின் மனமகிழ் ஆட்டம், அன்னத்தின் நடை, கரும்பு வளம், தென்னை, மா, பலா, வாழை, அசோகு, கொன்றை, புன்னை, வேங்கை, கமுகு போன்ற மரங்களின் உயர்ந்து வளர்ந்த தோற்றம், மேகக்கூட்டங்களின் முழக்கம், யானையின் பிளிறல், சிங்கத்தின் குரல், தாமரை, முல்லை, ஆம்பல், குவளை, புன்னை, சண்பகம், தாழை, மல்லிகை போன்ற மலர்களின் அழகு, மலையினின்றிழிதரும் அருவியின் அழகு, ஆறுகள் இழுத்து வரும் அகில், சந்தனம், பொன், முத்து, மரகதம் போன்ற பொருள்கள், நண்டுகள், சங்குக் கூட்டங்கள் ஆகியவற்றை வருணித்திருக்கும் பாங்கு ஆழ்வாரின் அழகுணர்ச்சியையும் இயற்கையை இறையுணர்வோடு இணைத்து மகிழும் மகிழ்ச்சியையும் புலப்படுத்துகின்றது. ஒவ்வொரு தலத்தையும் குறிக்கும்போது அவற்றின் சிறப்புக்கேற்ற பொருள்களை வருணிக்குமுகத்தான் கங்கை, காவிரி, யமுனை, சிலம்பாறு, தேனாறு, மணிமுத்தாறு, நிவா என்னும் ஆறுகளை அழகு தோன்ற வருணிக்கிறார். பெயர் சுட்டப்பெறாமல் அருவி, கானாறு, சுனை என்பனவும் அமைகின்றன. ஆற்றைக் குறிக்க நதி, புனல் என்னும் சொற்கள் தனித்தும் அடையடுத்தும் வருகின்றன. வதரியாச்சிரமத்தைக் குறிக்குமிடத்து கங்கையும் திருவரங்கச் சிறப்பினைப் பாடுமிடத்து காவிரியும் கண்ணனைச் சிறப்பிக்கும் இடங்களில் யமுனையும் திருமாலிருஞ் சோலையைப் புகழுமிடத்து தேனாறும் சிலம்பாறும் இடம் பெறுகின்றன. ஒரே பொருளைத் தரும் பொழில், சோலை ஆகிய சொற்களும், வயல், பணை, செய், பழனம், கழனி ஆகிய சொற்களும், வண்டு, சுரும்பு, தும்பி, அளி, மதுகரம் ஆகிய சொற்களும், முகில், கொண்டல், மஞ்சு ஆகிய சொற்களும், தேன், கள், தேறல், நறவு ஆகிய சொற்களும் அமைகின்றன. பெரிய திருமொழிப் பாடல்களைத் திரும்பத் திரும்பப் படிக்கும்

போது அது வெளிப்படுத்தும் உணர்ச்சியோடு நாம் தொடர்பு கொள்கிறோம். பற்றறுத்தவனாகிய இறைவனைப் பற்றி நின்றதாக ஆழ்வாரின் உள்ளம் அமைந்தமையே இதற்கெல்லாம் காரணமாகும்.

இயற்கைக் காட்சிகள் அனைத்திலும் இறைவனைக் கண்டு சங்ககாலக் கவிஞர்களைப் போன்று அதை மனித வாழ்க்கையோடு இணைத்து வருணித்துள்ளார். அவருடைய வருணனைகள்

1. இறைவனின் சிறப்புக்களைப் பின்புலமாகக் கொண்டவை
2. இறைத்தலங்களின் ஏற்றங்களைக் கூறுபவை
3. தத்துவப் பின்புலமுடையவை
4. குறிப்புப் பொருளுடையவை
5. அழகுணர்ச்சியை மையமாக உடையவை

என்னும் வகையில் அமைவனவாகக் காணப்படுகின்றன.

## *இறைவனின் சிறப்புக்களைப் பின்புலமாகக் கொண்டவை*

*மலையருவி :*

இமயமலையில் இருக்கும் காட்டுப் பன்றிகள் மாணிக்கப்பாறையைப் பெயர்த்துத் தள்ள அவை மலையிலிருந்து வீழும் நீர் வீழ்ச்சியால் உருட்டிச் செல்லப்படுகின்ற காட்சியை,

இறங்கி யேனங்கள் வளைமருப்பிடந்திடக்
கிடந்தரு கெரிவீசும்
பிறங்கு மாமணி யருவியொ டிழிதரு
பிருதிசென் றடைநெஞ்சே

என்று கூறுகிறார். நரசிம்ம அவதாரத்தில் திருமால் வலிமைமிக்க இரணியவுருவைக் கிழித்ததுபோல் பன்றிகள் பெரும் பாறைகளைப் பெயர்த்துத் தள்ளியதாக நினைத்துக் கொள்கிறார். இயற்கையின் அழகை மட்டும் காணாது இறையன்பையும் காண்கிறார். இறைவனின் சிறப்பைக் கூறுதற்கு இயற்கைச் சூழலைப் பயன்படுத்துகிறார். அருவியின் அழகிய காட்சியில் மனம் பறிகொடுத்த சைவசமயக் குரவர் திருஞானசம்பந்தர் இழுமென்றிழிதரும் அருவி மணிகளை இழுத்து வருவதையும் காட்டுப் பன்றிகள் திரிந்து கொண்டிருப்பதையும்,

மன்றத்து மண்முழவம் ஓங்கிமணி கொழித்து வயிரம் உந்திக்
குன்றத் தருவி யயலே புனல் ததும்புங் குறும்பலாவே[9]

ஏற்றேனம் ஏன மிவையோடவை விரவி யிழியுஞ்சாரல்[10]

என்று வருணித்திருப்பதைக் காணுகிறோம். அருவி மணிகளை இழுத்துவரும் காட்சியை, சுந்தரரும் தேவாரத்தில்

புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொன்மணி வரன்றியும் நன்மலர் உந்தி[11]

என்று கூறுகிறார்.

*வானளாவும் மூங்கில்:*

திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள இறைவனுக்குப் பணிவோடு சேவை செய்ய விரும்பி வேண்டுகின்றார் ஆழ்வார். திருவேங்கடமலை வானளாவ ஓங்கிய மூங்கில் மரங்கள் நெருங்கியிருக்கப் பெற்றது. பூத்த மலர்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பெற்று நறுமணமுடையதாகத் திகழ்கிறது. வானளாவ உயர்ந்த மூங்கில்களைக் கொண்டு தேவர்களைக் கீழே இறங்கி வரச் செய்து தன்னை வணங்க திருவேங்கடத்தானே அழைப்பது போல அவ்வியற்கைக் காட்சி அமைந்திருக்கிறது. தன் அருளால் பூம்பொழில்களை வளப்படுத்தி வண்டு முதலானவற்றை மகிழ்ந்திருக்கும்படிச் செய்து, எல்லா நறுமணத்தையும் இயற்கையாகத் தன் திருமேனியில் பெற்றுத்திகழுகின்றான் இறைவன். திருவேங்கடத்துச் சோலைகளிலுள்ள மரங்களும் நீண்ட சிகரங்களும் விண்ணை முட்டி உயர்ந்தோங்கி வளர்ந்திருப்பதால் அவை விண்ணுலகத்திலுள்ள தேவர்களை வேங்கட மலைக்கு வந்த இறைவனை வழிபடுவதற்கு அழைக்கச் சென்றிருக்கின்றன என்று கற்பனை செய்வதோடு மட்டுமல்லாமல் அதற்கேற்ப தேவர்களும் வந்து தொழுகிறார்கள் என்னும் கருத்துப்பட,

விண்ணோர் தொழும்வேங் கடமா மலை

எங்கும் வானவர் தானவர் நிறைந்
தேத்தும் வேங்கடம்

ஆடு தாமரையோனு மீசனும்
அமரர் கோனும் நின்றேத்து வேங்கடத்து

எனக் கூறுகிறார். எவ்வுலகத்தவரும் நிறைந்து ஏத்துமிடம் வேங்கடம் என்பதால் அங்கு உறையும் இறைவனின் சிறப்பு புலனாகின்றது.

*அவதாரச் சிறப்பு:*

திருத்தலங்களின் சூழல் வருணிக்கப்படுமிடத்து அவை இறைவனின் சிறப்பினால் பெருமையடைந்தவாறும் குறிப்பிடப்படுகின்றன. இலங்கை மாநகரமும் அந்நகர் வாழ் அரக்கரும் அழிய அறத்தை நிலைநாட்டிய இறைவனின் சிறப்பு

அம்பினா லரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்தவெம் மண்ணல்

என்று விளக்கப்படுகின்றது. அரக்கர் குலத்தை அழித்ததனாலேற்பட்ட சிறப்போடு வாலியை அம்பெய்து கொன்று சுக்கிரீவனுக்கு அரசாட்சியைக் கொடுத்து தருமத்தைக் காத்த சிறப்பும் தாடகையை வதைத்துப் பெருமையடைந்த சிறப்பும் பாடல்களில் அமைந்துள்ளன.

வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசாட்சி அளித்ததும் இராவணனைக் கொன்று வீடணனுக்கு அரசாட்சி அளித்ததுமாகிய அறச் செயல்களைச் செய்தமையும், கங்கையைக் கடப்பதற்குப் படகு செலுத்தி உதவிய குகனைத் தோழமை கொண்டதும், மனிதன், விலங்கு என்று வேற்றுமை பாராட்டாதவண்ணம் அநுமனுடன் ஒரே இலையில் அமர்ந்து பகிர்ந்து உண்டதுமாகிய இறைவனின் சிறப்புகளை மையமாகக் கொண்டு வருணனை அமைந்துள்ளது. நப்பின்னையைத் திருமணம் செய்து கொள்ளுவதற்காக ஏழு எருதுகளைக் கொன்ற சிறப்பையும் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து ஆநிரைக்கூட்டங்களை மழையினின்றும் காத்த சிறப்பையும் பாரிசாத மலரை வானுலகிலிருந்து கொண்டு வந்த சிறப்பையும் மையமாகக் கொண்டுள்ளது. பெண்ணுருவில் வந்த பூதனையின் முலையுண்டு அவளை அழித்தமையும், கம்சனைக் கொன்றமையும், மல்லரை அழித்தமையும், குவலயாபீடத்தை வீழ்த்தியமையும் தந்தையைச் சிறை மீட்டமையும், கன்று கொண்டு விளா மரத்திலெறிந்து சாபத்தைப் போக்கினமையுமாகிய சிறப்புக்கள் எடுத்தாளப்படுகின்றன. ஆயர்குலப் பெண்டிருடன் விளையாடி மகிழ்ந்தமையும் பார்த்தனுக்குச் சாரதியாய் இருந்த பெருமையும் பாரதப் போரில் பாண்டவர்க்கு உறுதுணையாய் நின்றமையுமாகிய இறைவன் சிறப்புகளை மையமாகக் கொண்டு இயற்கை வருணிக்கப்பட்டுள்ளது. மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனம், பரசுராமர், பலராமர் ஆகிய அவதாரச் சிறப்புகளும் காணப்படுகின்றன.

ஆயிரம் நாமங்களைச் சொல்லி வழிபடுபவர் துயரடையாமல் காப்பதும், நாளும் தொழுது நிற்கும் தொண்டர் தமக்கு வீடுபேற்றினை நல்குவதும், ஏத்துவார்

தம் மனத்துள் உறைகின்ற சிறப்பும், உகந்தவரைப் பிறவி கெடுக்கும் அருள்திறமும் இறைவனின் சிறப்புக்களாகக் கூறப்பட்டுள்ளன. உள்ளுவார் உள்ளத்தே உறைகின்ற சிறப்பும் நான்மறைகள் தேடியோடும் சிறப்பும் யாராலும் அறிய முடியாத தன்மையும் சிவபெருமானின் சாபத்தைப் போக்கிய முதன்மையும் பிரமனைப் படைத்த செயலுமாகிய சிறப்புக்களை மையமாகக் கொண்டு திருத்தலங்களின் சூழல் வருணிக்கப்படுகின்றது. சீராம விண்ணகரத்தில் மருதமும் நெய்தலும் மயங்கிய திணை மயக்கத்தை எடுத்துரைக்கும்போது

பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத்தன் னுந்தியிலே தோற்று வித்து
கறைதங்கு வேல்தடங்கண் திருவை மார்பில்
கலந்தவன்தா ளணைகிற்பீர் கழுநீர் கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணி
சிறைவண்டு களிபாடும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே

என்று விளக்கப்படுகிறது.

## இறைத்தலங்களின் ஏற்றங்களைக் கூறுபவை :

### வண்டு, குயிலிசை :

திருவயிந்திரபுரத்தில் தாமரை மலர்கள் நிறைய மலர்ந்திருக்கின்றன. அம்மலர்களில் வண்டுகள் தம் பெடைகளுடன் கூடியிருந்து தேனைப் பருகிக் களித்து இனிய பண்ணைப் பாடுகின்றன. இரண்டிற்குமிடையே ஊடல் வந்துவிட பெண் வண்டுகள் தம் துணையை விட்டு நீங்கிச் சென்று அழகிய சோலைகளுக்கிடையே நுழைகின்றன. அங்கு குருக்கத்திக் கொடிகள் ஒன்றோடொன்று பின்னப் பட்டிருக்கின்றன. அது பந்தல் போலக் காணப்படுகிறது. சோலையில் நுழைந்த வண்டுகள் அப்பந்தல்களில் ஒளிந்து கொள்கின்றன. பெண் வண்டுகளின் பிரிவாற்றா நிலையிலுள்ள ஆண் வண்டுகள் ஊடல் தீர்ந்து ஓடி வருமாறு அழைப்பது போலப் பண் எழுப்புகின்றன. அப்போது கேட்கும் இன்னிசை, ஆழ்வாருக்கு அவை 'தென்னா' என்று ஆண்டவனைப் பாடி வணங்குவதாக இருக்கிறது.

பின்னு மாதவிப் பந்தலில் பெடைவரப்
பிணியவிழ் கமலத்து
தென்ன வென்றுவண் டின்னிசை முரல்தரு
திருவயிந் திரபுரமே

என்பது பாடல். ஊடல் தீர்வதற்காக அவை அவ்வாறு கூவியழைக்கும் ஓசைகூட திருமாலின் பக்தி வெள்ளத்தில் மூழ்கித் திளைக்கும் ஆழ்வாருக்கு அவன் நாமமாகிய 'தென்ன' என்பதாகவே தோன்றுகிறது.

ஆண்டவனின் அன்புள்ளத்தால் ஆட்கொள்ளப்பட்டவருக்கு உலகத்து உயிர்கள் அனைத்துமே தம்மைப் போல ஆண்டவனின் புகழையே பேசுவதாகத் தோன்றுகிறது. அதனால் தான் வண்டுகள் கூட அவனையே'தென்னா' என்று பாடுவதாகக் கூறுகிறார். "தென்னா-தக்கினன், சிவனுக்கும் திருமாலுக்கும் பெயர்"[12] என்று கூறுவர். தாம் கூறும் நாராயண மந்திரத்துக்கு உரியவனையே வண்டுகளும் கூறுகின்றன என்கிறார். இவ்வாறே திருவெள்ளியங்குடியிலுள்ள சோலையில் வாழ்கின்ற குயில்கள் கூவுவதை

அள்ளியம் பொழில்வா யிருந்து வாழ் குயில்கள்
அரியரி யென்றவை யழைப்ப

என்பதாகக் கூறுகிறார். திருமாலுறை திருத்தலத்தில் வாழும் குயில்களாகையால் அவை இறைவன் திருநாமமாகிய 'அரி' என்பதை உச்சரிப்பதாகவும் தமக்குரிய துன்பத்தை நீக்குமாறு 'அரி அரி' என்று கூறி வேண்டிக் கொள்வதாகவும் இரு பொருள்பட உள்ளது அது. மனித உயிர்களேயல்லாமல் சிற்றறிவுடைய பறவைகளும் இறையுணர்வுடன் இருப்பதை இது எடுத்துக்காட்டுகிறது. வண்டுகளும், குயில்களும் ஓசையெழுப்புவது இயற்கையான ஒன்றே. இருப்பினும் இலக்கியத் திறனாய்வாளர்கள் கூறுகின்ற "இயற்கையாக நடக்கும் ஒன்றினிடத்துப் புலவர்தாம் நினைத்த கருத்து ஒன்றை ஏற்றிவைத்து கற்பனை செய்து பாடுவது கருத்து விளக்கக் கற்பனை"[13] என்னும் கூற்றுக்கு ஏற்ற இலக்கியமாக இப்பகுதி அமைந்திருக்கக் காணுகின்றோம். நம்மாழ்வாரும் வண்டுகளின் இசையொலியுடன் கூடிய வேங்கடத்தைக் கூறுமிடத்து அங்கு வண்டுகள் 'தென்னா தெனா' என்று இசைப்பதாகவே கூறுகிறார். "தென்னா தெனா வென்று வண்டு முரல் வேங்கடத்து"[14] என்று அவர் பாடுவது காணலாம்.

### சங்குக் கூட்டம்:

காழிச்சீராம விண்ணகரத்தின் இயற்கை எழில் ஆழ்வாரின் கற்பனையுடன் கலந்து அழகுபட மிளிர்கின்றது. காழி என்பது சீர்காழியாகும். சீராம விண்ணகர் என்றால் இராமன் எழுந்தருளியிருக்கும் இடமென்றும் திருமகள் போன்ற மாதர்களையுடைய இடமென்றும் பொருள்படும். அந்நகரைச் சுற்றியுள்ள வயல்களில் சூல்கொண்டுள்ள சங்குகள் கருவுயிர்க்கும் நிலையிலுள்ளன.

நிலத்தை உழுகின்ற எருதுகள் அங்குமிங்கும் ஓடுகின்றன. இந்த அதிர்ச்சியினால் சங்குகள் முத்துக்களை ஈனுகின்றன. மிக வெண்மையாகத் தோன்றும் முத்துக்களைக் கண்ட கொக்குகள் அவற்றைத் தம்முடைய முட்டைகள் என மயங்கி அவற்றையே சுற்றிச் சுற்றிப் பறந்து திரிகின்றன. சங்குகள் ஈன்ற முத்துக்கள் ஆங்காங்கே சிதறிக் கிடப்பதாகிய காட்சி அத்தலத்தின் வளத்தையும் செல்வச் செழிப்பையும் அவற்றிற்குக் காரணமான இறையருளையும் புலப்படுத்துகிறது. சங்குகள் முத்துக்களை ஈனுவதும் கொக்குகள் சுற்றிச் சுற்றி வருவதும் ஆழ்வாரின் உள்ளத்தை ஈர்க்க அவை சொல்லோவியமாக்கப்பட்டுள்ளன.

சூன்முகமார் வளையளைவாய் உகுத்த முத்தைத்
தொல்குருகு சினையெனச்சூழ்ந் தியங்க

என்பது அச்சொல்லோவியம்.

## கமுகும் தெங்கும்:

சீராம விண்ணகரத்தில் மரங்கள் அருகருகே நின்று அழகுறவிளங்கும் தோற்றத்தைக் காட்டுகிறார். அவ்வாறு காட்டும்போது கமுகும் பலாவும் பற்றிய காட்சியும் இடம் பெறுகிறது. கமுக மரங்களின் பழுத்த காய்கள் உதிர்ந்து விழுகின்றன. அவை ஒன்றோடொன்று நெருங்கிப் பழுத்திருக்கும் பழங்களின் மீது வீழ்வதால் அவை நசுங்கித் தேனைப் பொழிகின்றன என்கிறார்.

நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ
நீள் பலவின் தாழ்சினையில் நெருங்கு பீனத்
தெட்டபழம் சிதைந்தமதுச் சொரியும் காழிச்
சீராம விண்ணகரே

என்பதுவே அப்பாடல். இதே போன்றதொரு வருணனை திருநாங்கூரின் இயற்கையை வருணிக்கும்போதும் இடம் பெறுகிறது. திருநாங்கூரைச் சுற்றிலும் தென்னை மரங்களும் மாமரங்களும் நிறைந்துள்ளன. ஓங்கியிருக்கும் தென்னை மரங்களினின்று தேங்காய் நெற்றுக்கள் மாமரங்களின் மீது வீழ, அவ்வதிர்ச்சியினால் மாம்பழங்கள் உதிர்கின்றன. இவையெல்லாம் மீண்டும் மீண்டும் தொடர்ந்து நிலத்தில் வீழ்ந்து கொண்டிருப்பதால் ஒன்று சேர்ந்து சேறாகி விடுகின்றது. திருத்தக்க தேவரும் ஏமாங்கதநாட்டின் சிறப்பைக் கூறும்போது

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே [15]

என்பதும் அவருக்குப் பின்வந்த வீரமாமுனிவரும் தேம்பாவணியில்

பாய்ந்த தெங்கதின் பழங்கள் வீழ்தலால்
வாய்ந் த வாழைமா வருக்கை ஆசினி
சாய்ந்த தீங்கனி சரிந்த தேன்புனல்
தோய்ந்த வாயெல்லாம் இனிமை தோய்ந்தன [16]

என்று நாட்டுச் சிறப்பு பற்றிக்கூறுவதும்

மீது யர்ந்திடுந் தெங்கிள நீரை
மிடைந்த பூகஞ் சுமந்ததன் காயைச்
சூத மொன்றில் சுமக்கக் கொடுக்குஞ்
சூதந் தன்கனி தூங்கும் பலாவின்
ஓதும் அந்தப் பலாக்கனி வாழை
உளுக்க வேசுமந் தொண்குலை சாய்க்கும்
மாது ளங்கொம்பு வாழையைத் தாங்கும்
வளமை ஆசூர் வடகரை நாடே [17]

என்னும் முக்கூடற் பள்ளுப் பாடலும் ஈண்டு இணைத்து எண்ணத் தக்கது.

பாளை வான்கமு கூடுயர் தெங்கின் வண்
பழம்விழ வெருவிப்போய்
வாளை பாய்தடம் சூழ்தருநாங்கூர்
வண்புரு டோத்தமமே

என்பதும் ஆழ்வார் கூற்று. பாளைகளையுடைய பெரிய கமுகமரங்களுக்கிடையில் அவற்றைவிட உயர்ந்த தென்னையின் கனமான காய்கள் கீழேயுள்ள நீரில் வீழ அதனால் ஏற்பட்ட ஓசையைக் கேட்ட மீன்கள் தம்மை இரையாகக் கொள்வதற்கு நீரில் ஏதோ ஒன்று குதித்து விட்டதென்றெண்ணி துள்ளித் தாவுவதாக உள்ளது காட்சி. இயற்கையை வெவ்வேறு வகையில் வருணிக்கும் பாடலாசிரியர்கள் அவ்வியற்கைக் கூறுகளை விரித்துரைக்க சில உத்திகளையும் கையாளுகின்றனர். நாடு, நகர் பற்றிய இயற்கை வருணனையில் மரங்கள் அருகருகே நின்று செழித்து சேர்ந்திருந்த தன்மையைச் சுட்டிக் காட்ட மேலேயிருக்கும் ஒரு மரத்தில் காணலாகும் பொருள்கள் அதையடுத்து கீழேயுள்ள மரத்தில் விழ பின்னர் கீழேயுள்ள மரத்துப் பொருள்கள் அதனினும் கீழேயுள்ள ஒன்றில் வீழ்ந்து செல்வதாக உள்ள உத்தியை அவர்கள் கையாண்டு வரக் காண்கிறோம். காலம் மாறினாலும்

இயற்கையை வருணிக்க அவர்கள் கையாளும் இவ்வுத்தியில் மாற்றமில்லை என்பதை ஆழ்வார் பாடல்களும் அவருக்குப் பின்னர்த் தோன்றிய மேற்கண்ட புலவர்களின் பாடல்களும் நன்கு காட்டுகின்றன.

### மலர்களின் நறுமணம் :

வானுலக வைகுண்டத்தில் எழுந்தருளியிருப்பது போல் திருமால் அமர்ந்த திருக்கோலத்தில் காட்சியளிக்கும் பூலோகத் திருத்தலம் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம். அத்தலத்தின் இயற்கை எழில் கொஞ்சும் பாங்கே இறைவனை அங்கு விரும்பி உறையச் செய்கின்றது எனலாம்.

சலங்கொண்டு மலர்சொரியும் மல்லிகையொண் செருந்தி
சண்பகங்கள் மணநாறும் வண்டுபொழிலினூடே
வலங்கொண்டு கயலோடி விளையாடு நாங்கூர்
வைகுந்த விண்ணகரம்

என்று அத்தல மாட்சியைப் பற்றிப் பாடுகிறார். மல்லிகை, செருந்தி, சண்பக மரங்கள் எங்கும் நிறைந்திருப்பதால் அவற்றின் நறுமணம் வீசிக்கொண்டிருக்கிறது. வண்டுகள் ஒலிக்கின்ற அம்மரங்கள் நிறைந்த சோலைகளில் மீன்கள் துள்ளுகின்றன. ஐம்பெரும் பூதங்களும் மிக்க மகிழ்ச்சியோடு இறைவனை நினைத்து சுற்றிவருவதுபோல விளையாடுகின்ற மீன் முதலான உயிர்களும் சுற்றி வருமிடமாய் வைகுந்த விண்ணகரம் விளங்குகின்றது என்கிறார். சுற்றிலும் செந்நெற்பயிர்களும் தென்னை மரங்களும் வாழை மரங்களும் வெற்றிலைக் கொடிகளும் அழகிய குலைகள் நிறைந்த பாக்கு மரங்களோடு இணைந்து ஒருசேர வளத்தைப் பெருக்கிக் கொண்டிருக்க, வண்டுகள் பண்பாட, மயில்கள் ஆடுகின்ற இயற்கை எழிலை வருணிக்கும் வாயிலாக அத்தலத்தின் வளத்தையும் மக்களின் மனம் மகிழ்ந்த வாழ்க்கையையும் வெளிப்படுத்தி அதற்குக் காரணமாயிருப்பவன் அத்தலத்தில் எழுந்தருளியுள்ள வைகுந்தப்பெருமானே என்பதையும் தெளிவுபடுத்துகிறார்.

### முத்துக்களின் சிதறல் :

மாடமாளிகைகளின் உச்சியில் பாதுகாப்பின் பொருட்டு சூலங்கள் நடப் பெற்றுள்ளன. அவை மேகத்தைத் தொடுவது போல் உள்ளன. மணிகளாலான மாடங்களின் மேல் வைத்த சூலங்கள் நீர் கொண்ட மேகங்களின் வயிற்றைப் பிளக்க, அவற்றினின்று முத்துக்கள் சிதறி விழுந்து மாளிகைகளிலெங்கும் மலிந்து கிடப்பதாகக் கூறுமிடத்து

சிலையிலங்கு மணிமாடத் துச்சிமிசைச் சூலம்
செழுங்கொண்டலகடிரியச் சொரிந்த செழுமுத்தம்
மலையிலங்கு மாளிகைமேல் மலிவெய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே

என்கிறார். கடலிலுள்ள நீரை உண்டு மேலெழுந்த மேகங்கள் அங்குள்ள முத்துக்களையும் சேர்த்து மேலே கொண்டு சென்று வயிறு கிழிக்கப்பட்டபோது தம்மில் பொதிந்திருந்த முத்துக்களைக் கொட்டுவதாகக் கற்பனைக் கண்கொண்டு காண்கிறார்.

## முத்தும் பொன்னும் :

திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் என்பது 'அரி' எனப்படும் இறைவன் உறையப்பெற்ற தலம் என்பதைக் குறிப்பதாகும். அத்தலத்தின் சூழல் ஆழ்வாரின் மனத்தைக் கவர அதையும் சிறப்புறப் பாடுகிறார். அரிமேய விண்ணகரத்தை வளம்மிக்க ஊராகக் கண்ட அவர் அதை வருணிக்கும்போது உள்ளம் விழைந்தவாறு அமைத்துக்கூறுகிறார். வானளாவ உயர்ந்து நிற்கும் சோலைகளை உடையதாயிருந்தது அத்தலம். எங்குப் பார்த்தாலும் புன்னை மரங்கள் பசுமையாகக் காட்சியளித்தன. அம்மரங்களிலுள்ள மொக்குகள், முத்துக்கள் போலவும் மலர்கள் பொன் போலவும் காணப்பெற்றன.* செல்வவளம் மருத நிலத்தில் மட்டுமின்றி அந்நிலத்திலிருக்கும் மரங்களில்கூட மிக்குள்ளது. சோலையிலுள்ள புன்னை மரங்களில் புன்னை அரும்பாக இருந்த நிலையில் முத்தாகக் காட்சியளித்தது. மலராம் நிலையில் பொன்னாகக் காட்சியளித்தது. செல்வ அழகும் கண்கவர் வனப்பும் நிறைந்த பொழில் அழகை இப்புன்னை மூலம் காட்டுகின்றார். மலர் அரும்பாக இருக்கும் பருவத்தில் வெண்மையாகவும் மலராகும் பருவத்தில் பொன்னிறமாகவும் இருக்குமென்பதை நுண்ணிதாகக் கண்டு உணர்த்தியுள்ளமை அறிந்து இன்புறத்தக்கது. புன்னை அரும்புகளைக் காணும் ஆழ்வாரின் கண்ணுக்கு முத்துக்கள் நினைவில் வருகின்றன. புன்னை அரும்புகள் உருண்டையாய் வெண்மையாய் இருக்கும். ஆதலின் தன் கண்ணெதிரே உள்ள புன்னை அரும்புகளையும் எங்கேயோ உள்ள முத்துக்களையும் தொடர்புபடுத்திக் காட்டுகிறார். வெவ்வேறிடங்களில் உள்ள பொருள்களை ஓரிடத்தில் கொண்டு வந்து இயைத்துக் காட்டும் இயைபுக் கற்பனையாக அமைகிறது அவருடைய

பைம்பொனொடு வெண்முத்தம் பலபுன்னை காட்டப்
பலங்கனிகள் தேன்காட்டப் படஅரவே ரல்குல்
அம்பனைய கண்மடவார் மகிழ்வெய்தும் நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே

என்னும் இப்பாடல். புன்னை மரத்தைப் பார்க்குமிடத்து முத்துக்களும் பொன்னும் ஆழ்வார் எண்ணத்தில் தோன்றுகிறதென்றால் அத்தலம் செல்வச் செழிப்புமிக்க தலமாயிருந்திருத்தல் வேண்டும். அதை உணர்த்துவதற்கு இப்படியொரு உத்தியை மேற்கொண்டுள்ளார். இத்தகையதொரு வளம் நிறைந்த காட்சியை சுந்தரரும்

> கரும்புனை வெண்முத்தரும்பி பொன்மலர்ந்து பவளக்
> கவின்காட்டும் கடிபொழில்சூழ் கலயநல்லூர்காணே [18]

என்று கூறுகிறார்.

திருக்கோவலூரின் வயல் வனப்பையும் பொழில் வனப்பையும் வருணிக்கும் ஆழ்வார் அவ்வூரை ஒரு பொற்களரியாக உருவகப்படுத்தி வருணிக்கிறார். பொற்களரி என்றால் பொற்கொல்லனின் பட்டறை என்று பொருள்படும்.

> எழுந்தமலர்க் கருநீல மிருந்தில் காட்ட
> இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன்காட்ட
> செழுந்தடநீர்க் கமலம்தீ விகை போல் காட்டும்
> திருக்கோவ லூரதனுள் கண்டேன் நானே

என்பது புன்னை மரத்தின் அழகை அவர் வருணித்திருக்கும் பாடலாம். பொற்கொல்லரின் பட்டறை, கரிகள் கொட்டப்பட்டு நிரம்பியிருக்கும். பொன்னும் முத்தும் நிறைந்து இருக்கும். நெருப்பு கனல் வீசிக்கொண்டிருக்கும். இங்கே கருநீல மலர்கள் கரியாகவும் புன்னை மொக்குகள் முத்தாகவும் புன்னைப் பூக்கள் பொன்னாகவும் தாமரை மலர்கள் செந்தணலாகவும் காணப்படுகின்றன. கவிதைகளில் உவமையாக வரும் பொருள் சிறப்புடையதாகவும் உயர்ந்த கருத்தைத் தருவதாகவும் இருப்பின் அக்கவிதை கற்போருள்ளத்தைக் கவர்வதாச அமையும். இதனை தொல்காப்பியனார்

> உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை [19]

என்று கூறியுள்ளார். இதற்கேற்ற முறையில் ஆழ்வார் நவரத்தினப் பொருள்கள் சிலவற்றைச் சுட்டி அவைபோல் கருநீலம், புன்னை மொக்கு, மலர் விளங்குவதாகவும் தாமரை விளக்குபோல் விளங்குவதாகவும் கூறியுள்ளார். இங்கு விலை மதிப்பற்ற இரத்தினக் கற்களையும் மங்கலத் தன்மையுடையதாக விளங்கும் விளக்கையும் உவமையாகக் கூறியிருத்தல் காணலாம். தாம் ஒரு கால் மனக்கண்ணால் கண்ட கொல்லன் உலைக்களத்தைப் பல்வேறு பொருள்களுடன் தொடர்புபடுத்திக் கூறுகிறார். ''காட்சி, உணர்ச்சி , கருத்து முதலியவற்றால் ஏதோ

ஒரு வகையில் ஒன்று போலத் தெரிவனவாய்த் தன் மனத்திற்குப் பட்டவற்றை ஒன்றோடு ஒன்று இணைய வைத்து அழகுறக் காட்டுவது இயைபுக் கற்பனையாகும்'' [20] என்னும் இலக்கியத் திறனாய்வாளர் கூற்றுக்கேற்ப இங்கும் இயைபுக் கற்பனையே மிளிர்கின்றது எனலாம்.

## கமுக மரம் :

கமுக மரம் ஏராளமான கனிகளைக் கொண்டிருக்கிறது. அக்கோலம் ஆழ்வாரின் கற்பனையை மிகுவிக்கிறது. கருமை நிறம் கொண்ட பாக்குமரத்தின் இளம் பாளைகளில் காணப்படும் இளமையான பிஞ்சுகள் முத்துக்கள் போன்றிருக்க, பச்சை நிறக் காய்கள் மரகதப் பச்சைக் கல்லாகக் காட்சியளிக்க , அவை கனிந்து செந்நிறப் பழமானவுடன் பவளங்களாகத் தோற்றமளிக்கவே அப்பாக்கு மரத்தில் முத்துக்களையும், மரகதத்தையும், பவளத்தையும் ஒரு சேரக் கண்ட சுரபுன்னை அவற்றில் மயங்கி வியந்து காணுவது போல் மலரும் காட்சியைக் கூறுகிறார்.

கருங்கமுகு பசும்பாளை வெண்முத் தீன்று
காயெல்லாம் மரகதமாய்ப் பவளங் காட்ட
செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள் சோலைத்
திருக்கோவலூர்............

என்பதே இப்பொருள் தரும் பாடல். பாக்கு மரத்தில் பழங்கள் மிகுந்திருப்பதும் சுரபுன்னை மரத்தின் மலர்களில் தேன் நிறைந்திருப்பதும் ஆகிய காட்சி மட்டுமே ஆழ்வாரின் மனத்தைப் பெருமளவு கவர்கிறது.

குரவமேறி வண்டினங் குழலொடி
யாழ்செய் கே ாவலூரா் [21]

போதில் வண்டு பண்செயும் பூந்தண்கோவலூா் [22]

பொறிகொள் வண்டு பண்செயும்
பூந்தண் கோவலூா் [23]

என சம்பந்தரும் பாடியதை நோக்க சம்பந்தரின் மனத்தையும் பிணிக்கும் பெற்றியதாகிய இயற்கைக் கவின் மிகுந்தது திருகோவலூர் என்பது பெறப்படும்.

## நறுமணமும் ஒலிகளும் :

வானளாவ உயர்ந்த மரங்கள் நிறைந்த சோலையில் சுரபுன்னை, கமுகு, செண்பகம் ஆகிய மலர்களும் கொடி மலர்களும் நீர்ப்பூக்களும் மணம்கமழ,

கரும்பு ஆலையில் எழும் கரும்புச் சாற்றின் நறுமணமும் அதோடு கலந்து வீசுகிறது என்னும் பொருள்பட

சேடேறு மலர்ச்செருந்தி செழுங்கமுகம் பாளை
செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலி னூடே
ஆடேறு வயலாலைப் புகைகமழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே

என்று பாடுகின்றார். 'சேடு' என்பதற்கு அழகு, இளமை, திரட்சி, நன்மை, பெருமை என பல பொருள்கள் உள. அரிமேய விண்ணகரத்தின் ஏற்றமிகு சிறப்பையும், அழகையும், பெருமையையும், செல்வச் செழிப்பால் அத்தலத்தவர் அடைந்துள்ள நன்மையையும் எவ்விதக் குறையுமில்லாததால் மக்களிடையே காணப்படும் இளமையையும் விளக்குவதற்கு அச்சொல்லைப் பயன் படுத்தியுள்ளார். அத்தலம் ஆரவாரம் மிக்கு விளங்குவதற்கு நிறைந்த வளமும் அவ் வளத்தின் சிறப்பினால் மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்தும் மக்களின் கலகலப்புமே காரணம் என்பதைக் கூறுகின்றார். அங்கு செவிக்கினிமை தரக்கூடிய ஐந்து வகையான ஒலிகள் எப்போதும் கேட்கின்றன. திருமால் எழுந்தருளியுள்ளமையால் அத்தலத்து மக்கள் குறையேதுமின்றி மகிழ்ச்சியுடன் வாழ்கின்றனர். அதனால் விழாக்கள் பல கொண்டாடி மகிழ்கின்றனர். அம்மகிழ்ச்சி ஆரவாரத்துடன் முழவொலியும் இணைந்துவிடுகிறது. நாள்தோறும் புதிய புதிய திருவிழாக்கள் கொண்டாடுவதால் அவ்விழாக்களில் மறையவர் ஓதும் மறையின் ஒலியும் மகளிர் உலவி வருவதால் அவர்தம் சிலம்பின் ஒலியும் கடலின் ஒலியுமாக ஒலித்துக் கொண்டிருக்கிறது என்கிறார்.

அண்டமுறு முழவொலியும் வண்டினங்க ளொலியும்
அருமறையி னொலியும்மட வார்சிலம்பி னொலியும்
அண்டமுறு மலைகடலி னொலிதிகழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே

என்பது மேற்குறித்த கருத்தைத் தாங்கி நிற்கும் பாடலாகும். ''ஒலிகள் அளவாலும் தன்மையாலும் முயற்சியாலும் வேறுபட்டு ஒழுங்காக அமைந்து வந்த அமைப்பே திரும்பத் திரும்ப வந்து இனிமை பயப்பது ஒலிநயம்''[24] என்னும் கூற்றுக்கேற்ப இங்கு வந்த அமைப்பே திரும்பத் திரும்ப வந்து மெல்லினமும் இடையினமும் கலந்து ஓசையினிமை பயக்கிறது. நீர்வளம், நிலவளம் ஆகிய இயற்கை வளம் பொருந்திய மருதநிலத்தையும் அங்கு நிறைந்துள்ள வளத்தினால் ஏற்படும் மகிழ்ச்சி ஆரவாரத்தையும் வருணிப்பதில் புலவர்கள் அனைவருமே ஆர்வம்

காட்டியுள்ளனர். மருதநில மாட்சியைக் காட்சிப்படுத்தும் பல இன்னோசைகளை கம்பர் நாட்டுப் படலத்தில் காட்டுகின்றார்.

ஆறுபாய் அரவம் மள்ளர் ஆலைபாய் அமலை ஆலைச்
சாறுபாய் ஓதை, வேலைச்சங்கின் வாய்ப்பொங்கும் ஓசை
ஏறுபாய் தமரம் நீரில் எருமை பாய் கழனி இன்ன
மாறுமாறு ஆகித்தம்மில் மயங்கும் மாமருத மேனி [25]

என்பது அக்காட்சி

## ஆற்றுவளம் :

அரிமேய விண்ணகரத்தில் காவிரியாறு சந்தன மரங்களையும் அகில் மரங்களையும் நவரத்தினங்களையும் தள்ளிக்கொண்டுவந்து மேகம் தம்மேல் உலவும் படி உயர்ந்த சோலைகளின் உள்ளேயும் கழனிகளிடையிலும் புகுந்து பரவி வளம் கொடுக்கிறது. மாமறையோர் மலர்தூவி கைகூப்பி அரியே சரணம் என்று இறைஞ்சுவர் என்னும் பொருள்பட

....... காவிரிசந் தகில்கனக முந்தி
மஞ்சுலவும் பொழிலூடும் வயலூடும் வந்து
வளங்கொடுப்ப மாமறையோர் மாமலர்கள் தூவி
அஞ்சலித்தங் கரிசரணென் றிறைஞ்சுமணி நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே

என்று பாடுகிறார். சந்தனம், அகில், நவரத்தினங்களைக் கொணர்ந்து தான் தங்கியுள்ள இடத்திற்கு வளம் அளிக்கிறதெனக் கருதி அவ்விடத்தை விரும்பி உறைகிறான் இறைவன். காவிரியாற்றின் வளத்தையும் அதனால் மிகுந்துள்ள செல்வத்தையும் கண்டு அனுபவித்த ஆழ்வார் இறைவன் விரும்பி உறைவதாக வருணிக்கிறார். ஆண்டாளும் இத்தகையதொரு வருணனையை

சந்தொடு காரகிலும் சுமந்துதடங் கள்பொருது
வந்திழி யும் சிலம்பா றுடைமாலிருஞ் சோலைநின்ற

என்னும் பாடல் மூலம் விளங்க வைத்துள்ளார்.

வண்டுகள் நிறைந்து பொழில் சூழ்ந்து அழகாக விளங்குகின்ற திருநாங்கூர் மணிமாடக் கோயிலைப் பற்றி

கந்தா ரமந்தே னிசை பா டமாடே
களிவண் டுமிழற் றநிழல் துதைந்து

மந்தா ரநின்று மணமல் குநாங்கூர்
மணிமாடக் கோயில் வணங்கென் மனமே

என்று அவர் பாடிய பாடலும் இயற்கை வளத்தை எடுத்தோதுகின்றது. எல்லா இடங்களிலும் அழகிய நல்ல உயர்ந்த சாதி வண்டுகள் தேவகாந்தாரி ராகம் பாடுகின்றன. அவ்வாறு பாடும் பாடலுக்கு மற்றொரு வகையான வண்டுகள் பக்கங்களில் இருந்து கொண்டு பின்னணி இசை இசைக்கின்றன. மேலும் மந்தார மரங்கள் நெருங்கி நின்று நிழல் தருவதுடன் நறுமணத்தையும் நல்குகின்றன என்கிறார். யானைகளின் கொம்புகளையும் அகில் மரங்களையும் வெண்சாமரைகளையும் அழகிய முத்துக்களையும் சந்தனம், இரத்தினம் போன்ற சிறந்த பொருள்களையும் காவிரியாறு தன் அலைகளால் தள்ளிக்கொண்டு வருகின்றது. ஆறு வெண்சாமரை கொணர்வதாகக் கூறுவது அரிய செய்தியாக அமைகிறது.

அலைப்புண்ட யானை மருப்பு மகிலும்
அணிமுத்தும் வெண்சா மரையோடு பொன்னி
மலைப்பண்ட மண்டத் திரையுந்து நாங்கூர்
மணிமாடக் கோயில் வணங்கென் மனமே

என்பது அவர் பாடல். காவிரியாறு திருநாங்கூரில் நேரில் பாய்வதில்லையாயினும் அவ்வாற்றின் வாய்க்கால் பெருக்கு சுற்றுப் பகுதிகளில் நிரம்பி வழிவனவாக இருந்தது. காவிரி கொணரும் பொருள்களனைத்தும் நிலவளனைச் சுட்டுவதாகவே அமைகின்றன. இவ்வாறு ஆறுகள் பொருள்களையெல்லாம் இழுத்து வருகின்ற இயற்கை எழிலை

கலைக்கொம் புங்கரி மருப்பும் இடறிக்
கலவம் மயிற்பீலியும் காரகிலும்
அலைக்கும் புனல்சேர் அரிசில் தென்கரை [26]

பலங்கள் பல திரை உந்திப் பருமணிபொன் கொழித்துப்
பாதிரிசந் தகிலினொடு கேதகையும் பருகிக்
கலங்குபுனல் அலம்பிவரும் அரிசில் தென்கரை [27]

என சுந்தரரும்

பெருகு சந்தனங் காரகில் பீலியும் பெருமரம் நிமிர்ந்துந்திப்
பொருது காவிரி வடகரை மாந்துறை [28]

என்று சம்பந்தரும் வருணித்திருப்பது காணலாம்

திருநாங்கூரெங்கிலும் தென்னை மரங்களும் மாமரங்களும் மலிந்து கிடக்கின்றன. ஓங்கி வளர்ந்துள்ள தெங்கினின்றும் தேங்காய்கள் மாமரங்களின் மீது விழவே அந்த அதிர்ச்சியினால் மாம்பழங்கள் உதிர்ந்து வீழ்கின்றன. அவற்றையெல்லாம் ஒன்றுதிரட்டி உருட்டிக் கொண்டும் மற்றும் பல வகையான மரங்களையடித்துக் கொண்டும் பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடுகின்ற காவிரியாற்றுக் கால்களையுடையது திருநாங்கூர். இதை

மடலெடுத்த நெடுந்தெங்கின் பழங்கள் வீழ
மாங்கனிகள் திரட்டுருட்டா வருநீர்ப் பொன்னி
திடலெடுத்து மலர்சுமந்தங் கிழியு நாங்கூர்த்
திருத்தெற்றி யம்பலத்தென் செங்கண் மாலே

என்று வருணிக்கிறார். திருநறையூரின் இயற்கையழகு கொஞ்சும் சூழலை வருணிக்கும் போதும் அங்கே பாயும் காவிரியாற்றையும் அது அகில் கட்டையையும் அழகிய பொன்னையும் மணியையும் கரையோரங்களில் மிகுதியாகக் கொண்டு வந்து தள்ளுவதையும் குறிப்பிடுகிறார்.

உழும் செறுவில் மணிகொணர்ந்து கரைமேல் சிந்தி
உலகெல்லாம் சந்தனமும் அகிலுங்கொள்ள
செழும்பொன்னி வளம்கொடுக்கும் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் ...

என்று அழகுறப் பாடிய பாடலைக் காண்கிறோம். மேலும் காவிரி ஒளி வீசுகின்ற ஒன்பது விதமான விலையுயர்ந்த இரத்தினங்களையும் மூங்கில் முத்துக்களையும் சாமரையையும் பொன்னையும் தன் அலைகளால் இழுத்து வந்து புள்ளம் பூதங்குடியில் சேர்க்கின்றது. அவ்வாறு கொண்டு வந்த பொருள்கள் நிறைந்து நின்ற காட்சியை

மலைத்திகழ் சந்து அகில்கனகம் மணியும் கொண்டு
வந்துஉந்தி வயல்கள்தொறும் மடைகள் பாய
அலைத்துவரும் பொன்னிவளம் பெருகும் செல்வத்து
அணி அழுந்தூர்............

என்றும் கூறுகிறார் ஆழ்வார். மலையினின்று உற்பத்தியாகி வெள்ளமாகப் பெருகி வரும் வேகத்தில் காவிரியாறு குறிஞ்சிநிலக் கருப்பொருளாகிய சந்தனம் முதலியவற்றைப் புரட்டி அடித்துக்கொண்டு அவற்றோடு மருத நிலத்துக் கழனிகளில் பாய்வதால் மிக்க வளத்தையுண்டாக்கிப் பெருஞ்சிறப்பை

திருவழுந்தூருக்கு அளிக்கிறது என்கிறார். ஆற்றின் அழகையும் அது கொணரும் பொருள்களையும் வருணிக்குமிடத்து ஆற்றின் வேகத்திற்கும் பெருக்கத்திற்கும் ஏற்ற சொற்களைப் பெய்து பாடியவர் ஆற்றின் வளத்தைக் குறிப்பதற்காக , அது பெருகிவரும்போது பொன்னைக் கொழித்துக்கொண்டு வருவதால் பெற்ற பெயராகிய 'பொன்னி' எனும் சொல்லைப் பொருத்திப் பாடியுள்ளார்.

திருவரங்கத்தணையில் பள்ளி கொள்ளும் அரங்கனைக் காவிரி தன் திரைக்கையால் அடிவருடிப் பொருள் படைத்து வணங்குவதாகவும் காட்டப்படுகிறது.

துளைக்கை யானை மருப்பு அகிலும் கொணர்ந்துந்தி முன்
திளைக்கும் செல்வப் புனற்கா விரிசூழ் தென் னரங்கமே

என்னும் பாடலின் வாயிலாகக் காவிரியின் வளத்தையும் அது இழுத்துக் கொணரும் பொருள்களையும் அவர் வருணித்திருப்பதை நோக்க ஆறும் இறைவனைத் தொழும் எண்ணத்தோடு நறுமணப் பொருள்கள் பலவற்றை இழுத்து வருவதாகக் கற்பனை நயம் தோன்றக் கூறுவதைக் காண முடிகிறது. ஆதியில் மனிதன் ஆற்றை இறைவனாகக் கருதி வழிபாடு செய்துவந்த அந்நிலையிலிருந்து மாறி ஆறே இங்கு இறைவனைத் தொழுவதாகக் கூறப்பட்டுள்ளது. இயற்கையே இறைவனை வணங்கும் சிறப்பையும் இக்காட்சியின் மூலம் எடுத்துக் காட்டுகிறார். இது பக்தி ஒன்றுக்கேயுரிய தனிச் சிறப்பெனலாம். திருமாலிருஞ் சோலையின் இயற்கையழகை விரித்துரைக்கும் வகையில்

சினைவளர் பூம் பொழில்சூழ் திருமாலிருஞ் சோலை

திங்கள் நன்மாமுகில்சேர் திருமாலிருஞ் சோலை

தேனமர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ் சோலை

தெள்ளருவி கொழிக்கும் திருமாலிருஞ் சோலை

சிலம்பிய லாறுடைய திருமாலிருஞ் சோலை

என்றெல்லாம் மலையில் நிறைந்துள்ள சோலை வளத்தையும் இழிந்து விழும் அருவியையும் சிலம்பாற்றையும் வருணித்திருக்கும் பாங்கு நினைத்து மகிழத் தக்கதாய் உள்ளது. திருமாலிருஞ்சோலை மலை சந்தன மரங்களுடன் நவரத்தினங்களையும் அழகிய மயில் தோகைகளையும் கொண்டு வந்து நிறைத்து அருவிகள் வந்து பாயுமிடமாக அமைந்துள்ளது. மூங்கில்கள் விண்ணளாவ உயர்ந்துள்ளன. உயரமாக வளர்ந்திருக்கும் மூங்கில்கள் காற்றில் அசையும்போது ஒன்றோடொன்று உராய்ந்து அருகிலுள்ள தேனடைகளில் மோதி அவற்றைக் கிழித்து, தேன் ஒழுகச்

செய்கின்றன. மலைகளில் ஆங்காங்கே இடிமுழக்கம் கேட்கிறது. சிங்கங்கள் பயங்கரமாக ஒலி எழுப்பிக்கொண்டே இருக்கின்றன. இரண்டையும் ஒன்றோ டொன்று இயைத்து இயைபுக் கற்பனையாக்கி

தடங்கடல் முகந்து விசும்பிடைப் பிளிறத்
தடவரைக் களிறென்று முனிந்து
மடங்கல் நின்றதிரும் மாலிருஞ்சோலை

என்று வருணிக்கிறார். திருமாலிருஞ்சோலையில் மேகக் கூட்டங்கள் ஆழ் கடலின் நீரை முகந்து கொண்டு விண்ணில் ஏறி இடி முழக்கம் செய்கின்றன. அவ்வொலியைக் கேட்கும் சிங்கம் அது யானையின் பிளிறல் என்று கருதி எதிர் முழக்கம் செய்கின்றது என்பதில் இருவேறுபட்ட இடங்களில் தான் கண்ட காட்சி யையும் கேட்டு அனுபவித்த குரல்களையும் முறையே இணைத்தும் தொடர்பு படுத்தியும் பாடுகிறார். இக்கருத்தையொட்டியே பின்னாளில் காவடிச் சிந்தின் ஆசிரியர் அண்ணாமலை ரெட்டியார்

கந்தரம் தொறுக்கிடந்து கந்தரம் பயந்தொதுங்கக்
கர்ச்சனை புரியும் திறல் சிங்கமே -- நெஞ்சில்
அச்சமுற விண்ணுறைமா தங்கமே [29]

என்று அமைத்து சிங்கம் முழக்கமிடுவதைக் கேட்டு தேவலோக யானை அஞ்சுகிறது என்பதாகச் செய்யுள் செய்கிறார். மீண்டும் ஆழ்வார் திருமாலிருஞ் சோலை மலையினின்று விழும் அருவிகள் சந்தனக் கட்டைகளையும் அகிற் கட்டைகளையும் இரத்தினக் கற்களையும் உருட்டிக் கொண்டு வருகின்றன என்றும் நறுமணம் மிக்க குறிஞ்சி மலர்களிலுள்ள தேனில் படிந்த வண்டுகள் இன்னோசையுடன் வட்டமிடுகின்றன என்றும் அழகுணர்வை வெளிப்படுத்துகிறார். திருக்கோட்டியூர் என்னும் தலத்தில் பாய்ந்து வரும் மணி முத்தாற்றில் நீர்ப் பெருக்குகள் குதிரை தாவிப் பாய்வது போல் தாவித் தாவி ஓடுகின்றன. நீர்ப் பெருக்கானது பொன், மணி, சாமரை, சந்தனக் கட்டை ஆகியவற்றை உந்தித் தள்ளி வருகின்றது. சோலைகளிலுள்ள வண்டுகள் செண்பக மலரையும் மல்லிகை மலரையும் தழுவி நல்ல மணம்மிக்க தேனில் வாய் வைத்துப் பருகி விளையாடுகின்றன. வண்டுகள் ஆடப்பெற்ற முல்லை, மல்லிகை இரண்டுடனும் புணர்ந்த தென்றற் காற்று அவற்றின் நறுமணத்தை முகந்து கொண்டு வந்து உலாவி ஊரிலுள்ள வீதிகளில் மணத்தைப் பரப்பிக் கொண்டிருக்கின்ற அழகிய காட்சியை

மௌவல் மாலை வண்டாடும் மல்லிகை
மாலையோடு மணைந்த மாருதம்
தெய்வநாற வரும் திருக்கோட்டியூர்

என்னும் பாடல் அடிகளால் விளக்குகிறார். திருக்கோவலூர், திருவயிந்திரபுரம் ஆகிய இரண்டு திருத்தலங்களைப் போல தில்லை என்னும் திருச்சித்திர கூடத்திற்குச் சென்று ஆங்குறையும் இறைவனை வழிபட்டவர் அத்தலத்தின் அழகுமிக்க சூழலை அனுபவித்துப் பாடுகிறார்.

சேமங்கொள் பைம்பூம் பொழில் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ர கூடம் ....

சீரார் பொழில்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்ர கூடத்து

சேடுயர் பூம்பொழில் தில்லைச்
சித்ர கூடத்து

தேனமர் பூம்பொழில் தில்லைச்
சித்திர கூடம்...

என சோலை சூழ்ந்த திருச்சித்திரக்கூடத்தை வருணிக்கின்றார். 'நிவா' என்றும் 'வெள்ளாறு' என்றும் கூறப்படும் ஆறு அவ்வூரை வலம் வருகிறது என்றும் செல்வச் செழிப்புடன் கூடிய அவ்வூர் நறுமணம் பெற்றுத் திகழ்கிறது என்றும் அது ஓடிவரும்போது வரும் வழியிலுள்ள பொருள்களையெல்லாம் இழுத்துக் கொண்டு வருகிறது என்றும் கூறுமிடத்து

கௌவைக் களிற்றின் மருப்பும் பொருப்பில்
கமழ்சந்து முந்தி நிவாவ லங்கொள்
தெய்வப் புனல்சூழ்ந் தழகாய தில்லை

என்றும்

பெருநீர் நிவாவுந்தி முத்தங்கொ ணர்ந்தெங்கும்
வித்தும் வயலுள் கயல்பாய்ந் துகள
திருநீல நின்று திகழ்கின்ற தில்லை

என்றும் அழகுற வருணிக்கிறார். சிங்கத்தோடு பொருது பிளிறுகிற களிற்றின் தந்தங்களையும் உயர்ந்து விளங்கும் சந்தன மரங்களையும் இழுத்துக்கொண்டு மலையிலிருந்து இழிதரும் ஆறு இறைவனுறை தலத்தைச் சுற்றிச் செல்வதைக் குறிப்பிட வந்தவர் வறிதே அவ்வாற்று நீரை நீரென்னாமல் 'தெய்வப்புனல்' என்று

சிறப்பித்துக் கூறுவதையும் அது பெருகி வரும்போது முத்துக்களை வயல்களில் சிதறிவிட அவற்றைக் கண்டு அங்குள்ள மீனினங்கள் அவை இன்ன தென்றறியாமல் அச்சங்கொண்டு தாவித் திரிகின்றன என்று கூறுவதையும் காண்கிறோம்.

பெருநீர் நிவாவுந்தி முத்தங்கொ ணர்ந்தெங்கும்
விந்தும் வயலுள் கயல்பாய்ந் துகள
திருநீல நின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ர கூடம் .....

என்பது அவ்வருணனை. இத்தகைய பேராறு சூழப்பெற்றிருத்தலின் அவ்வூரில் புறத்தே உணவுப் பயன் கொடுக்கும் வயல்களும் இன்பப் பயன் கொடுக்கும் சோலைகளும் நிறைந்திருந்தன.

## நெற்கதிர் அறுத்தலும் வாளை பாய்தலும் :

திருவாலி நகரின் அழகிய இயற்கைக் காட்சி ஆழ்வாரை இன்பத்தில் ஆழ்த்திவிடுகிறது. எனவே

... எறிநீர் வளஞ்செறுவில்
செந்நெற் கழை வரம்பொரீஇ யரிவார்
முகத்தெழு வாளைபோய் கரும்பு
அந்நற் காடணையும் அணியாலி ...

என்று அதுபற்றிக் கூறுகிறார். நீர் வளமுள்ள தலமாகையால் அங்குள்ள வயல்களில் செந்நெற்பயிர்கள் வானோங்கி வளர்ந்திருக்கின்றன. உழவர்கள் அவற்றை நேரே நின்று அறுக்க முடியாமல் கதிர்த்தலைகளை மடக்கி வரப்புகளில் வைத்து அறுக்கிறார்கள். அக்கதிர்களை ஒரு சேரப் பிடித்த பிடியில் அகப்பட்டுக்கொண்ட வாளை மீன்கள் அவர்கள் முகத்தில் விழுந்து அஞ்சி எழுந்து பாதுகாப்பான இடத்தைச் சென்று அடைவதற்காக அருகிலிருக்கும் கரும்புக் காட்டைச் சேர்கின்றன.

வாளையி னந்தலை யிரிய வண்டலர்
தாருடைத் தாமரை கிழிய வண்சுமை
கோளுடை யிளையவர் குழாங்கொண்டேகலிற்
பாளைவாய்க் கமுகினம் பழங்கள் சிந்துமே [30]

என்று திருத்தக்க தேவரும் தம் வருணனையில் உழவர்கள் நெற்பயிர்களை அறுக்கும் போது அங்கிருந்த வாளை மீன்கள் துள்ளிப் பாய்ந்து தாமரை மலரின் இதழ்களைக் கிழித்தன என்று விளக்குவதைக் காணுகின்றோம்.

## நாரையும் மீனும் :

திருவெள்ளியங்குடி என்னும் தலத்தைச் சுற்றிலும் தென்னை மரங்கள் ஏராளமாக வளர்ந்துள்ளன. அவற்றினின்றும் தேங்காய் நெற்றுகள் பறிப்பாரற்று விழுகின்றன. அவை நீரில் விழுந்த அதிர்ச்சியினால் அச்சம் கொண்ட மீன்கள் நடுங்கி அப்பால் ஓடுகின்றன. வயல் மடைகளில் நிறைந்துள்ள மீனை இரையாகக் கொள்வதற்காக அங்கு நின்று கொண்டிருக்கும் நாரைகள் அவற்றை நாடிச் செல்கின்றன. நாரைகள் மீனை இரையாகக் கொள்வதற்குச் செல்வனவாகக் கூறுவதன் மூலம் ஆய்ச்சியர்கள் வைத்த தயிர், வெண்ணெய், பால் ஆகியவற்றை உண்ணும்பொருட்டு ஆயர் பாடிக் கண்ணன் ஆய்ச்சியர் வீடு தோறும் சென்றமையை நினைவூட்டுகிறார்.

மையார் தடங்கண் கருங்கூந்தல்
ஆய்ச்சி மறைய வைத்த தயிர்
நெய்யார் பாலோ டமுது செய்த
நேமி யங்கை மாயனிடம்
செய்யார் ஆரல் இரைகருதிச்
செங்கால் நாரை சென்றணையும்

என்பது பாடல்.

## இருளும் ஒளியும் :

திருமாலால் ஆட்கொள்ளப்பட்டு அவனுறையும் திருத்தலங்களுக் கெல்லாம் சென்று அவனுடைய புகழைப் பாடிப் பரவியவருக்கு அவனுறையும் இயற்கைச் சூழல் உள்ளத்தில் நிறைந்து நிற்க, சிறந்த முறையில் அந்தந்தச் சூழலுக்குத் தகுந்தாற்போல் கற்பனை தோன்ற அக்காட்சிகளைக் கவினுறக் காட்டுகிறார். செல்வ வளத்தினால் ஆங்காங்குத் தோன்றும் காட்சிகள் அவருள்ளத்தைக் கவர்கின்றன. அங்கு இல்லங்களிலும் கோயில்களிலும், நீலமணி, முத்து, பவளம் ஆகியவற்றைப் பதித்திருப்பது இருள், சந்திரன், சூரியன் ஆகிய பொருள்கள் ஒருங்கிருந்த காட்சி போல அமைகிறது என்கிறார். முரணுடைய பொருள்களை ஒருங்குகூட்டிக் கூறுவது காட்சியின்பம் பயக்கிறது.

......... நீல மாலைத்
தஞ்சுடைய இருள் தழைப்ப தரளம் ஆங்கே
தண்மதியில் நிலாக்காட்டப் பவளந் தன்னால்
செஞ்சுடர வெயில்விரிக்கும்..........

என்பது பாடலாகும்.

## தத்துவப் பின்புலமுடையவை :

### மலரிட்டு வழிபடுதல் :

இறைவனை அடியவர்கள் மலர் தூவி வழிபடும் காட்சியில், இயற்கையின் இன்றியமையாத கூறாக விளங்கும் கொடி, கோடு, நீர்ப் பூக்களைப் பற்றி உரைக்கிறார்.

> கந்த மாமல ரெட்டுமிட்டு நின்காமர்
> சேவடி கைதொழு தெழும்

என்று அடியவர் மலரிட்டு வழிபடுதலைக் கண்டவர் 'மலரெட்டுமிட்டு' என்று எட்டு மலர்களைக் குறிப்பிடுகிறார். அழகிய மலரிட்டு வழிபடும்போது எட்டெழுத்து மந்திரத்தை ஓதுகிறார்கள் என்னும் கருத்தை விளக்குவதற்காக 'மலரெட்டுமிட்டு' என்கிறார். அவர் குறிப்பிடும் எட்டு மலர்களாவன கருமுகை, கற்பகம், நாழல், மந்தாரம், சௌகந்தி, செங்கழுநீர், தாமரை, தாழை என்பனவாம். மற்ற மலர்களுமிருக்க எட்டு என்பதற்குக் காரணம் எட்டெழுத்து மந்திரத்திலிருப்பவைகளை மலர்களாகக் கொண்டு அவற்றையும் முதலும் முடிவுமற்ற இறைவனுக்குத் தூவி வழிபடுதலை அறிவிப்பதற்காகவே எனலாம். 'மாமலரெட்டுமிட்டு' என்றதற்கு ''அஹிம்சை, இந்திரிய நிக்ரஹம், ஸர்வ பிராணிகளிடத்திலும் இரக்கம், பொறுமை, ஞானம், தவம், தியானம், ஸத்யம் என்று எட்டு வகையான புஷ்பங்களாகச் சொல்லப்பட்டவற்றை ஸமர்ப்பித்து'' [31] என்று இப்பகுதிக்குத் தரப்படும் விளக்கம் இங்கு நோக்கத் தக்கது.

## குறிப்புப் பொருளுடையவை :

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் ''எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே'' [32] என்றார். பொருள் குறியாத சொல்லே இல்லை என்பதற்காகப் 'பொருள் குறித்தனவே' என்று தேற்ற ஏகாரமிட்டுக் கூறினார். ஒவ்வொரு சொல்லும் தனித்தனியான பொருளைக் கொடுக்கும். சொற்கள் தொடரில் வருமிடத்து தமக்குரிய பொருளை அப்படியே வெளிப்படுத்துவதும் தமக்குரிய பொருளளவில் நில்லாமல் வேறு பொருளை வெளிப்படுத்துவதும் உண்டு. ''சொல்லும் சொற்றொடரும் தம் பொருள்களை நேரடியாக வெளிப்படையாகத்தராமல் வேறு பொருள்களைத் தருமானால் அப்பொருள்களைக் குறிப்புப்பொருள்'' [33] என்பர். அக்குறிப்புப் பொருளே செய்யுளில் வருமிடத்து 'உள்ளுறை உவமம்' எனப் பட்டது. அதன்படி வெளிப்படையாகச் சொல்லப்பட்ட பொருளின் உள்ளே உறையும் பொருள் உள்ளுறை ஆயிற்று. உள்ளுறை என்பது அகப்பாடலுக்கே உரியது என்ற

கருத்து நிலவினாலும் அதற்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் உள்ளுறை என்பது அகப்பொருளுக்கே உரியது என்று வரையறைகூறவில்லை. எனினும் ''புறத்திணைப் பொருளில் வருவன எல்லாம் ஒட்டணி அல்லது பிறிதுமொழிதல் அணி என்பதில் அடங்கும்''[34] என்று அக்கருத்து இடம் பெறுவதைச் சுட்டிக் காட்டுவர். சொல்லும் சொற்றொடரும் தம் பொருளை யன்றி குறிப்பாகப் பிறிதொரு பொருளையும் உணர்த்தும் என்பதற்கேற்ப ஆழ்வாரின் இயற்கை வருணனை பல விடங்களில் குறிப்புப் பொருளை உணர்த்தக் காண்கிறோம்.

## மயிலின் ஆட்டம் :

திருப்பிரீதி சென்று இறைவனின் அழகில் ஈடுபட்டு அவனது திருக்குணங்களில் ஆழ்ந்து விட்ட ஆழ்வாரின் மனம் அவனுறையும் இயற்கைச் சூழலையும் அனுபவித்து மகிழ்கிறது. மலைச்சிகரங்களில் மயில் நிற்பதைக் கண்டவர் மழைத்துளிகளையுடைய கருமையான மேகங்களின் முழக்கம் கேட்டு மயில்கள் மகிழ்ச்சியுற்றுத் தம் தோகைகளைப் பரப்பி ஆரவாரத்துடன் தம் வயிறு மலையில் படியும்படி உயர்ந்த சிகரங்களுக்குத் தொடர்ந்து ஏறி நின்று அம்முழக்கத்திற்கு ஏற்ப நடனம் செய்வதாகப் பாடி மகிழ்கிறார். மயில் நடனமாடுவதைக் கூற விழைந்தவருக்கு நடனத்திற்குத் தகுந்தாற் போன்ற சொற்கள் துணை செய்கின்றன.

ஆலி மாமுகி லதிர்தர அருவரை
அகடுற முகடேறி
பீலி மாமயில் நடஞ்செயும் தடஞ்சுனைப்
பிருதிசென் றடைநெஞ்சே

என்னும் பாடலில் மயிலின் ஆட்டத்தை 'அகடுற முகடேறி' என்று அழகாக வருணிக்கிறார். மழைத்துளிகளுடன் கூடிய கரிய மேகங்களின் ஓசை கேட்டு மயில்கள் பெருமகிழ்ச்சி அடைந்து தம் பீலிகளைப் பரப்பி ஆரவாரத்தோடு தம் வயிறு மலையில் பொருந்த உயர்ந்த மலையுச்சிக்கு நடந்தேறிச் சென்று அவ்வோசைக்கு ஏற்றபடி ஆடுகின்றன என்பது வெளிப்படையாக இக்காட்சியின் மூலம் அறியும் பொருளாகும். ஆயின் இதன் உள்ளீடாக இன்னுமோர் அரிய கருத்தையும் பெற வைக்கிறார் ஆழ்வார். ஆண்டவனின் அருள்பாடி மகிழ்ந்து அதை எப்போதும் எதிர்நோக்கியிருக்கும் அடியவர்கள் அவ்வருளை ஓசையுண்டாக ஆண்டவன் அருளியபோது பெற்றுப் பேரானந்தம் அடைகிறார்கள் என்பதாகும் அது.

புலவர் தாம் கூற விரும்பும் கருத்தை விளக்கும்போது அக்கருத்துக்கேற்ற ஓசையின்பத்தைச் சொற்கள் வாயிலாக ஊட்டுவது அரிய கலையாகும்.

இக்கலையில் வல்லவர் தனிப்பாடல் ஆசிரியராகவோ காப்பிய ஆசிரியராகவோ இருக்கலாம். அவ்வாறு ஓசை மெருகூட்டிச் செல்லுமிடங்களும் தொடர்ச்சியாகப் பல பாடல்கள் அல்லது ஒரேயொரு பாடல் என்னும் அளவிலோ அமைந்துவிடலாம். பாடல் முழுவதிலுமோ பாடலின் ஒரு பகுதியிலோ அதிலுள்ள ஓரிரு சொற்களிலோ கூட அது வெளிப்பட்டு நிற்கலாம். சிலப்பதிகார மனையறம்படுத்த காதையில் கோவலன் கண்ணகி கூடியிருந்த சிறப்பைக் குறிக்கும்போது இளங்கோவடிகள் "சுரும்புணக் கிடந்த நறும்பூஞ்சேக்கை"[35] என்கிறார், வண்டு ஒலிக்கும் நறிய பூப் பரவிய சேக்கை என்பதை உணர்த்த வண்டு ஒலி செய்வது போன்றே 'சுரும்பு' என்னும் சொல்லைப் பெய்கிறார். சுரும்பு, நறும்பூ என்னும் சொற்களை மாறி மாறி ஒலித்துப் பார்ப்பின் அதனாலுண்டாகும் ஒலி வண்டின் ஒலியை ஒத்திருத்தல் அறியத் தக்கது. இதே போன்று அண்ணாமலை ரெட்டியாரும்,

மூசுவண்டு வாசமண்டு காவில்மொண்டு தேனையுண்டு
மோகனமு காரிராகம் பாடுமே
மையலாகவே பெடையுடனே கூடுமே[36]

என்று தேனுண்ட வண்டின் ஓசையைக் குறிக்குமிடத்து வண்டின் ஓசையையும், நறுமணத்தின் தன்மையையும் குறிப்பதற்கு மூசு, வாசம் என்னும் சொற்களை அமைத்திருப்பது காண்கிறோம். இவ்வாறே திருமங்கையாழ்வார் பாடலிலுள்ள 'அகடுற முகடேறி' என்னும் தொடரை மீண்டும் மீண்டும் ஒலித்துப் பார்க்குமிடத்து நடனத்திற்கேற்ற தாளலயம் பொருந்தப் பெற்று பாடல் ஓசையின்பத்தைக் கொடுப்பதை உணர்கிறோம். பள்ளம், உயர்ச்சி என்னும் பொருள்களைத் தரும் அகடு, முகடு என்னும் சொற்களை உறழ்ந்து காணும்போது எதுகையின்பம் பயப்பதையும் காணுகின்றோம். இங்ஙனம் இப்பாடலின் பொருளோடு அதற்கு அமைந்த சொற்களின் ஓசைநயம் படிப்போர் உள்ளத்தில் பதிந்து ஆழ்வார் இயற்கையில் அனுபவித்த அதே உணர்ச்சியைப் படிப்பவரும் பெற வைத்துவிடுகிறது. 'அகடு' என்பதனோடு 'உற' என்னும் சொல் சேர்ந்திருப்பதால் மயில் மலையுச்சிக்கு ஏறிச் செல்லும்போது தன் வயிற்றை அந்நிலப்பகுதியில் நன்கு பொருத்தி மேலேறிச் செல்லும் காட்சியைக் குறிப்பாக இதன் மூலம் விளக்குகிறார்.

### *சிங்கமும் யானையும் :*

மயிலின் மலை ஏற்றத்தை மாண்புற வருணித்தவர் யானைக் கூட்டங்கள் படுத்திருப்பதையும், சிங்கங்கள் உலாவுவதையும், வண்டுகள் ஒலியெழுப்புவதையும் வேங்கை மரங்கள் பூத்துக் குலுங்குவதையும் கண்டு அனுபவித்து

கற்பனைச் சிறகை விரிக்கிறார். ஒருபுறம் காட்டின் அரசர்களான சிங்கங்கள் உலாவிக் கொண்டிருக்க, மலைகளைப் போன்றனவும் வலிமைமிக்கனவுமான யானைகள் அஞ்சியவண்ணம் அமைதியாகப் படுத்திருந்தன. மற்றொருபுறம் வண்டுகளின் இன்னிசை தாலாட்டுப் பாடலாக அமைய, நறுமணம் நிறைந்த வேங்கை மலர்களாலான படுக்கையில் ஆண் யானைகள் தம் பிடிகளோடு படுத்து உறங்கின.

கடிகொள் வேங்கையின் நறுமல ரமளியின்
மணியறை மிசை வேழம்,
பிடியி னோடுவண் டிசைசொலத் துயில்கொளும்
பிருதிசென் றடைநெஞ்சே

என்று பாடியவர்,

விலங்கல் போல்வன விறலிருஞ் சினத்தன
வேழங்கள் துயர்கூர
பிலங்கொள் வாளெயிற் றரியவை திரிதரு
பிருதிசென் றடைநெஞ்சே

என்று பாடுமுகத்தான் இரவென்றும் பகலென்றும் வேறுபாடறிய முடியாமல் எங்கும் எப்போதும் இருளே பரவி விளங்கும் மலைக்குகைகளில் அசையாமற் கிடக்கும் மலைப்பாம்புகள் பசிமேலாகி நிற்க, பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கின்ற காட்சியைக் காட்டுகின்றார். இக்காட்சி வேறு வகையில் முயன்று அதன் மூலமாகத் தமக்குக் கிடைக்கும் பொருளைத் துய்க்காது ஆண்டவன் அருள் காரணமாகக் கிடைக்கும் பொருளைத் துய்ப்பதே தகும் என்று கருதும் தொண்டர்களின் மனக்கருத்தைப் புலப்படுத்துவதாக அமைகிறது.

## மாதவிக்கொடிகள் :

கற்பனை கலந்தால் தான் இயற்கை வருணனை சிறக்கும் என்பதை ''இயற்கையை உள்ளவாறே பாடித் தருவதானால் அது நமக்கு வேண்டாவே ; இயற்கை நம் கண்ணெதிரே உள்ளபோது, அதை ஏன் மீண்டும் அப்படியே சொற்களால் அல்லது வண்ணத்தால் காட்ட வேண்டும் ; கற்பனையும் சேர்த்துக் குழைத்துக்காட்டும் கலையைத் தான் நாம் நாடுகிறோம்'' [37] என்னும் கூற்று விளக்குகிறது. ஆழ்வாரும் இக்கூற்றுக்குப் பொருந்த காட்சியை அமைக்கிறார். நறுமணம் நிறைந்த மாதவிக் கொடிகள் உயரமாக வளர்ந்திருப்பதை உயர்வு நவிற்சி, தற்குறிப்பேற்றம் ஆகிய இரண்டும் கலந்த விருந்தாகப் படைக்கிறார்.

மணங்கொள் மாதவி நெடுங்கொடி விசும்புற
நிமிர்ந்தவை முகில்பற்றி,
பிணங்கு பூம்பொழில் நுழைந்துவண்டிசை சொலும்
பிருதிசென் றடைநெஞ்சே

என்னும்போது உயரமாக வளர்ந்து நறுமணம் வீசும் மாதவிக் கொடிகள் வானளாவ வளர்ந்திருக்கின்றன என்றும் அவ்வாறு வளர்ந்தவை தாம் படர்வதற்குக் கொள் கொம்பு வேறு அகப்படாமல் மேகங்களைக் கொள் கொம்பாகப் பிடித்து வளர்ந்துள்ளன என்றும் மேகங்கள் விரைந்து செல்லும்போது ஒரே இடத்தில் நிற்பதாகிய மாதவிக் கொடிகள் அவற்றோடு செல்ல முடியாமல் போராடுகின்றன என்றும் கொடிகள் தம்மைப் பற்றிக்கொண்டு தாம் போகமுடியாதபடி செய்வதால் மேகங்கள் அவற்றோடு பிணங்குகின்றன என்றும் மேகத்துளிகள் மேலே விழுவதால் மலர்கள் பூத்து விளங்க அங்கே தேனருந்துவதற்கு நுழைந்த வண்டுகள் இசை எழுப்புவது அவற்றின் பிணக்கையும் போராட்டத்தையும் பாடுவதாகிறது என்றும் கூறுகிறார். இங்கு இயற்கை வருணனை குறிப்புப் பொருளாக அமைந்து இறைவனின் தன்மையை உணர்த்துவதைக் காணமுடிகிறது. மாதவிக் கொடிகள் மாதவன் தேவியரான திருமகள், பூமகளாகவும் அவை கொள்கொம்பாகப் பற்றின மேகக் கூட்டம் நீல நிறம் கொண்ட இறைவனாகவும் மாதவிக் கொடிக்கும் மேகத்திற்கும் ஏற்பட்ட பிணக்கு அவர்களிடை ஏற்பட்ட ஊடலாகவும் இன்னிசை எழுப்பும் வண்டுகள் இறைவனைப் பற்றிப் பாடும் பக்தர்களாகவும் அமையுமாறு விளக்குகிறார். திருமாலைச் சார்ந்து நிற்கும் திருமகள் உயிர்களுக்காக அவனிடம் பேசி அவனை இணங்கச் செய்வதையும் பெருமைமிக்க கணவன், மனைவியரிடை மகிழ்ச்சி ஏற்படுவதையும் இது குறிக்கிறது.

## கரும்பின் வளர்ச்சி :

திருக்கோவலூரிலுள்ள சோலைகளில் கோங்க மரங்களும் சுரபுன்னை மரங்களும் குரா மரங்களும் நிறைந்து காணப்படுகின்றன. அம்மரங்களில் பூத்துக் குலுங்கும் மலர்களில் கள்ளுண்டு திளைத்த மகிழ்ச்சியில் வண்டுகள் கூட்டமாக அமர்ந்து பாடுகின்ற பாட்டுக்களையே விளை நீராகக் கொண்டு வயல்களில் கரும்புகள் வளர்கின்றன என்கிறார்.

கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்
குழாவரிவண் டிசைபாடும் பாடல்கேட்டு
தீங்கரும்பு கண்வளரும் .....

என்பதே அவ்வருணனை. கரும்புக்கு நீர் பாய்ச்சப் பாய்ச்ச அது கணுக்கள் விட்டு

வளருவது போல வண்டுகளின் இசைப் பாடலாகிய இனிய நீர் பாயப்பெற்று கரும்புகளின் கணுக்கள் வளரப்பெறுகின்றன. இன்னிசையால் பயிர்கள் வளரும் என்று தற்கால அறிவியலார் கூறும் உண்மையை நெடுங்காலத்துக்கு முன்பே குறிப் பிட்டிருக்கின்றமை நினைந்து மகிழத்தக்கது. 'கண்வளரும்' என்பதற்கு 'உறங்கும்' என்னும் பொருளும் உண்டு. கண்ணபிரான் குழலூதிய காலத்தில் இயங்குகின்றனவும் இயங்காதனவுமாகிய பொருள்கள் யாவும் குழலிசையில் ஈடுபட்டு மெய்ம்மறந்து நின்றது போலவே வண்டுகள் பாடும் இசையைக் கேட்டு அஃறிணைப் பொருளாகிய கரும்பும் அசைவற்று நின்றது. இங்கு கரும்பு என்பதை இறைவனாகவும் வண்டுகளை பக்தர்களாவும் வண்டு பாடும் இசையை பக்தர்கள் பாடும் பாமாலையாகவும் வண்டிசை கேட்டுக் கரும்பு அசைவற்று நிற்பதை பக்தர்களின் நெஞ்சுருக்கும் பாமாலை கேட்டு இறைவன் மெய்ம்மறந்து நிற்பதாகவும் பொருள் கொள்ள முடிகிறது.

### மந்திக்கூட்டம் :

மரங்களில் தாவித் திரிந்து கீசுகீசென்று பேரோலி செய்து பலா மரத்தின் இனிமையான கனிகளை உண்பதுமாயிருக்கும் குரங்குகள் குதித்து விளையாடித்திரிந்து சுதந்திரமாக அக்கனியைச் சுவைக்கும் சோலைகள் சூழ்ந்தது திருவயிந்திரபுரம்.

பொன்மலர் திகழ்வேங்கை
கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு
குரக்கினம் இரைத்தோடி
தேன்க லந்ததண் பலங்கனி நுகர்தரு
திருவயிந் திரபுரமே

என்பது அக்கூற்று. மரத்துக்கு மரம் தாவிக்கொண்டு திரியும் குரங்குகள் பலாப் பழத்தைக்கண்டு அதை உண்பதில் ஈடுபடுகின்றன. ஒரு பலனிலிருந்து மற்றொரு பலனை நாடிக்கொண்டே போகும் விவேகமற்றவர்களுக்கும் திருமால் தன் திருமேனியைக் காட்டி மகிழச் செய்வதை இந்நிகழ்ச்சியின் மூலம் குறிப்பால் உணர்த்துகிறார் ஆழ்வார்.

பலவிற் சேர்ந்து பழமார் இனக்கலை [38]

என்னும் குறுந்தொகை

முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன் [39]

என்னும் அகநானூறு பலவின் பழங்களைக் குரங்குகள் பிடுங்கி சிதைத்து

உண்டு மகிழ்வதை

கீட்பலவும் கீண்டு கிளைகிளையின்
மந்திபாய்ந்து உண்டுவிண்ட
கோட்பலவின் தீங்கனியை மாக்கடுவன்
உண்டுகளும் குறும்ப லாவே [40]

ஏறி மாவின் கனியும் பலவின் இருஞ் சுளைகளும்
கீறி நாளும் முசுக் கிளையொடுண்டுகளும் கேதாரமே [41]

என்னும் சம்பந்தர் தேவாரம் ஆகியவை பலவின் பழங்களைக் குரங்குகள் பிடுங்கி சிதைத்து உண்டு மகிழ்வதையே காட்டுகின்றன. மந்திகள் பலாக்கனி உண்டு மகிழ்வதாக வருணிக்கப்படும் காட்சி காலந்தோறும் இடம்பெறுவதைக் காண்கிறோம். பிறிதோரிடத்து இயற்கைக் காட்சியில் ஈடுபட்டு பெண் குரங்கு உட்கார்ந்த நிலையில் வாழைப் பழங்களை உண்டு மகிழ்ந்து தனது குட்டியை அணைத்துக்கொண்டு அவ்விடம் விட்டு அகன்றுபோய் மாமரக் கிளைகளில் தங்கியிருக்கும் காட்சியை,

குந்தி வாழையின் கொடுங்கனி நுகர்ந்துதன்
குருளையைத் தழுவிப்போய்
மந்தி மாம்பணைமேல்வைகு நாங்கூர்
வண்புரு டோத்தமமே

என்று வருணித்திருக்கிறார். குரங்குகளின் ஆட்டம் தனிப்பட்ட வகையிலமைந்தது. அவை தாவுவதும் மனிதரை ஒத்த செயல்கள் பலவற்றைச் செய்வதும் வேறெந்த விலங்குகளாலும் செய்ய முடியாதவை. குரங்குகள் மரத்துக்கு மரம் தாவுவதும் பலா, வாழைப் பழங்களைத் தின்று மகிழ்ந்து குட்டிகளைத் தூக்கிக்கொண்டு ஓடியாடி மதுவுண்டு மயங்கிக் கூத்தாடுவதுமாகிய குரங்குகளுக்குரிய ஒரே படித்தான இயல்பு விளக்கப்படுகிறது.

## செந்நெல்லும் அன்னமும் :

திருவயிந்திரபுரத்தின் மருத நிலப் பகுதியில் தாமரை மலர்களையும் அவற்றில் அழகே உருவெடுத்த அன்னங்கள் அமர்ந்திருக்கின்றமையையும் கண்டு அக்காட்சியில் உள்ளுறைக் கருத்து மிளிர,

அன்ன மாமல ரரவிந்தத் தமளியில்
பெடையொடு மினிதமர
செந்நெ லார்கவ ரிக்குலை வீசுதண்
திருவயிந் திரபுரமே

என்று கூறுகிறார். தண்ணிய அழகிய பொய்கை ஒன்றில் செந்தாமரை மலர்கள் வனப்புடன் காட்சி தருகின்றன. அம்மலர்களில் அன்னப் பறவை பெண் பறவையோடு இனிதே அமர்ந்திருக்கின்றது. செந்நெற்பயிர்கள் அவற்றுக்கு சாமரம் வீசுகின்றன என்பது பாடலில் வெளிப்படையாகக் காணப்படும் கருத்தாகும். இக்காட்சியில் மறைபொருளாக தம் துணைவியாம் திருமகளுடன் அமர்ந்திருக்கும் திருமாலையும் அவ்விருவருக்கும் பணி செய்யும் அடியார் கூட்டத்தையும் உணர்த்துகிறார். தாமரை மலர்வதும் அன்னப் பறவைகள் நிறைந்திருப்பதும் செந் நெற்கதிர்கள் காற்றில் ஆடுவதும் வயற் புறங்களில் காணப்படும் காட்சிதான் என்றாலும் ஆழ்வாரின் மனத்தை அது பெரிதும் கவர்கிறது. எனவே மீண்டும் அக்காட்சியை வருணிக்க நினைத்தவருக்கு திருக்கண்ணங்குடியின் இயற்கை வளம் கை கொடுக்கிறது. அவ்வியற்கைக் காட்சியில் மனம் பறி கொடுத்தவருக்கு வெண்கொற்றக் குடையும் நினைவுக்கு வர,

அன்னமென் கமலத்தணி மலர்ப்பீடத்தலை
புனலிடைக் குடைநீழல்
செந்நெலொண் கவரியசைய வீற்றிருக்கும்
திருக்கண் ணங்குடி

என்கிறார். அதாவது மென்னடை பயிலும் அன்னங்கள் தாமரை மலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கின்றன. தாமரை இலை வெண்கொற்றக் குடையாக உள்ளது. செந்நெற்கதிர்கள் சாமரை வீசுகின்றன. அவர் அரசரானமையால் அரியாசனமும் வெண்கொற்றக் குடையும் சாமரையும் நினைவுக்கு வருகின்றன. திருவெள்ளியங்குடி பற்றிய விளக்கத்திலும் இதையொத்த கருத்து காணப்படுகிறது. மிகுதியாய் வளர்ந்து நறுமணம் கமழும் தாமரை மலர்களின் இருபுறங்களிலும் கரும்புப் பயிர்களும் நெற்பயிர்களும் அசைகின்றன என்பதன் வாயிலாக, திருமாலும் திருமகளும் சிங்காதனத்தின்மீது எழுந்தருளியிருக்க, தெய்வ மகளிர் அவர்களுக்கு சாமரம் வீசுவதை உணர்த்துகிறார். இத்தகைய வளனும் இன்பமும் நிறைந்ததொரு கவின்மிகு காட்சியை,

அரும்புயர்ந்த அரவிந்தத் தனிமலர்கள் ஏறி
அன்னங்கள் விளையாடும் அகன்துறைகள் அருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கி விளை கழனிக்
கானாட்டு முள்ளூரில் கண்டு தொழு தேனே [42]

எனக் காட்டுவார் சுந்தரர். தாமரை மேல் அன்னம் வீற்றிருக்கும் காட்சியை ஞானசம்பந்தர்,

வண்டாமரை மலர்மேல்மட அன்னம்நடைபயில
வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம்மிழ லையே [43]

என்று கூறுவார்.

## களை பறிக்கும் பெண்டிர் :

இயற்கை அழகைக் கண்டு அதை உள்ளவாறே கூறாமல் கற்பனை உணர்ச்சி ஆகியவை கலந்து அமைவதாய் காட்சிகள் விளங்குகின்றன. அவ்வாறாய காட்சிகள் கற்போர் நெஞ்சைக் கவரும் வகையில் அமைந்திட உவமைகள் உறுதுணையாகின்றன. கழனிகளில் களை பறிக்கும் கடைசியர்கள் பயிர்களிடையே உள்ள நெய்தல், குவளை மலர்களை தம் கண்களாகவும் சிவந்த ஆம்பல் மலர்களை வாயாகவும், தாமரை மலர்களை முகமாகவும் நினைத்து களைபறியாமல் அவற்றுக்கு ஊறு ஏற்படாவண்ணம் அவ்வயல்களை விட்டே வெளியேறுகின்றனர்.

.......... நெய்தலோடு
மையணைந்த குவளைகள் தம்கண்களென்றும்
மலர்க்குமுதம் வாயென்றும் கடைசிமார்கள்
செய்யணைந்து களைகளையா தேறும்காழிச்
சீராம விண்ணகரே

என்பது அப்பகுதி. இவர்கள் களை பறிக்காவிடினும் நிலம் விளைவதில் குறையில்லை. குவளை, ஆம்பல் போன்ற பூக்கொடிகளை விட்டாலும் மற்ற களைகள் களையப்பெறும். மருத நிலப் பெண்கள் சில களைகளைக் களைந்து சிலவற்றைக் களையாமல் விடுவது இராமாவதார காலத்தில் திருமால் அசுரகுலம் முழுவதையும் அழிக்காமல் சிலரை விட்டு விடுவதை நினைவூட்டுகிறது. சீராம விண்ணகரம் நீர்வளம், நிலவளம் மிக்கதாய் விளங்க, அதில் ஈடுபட்ட ஆழ்வார் கற்பனை நயம் தோன்ற சொல்லாற்றலால் இலக்கியமாக வடிக்கிறார். படிப்பவர் உள்ளத்து அது பசுமரத்து ஆணியாய் பதிந்து விடுகிறது. இதே போன்றதொரு கற்பனையை களை பறிப்பதற்காக வயலில் இறங்கி வேலை செய்யும் உழவர்கள் ஆங்கு வளர்ந்திருக்கும் குவளை, தாமரை போன்ற மலர்கள் தங்களுடைய காதலியரின் முகத்தையும், கண்ணையும் நினைவூட்டுவதாக எண்ணி மயங்கி அவற்றைப் பறிக்காமல் விட்டு விடுவதாக திருத்தக்க தேவர் தம் நூலான சீவக சிந்தாமணியில் கூறுகிறார்.

கண்ணெனக் குவளையும் கட்ட லோம்பினார்
வண்ணவாண் முகமென வரையி னுட்புகார் [44]

என்பதே அது. இங்கு தாமரையும் குவளையும் கவிஞர்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்து அழகுணர்ச்சியைத் தூண்டிவிட அதுவே கற்பனையுடன் கலந்து அழகிய காட்சியாக மலர்ந்திருப்பதைக் காண முடிகிறது.

## கரும்பாலைகள் :

சீராம விண்ணகரினின்று தம் நாடான திருவாலியில் எழுந்தருளியிருக்கும் பெருமானை மங்களாசாசனம் செய்யச் சென்ற ஆழ்வார் அதுவரையில் அனுபவித்த இடங்களை விட அவ்விடத்தில் அதிகப் பற்றுக் கொண்டவராய் இயற்கை எழிற் காட்சிகளை அழகுற விதந்தோதுகிறார்.

சோலைத் தலைக்கண மாமயில் நடமாட,
மழைமுகில் போன்றெழுந்து எங்கும்
ஆலைப் புகைகமழும் அணியாலி யம்மானே

என்பது பாடல். பூஞ்சோலைகளில் அழகிய மயில்கள் கருப்பஞ்சாறு காய்ச்சும் போது உண்டான புகையை மேகம் என்று நினைத்து ஆடின. சாறு காய்ச்சும் போது எழும் நறுமணம் எங்கும் பரவுகிறது. கன்னல் போன்ற இனிமையான அருள் தரும் இறைவன் எழுந்தருளியுள்ள திருவாலியில் கன்னல் அளவின்றிப் பெறும்படி கரும்பாலைகள் உள்ளன. அதனின்று கருப்பஞ்சாறு காய்ச்சப்படும் போது கிளர்ந்தெழும் புகையின் மணம் நறுமணத்தின் இருப்பிடமான இறைவனின் மணம் போலாக, அப்புகைத்திரள் அவனுக்கு உவமையான நீர் கொண்ட மேகம் போல உயர்ந்து ஊர் முழுவதும் பரவ, அதைக் கண்டு முகிலென்றே மயில்கள் ஆடுவது போல பக்தர்கள் இறைவனே பரவியதாகக் கொண்டு ஆடுகின்றனர்.

## அன்னமும் பொய்கையும் :

ஆலி நாட்டிலுள்ள சோலைகளில் புன்னையும் ஞாழலும் நெருக்கமாக வளர்ந்திருக்கின்றன. சோலைகளிலும் அவை சூழ்ந்த பொய்கைகளிலும் எல்லா விடத்திலும் உலவித் திரிந்த அன்னங்கள் யாவும் ஒருங்கு கூட தாமரைப் பூக்களில் அமர்கின்றன என்று பாடுகிறார். புன்னை, ஞாழல் முதலானவை நிறைந்து வளம் செறிந்த சோலைகளிலும் அருகிலுள்ள பொய்கைகளிலும் அன்னங்கள் திரள் திரளாகக் கூடி விடாமல் சுற்றித் திரிவது போலத் தாமும் பல பெண்களின் அழகையும் குணத்தையுமே சிந்தித்து சுற்றிக் கொண்டிருந்தவர் இப்போது அத்தகைய சிந்தனையுடையவராயிருந்ததையே மறந்து போம்படி இறைவன் செய்ததாகவும் அன்னமானது அமைதியாகத் தாமரைப் பூவில் அமர்ந்திருப்பது

போல பெண்களிடம் போனது தவறு என்று இறைவனிடம் வந்ததாகவும் அவருடைய திருவடிகளே உன்னதமானதென்று தெளிந்ததாகவும் இவ்வியற்கை வருணையால் பெறவைக்கிறார்.

### வண்டு அளைதல் :

இளமையான வண்டுகள் நறுமணம் வீசுகின்ற செண்பகம், மல்லிகை ஆகிய மலர்களிலுள்ள தேனை உண்டு பின்னர் அவற்றை விட்டு அப்பால் சென்று தென்னம் பாளையின் இளம் தாதுக்களை அளைந்து விளங்கும் இயற்கைக் காட்சியை,

கொங்கு செண்பக மல்லிகை மலர்புல்கி
இன்னிள வண்டு போய், இளந்
தெங்கின் தாதளையும் திருவாலி யம்மானே

என்னும் பாடல் காட்டுகிறது. அடியவராகிய தம்முடைய மனம் இளந்தெங்கின் தாது போன்றது என்பதையும் செண்பகம், மல்லிகையை விட்டு அவற்றிலும் மேலான இனிப்புடைய இளந் தெங்கின் இனிய தாதுவையே முடிவில் வண்டுகள் அளைவதுபோல் பல தலங்களை இருப்பிடமாகக் கொண்டிருந்தாலும் அவற்றையெல்லாம் விட்டு விட்டு தம்முடைய மனத்தில் தான் வந்து புகுவான் என்னும் கருத்தையும் இவ்வியற்கைப் புனைவில் பொதிந்துள்ளார். அடியார் மனமே ஆண்டவனுறையும் கோயில் என்னும் கருத்தையும் இங்குப் பெற வைக்கிறார்.

### மீன்களும் தாமரையும் :

சாளக்கிராமச் சோலைகளிலுள்ள நீர் நிலைகளில் மீன்கள் துள்ளியெழுந்து தாமரையில் பாய அவ்வேகத்தில் அது மலர்கின்றது. அதை விளக்குமுகத்தான்

வண்டார் பொழிலின் பழனத்து
வயலி னயலே கயல்பாய
தண்டா மரைகள் முகமலர்த்தும்
சாளக் கிராம மடைநெஞ்சே

என்று அத்தலத்திற்குச் செல்லுமாறு நெஞ்சுக்குரைப்பதாய்க் கூறுகிறார். ''கவிஞன் தான் பெற்ற உணர்ச்சியைப் பிறரும் அடையவேண்டும் என்ற குறிக்கோளோடு வேலை செய்கிறான். அம்முயற்சியில் வெற்றி பெற்றுத் தன் உணர்ச்சியைத் தன் கலை மூலம் பிறருக்கு அளிக்கும் அந்நிலையில் அவன் சிறந்த கலைஞன்

ஆகிறான்''[45] என்னும் கூற்று ஆழ்வாருக்குப் பொருத்தமாக அமைகிறது. திருமாலைப் பாடிப் பரவும் அடியாராக திருத்தலம் தோறும் செல்பவர் சிறந்த கலைஞராகவும் மாறி விடுகிறார். சாளக்கிராம வயல்களிலுள்ள மீன்கள் அந்த இடங்களை விட்டு அருகில் வண்டுகள் நிறைந்துள்ள சோலைகளுக்கிடையே உள்ள பொய்கைக்கு வந்து சேர்கின்றன. அவற்றின் உடல் பட்டு தாமரைகள் மலர்கின்றன. தகுந்த இடத்திற்கு வந்து சேர்ந்தன என்று தாமரைகள் மலர்ந்ததாகக் காட்சி உள்ளது. பெண்களின் முகத்திற்கு ஒப்பாகத் தாமரை மலர்களைக் குறிப்பது இலக்கிய வழக்காதலின் அம்மலர்கள் மலர்வதை 'முகமலர்த்தும்' என்றார். முகம் போல விளங்கும் அதை முகமாகவே உருவகித்து அது விரிவதை 'முகமலர்த்தும்' என்கிறார். வண்டிசையாகிய வேதங்கள் முழங்க, கயல்களாகிய அடியவர்கள் தாமரையாகிய இறைவனிடம் அணுகுவர் என்னும் உள்ளுறைக் கருத்தை உடையதாகத் திகழ்கின்றது இப்பாடல். திருஞான சம்பந்தரும் இதே போல்வதான காட்சியைத் தருகிறார்.

மான்பாய வயலருகே மரமேறி மந்திபாய்
மடுக்கள் தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலர்த்தும் திருவையாறே[46]

என்பதாகும் அது.

### வாளை மீனின் அச்சம் :

திரு வெள்ளியங்குடித் தலத்தின் வயல் வளம் மீன்கள் பற்றிய அச்சத்தைக் காட்டுவதாக உள்ளது.

ஏர்நிரை வயலுள் வாளைகள் மறுகி
எமக்கிட மன்றிதென் றெண்ணி
சீர்மலி பொய்கை சென்றணை கின்ற
திருவெள்ளி யங்குடி அதுவே

என்பது அவ்விளக்கம். வயல்களில் உழவுத் தொழில் இடைவிடாது நடந்து வருகின்ற காரணத்தால் அது தாம் அமைதியாய் வாழ்வதற்கு ஏற்ற இடமன்று என அஞ்சிய வாளை மீன்கள் அச்சமின்றி வாழ்வதற்காகப் பொய்கைக்கு ஒடுகின்றன. மனைவி மக்களுடன் வாழ்கின்ற இல்லற வாழ்க்கை, துன்பத்தைத் தரும் என்று எண்ணி அதை விட்டு இன்பம் நல்கும் பரமபதத்தில் வாழ விரும்புகின்ற அடியார்களின் நிலையை இது உணர்த்துகிறது.

### சோலையின் அழகு :

திருநாங்கூர் மணிமாடக் கோயிலைச் சுற்றியுள்ள சோலைகளைப் பற்றிய வளம்

குழையாட வல்லிக்குலமாட, மாடே
குயில்கள், நீடுகொடிமாடம் மல்கு
மழையாடு சோலை மயிலாலும்

என்று குறிப்பிடப்படுகிறது. சோலைகளிலுள்ள இலைகள் அசைவது காதுகளில் அணிந்திருக்கும் குழை ஆடுவது போன்றிருக்கிறது. கொடிகள் காற்றில் ஆடுவது பெண்கள் நாட்டியமாடுவது போன்று உள்ளது. அதற்கேற்ப குயில் கூவ மேகங்களைக் கண்ட மயில்கள் நாட்டியமாடுகின்றன என்று கூறுவதன் வாயிலாக, கார்மேக வண்ணனாம் இறைவனைக் கணடு பக்தர்கள் இசைபாடி ஆடுகின்றனர் என்னும் கருத்தைப் பெற வைக்கிறார். இத்தகையதொருவருணனையை இளங்கோவடிகளும் சிலப்பதிகாரத்தில் கூறுகிறார். சோலைகளிலுள்ள வண்ண மயில்கள் வான்முகிலைக் கண்டு மகிழ்ந்து ஆடுகின்றன என்றும் கீதமினிய குயில்கள் தாமே ஆர்வத்தோடு இசை பாடுகின்றன என்றும் அதில் குறித்துள்ளார்.

பூவார் சோலை மயிலாலப் புரிந்து குயில்கள் இசைபாட
காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி

என்பதாகும் அது.

### அறுவடை செய்தல் :

அறுவடைக் காலத்தில் பயிர்களை அறுக்கும்போது பயிர்களோடு சேர்ந்து தாமரைகளும் மீன்களும் அறுபடுகின்றன. திருநாங்கூர் அருகில் கடல் உள்ளதால் கடலலைகள் அங்கு அடித்து வரும்போது முத்துக்களையும் இழுத்துவந்து விட அம்முத்துக்களை மீன்கள் விழுங்கியிருக்க வேண்டும். அதனால் பயிர்களுடன் சேர்ந்து மீன்கள் அறுபடும்போது அவற்றின் வயிற்றிலிருந்து முத்துக்கள் உதிர்கின்றன.

சேணிடங்கொள் மலர்க்கமலம் சேல்கயல்கள் வாளை
செந்நெலொடு மடுத்தரிய உதிர்ந்தசெழுமுத்தம்
வாள்நெடுங்கண் கடைசியர்கள் வாருமணி நாங்கூர்
அரிமேய விண்ணகரம் ...

என்பது பாடல். பயிர்களோடு சேர்ந்து கமலமும் மீனும் அறுபடுவது இராமாவதாரத்தில் தலைகளோடு தோள்களும் அறுபட்ட இராவணன் கோலத்தை

உணர்த்துகிறது. இப்பாடலில் மருத நிலத்தையும் நெய்தல் நிலத்தையும் இணைத்துப்பாடி இயற்கையை வருணித்திருப்பது காணலாம்.

*குருகுகள் :*

வளம்மிக்க திருவழுந்தூரின் சிறப்பைப் புலப்படுத்துமுகமாக .

நீரில் பணைத்த நெடுவாளைக்கு அஞ்சிப்போன குருகினங்கள்
ஆரல்கவுளோ டருகணையும்

என்பது கூறப்பட்டுள்ளது. உணவைத் தேடித்திரியும் குருகினங்கள் வயல் நீரின் செழிப்பினால் மிகப்பெரிய உருவமாக வளர்ந்து விட்ட மீன்களைக் கண்டு முதலில் அஞ்சி ஒடுகின்றன. சிறிய மீன்களைப் பிடித்து வாய்க்கதுப்பில் வைத்துக் கொள்கின்றன. உருவத்தில் பருத்துக் கொழுத்திருந்த மீன்களைக் கண்டு அஞ்சி ஒடிய அவை சிறிய மீன்கள் எளிதில் அகப்பட்டமையையும் அவற்றின் சுவையையும் அறிந்து பெரிய மீன்கள் இன்னும் சுவையாக இருக்கும் என்று நினைத்து அப்பெரிய வாளை மீன்களையும் பிடிக்கலாம் என்று எண்ணி நேரம் பார்த்து அவற்றின் அருகே வருகின்றன. பாரதப் போரில் பாண்டவருக்கு கண்ணன் துணையாயிருப்பதால் தாமொன்றும் செய்ய இயலாதென்று அஞ்சிய அதிரதர், மகாரதர் என்னும் பெயரினராகிய வீடுமரும் துரோணரும் கண்ணன் பாண்டவர் படைக்குத் தலைமையேற்காமல் தேர்ப்பாகனாக மட்டுமே இருப்பதறிந்து மகிழ்ந்து முன்பு சில வீரர்களை வென்ற தாம் இனிமேல் எல்லோரையும் வெல்லலாகும் என்று மகிழ்வுற்றுப் படைகளைக் கொண்டு வந்ததை நினைவூட்டுகிறது.

*தென்றல் காற்று :*

தென்றல் காற்று வீசுவதும் முல்லை மலர்வதும் வண்டுகள் மலர்களில் தேன் உண்ணுவதும் அழகிய காட்சியாகும்.

களியா வண்டு கள்ளுண்ணக்
காமர் தென்றல் அலர்தூற்ற
நளிர்வாய் முல்லை முறுவலிக்கும்

என்பதாகக் கூறப்பட்டுள்ளது. வண்டுகள் மலர்களிலுள்ள மதுவை உண்டு களித்திருக்கின்றன. அதைக் கண்டு ஊருக்கெல்லாம் அலர் தூற்றுவது போல தென்றல்காற்று வீசுகிறது. இதைப்போய் எல்லோருக்கும் தெரிவிக்க வேண்டுமா என்று நினைத்து முல்லை சிரிக்கிறது. களவு வாழ்க்கையில் ஈடுபட்ட

தலைவியிடம் இன்பம் அனுபவித்து மகிழ்ந்ததை அறிந்து ஊர் மக்கள் அலர் தூற்றுவது கண்டு தோழி சிரிக்கிறாள் என்னும் பொருள் புலப்படுமாறு மிக நுட்பமாகக் கூறியிருக்கும் பாங்கினைக் காணலாம்.

### ஆமை புதரில் ஒளிதல் :

பருத்துவிட்ட மீன்களை உழவர்கள் தம் இருகைகளாலும் கட்டிப் பிடிக்க அவை நழுவிச் செல்ல பின்னும் அவற்றைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட அவ்வுழவர்களுக்கு அஞ்சிய ஆமை தன்னையும் பிடித்து விடுவார்களோ என்னும் எண்ணத்தில் மஞ்சள் புதரில் ஓடி மறையும் காட்சியை,

மீனைத் தழுவி வீழ்ந்தெழும் மள்ளர்க் கலமந்த
நானப் புதரில் ஆமை யொளிக்கும் நறையூரே

என்னும் பாடல் காட்டுகிறது. வலிமை மிக்க கர தூடணர்களையே கொல்லுகின்ற ஆற்றலுடைய இராமபிரான் அம்புக்கு அஞ்சி உயிர் பிழைக்கும் எண்ணத்தோடு எல்லா வசதிகளும் நிறைந்ததும் பிறர் புக முடியாததுமாகிய இலங்கை என்னும் புதரில் ஆமை போல் ஒளிந்திருந்தான் இராவணன் என்னும் கருத்தை எண்ணுமாறு செய்கிறது.

### மீனும் கொக்கும் :

முல்லை நிலமும் நெய்தல் நிலமும் மயங்கிய திணை மயக்கத்தை திருக்குறுங்குடியில் காணமுடிகிறது. இத்தலம் தான் ஆழ்வார் முத்தியடைதற்குத் தேடிக் கொண்ட இடமாகும். அது குளிர்ந்த சோலைகளால் சூழப்பட்டது என்பதை

கொல்லை வளர் இள முல்லை புல்கும் குறுங்குடி

கொங்கு அலர் தண்பணை சூழ்புறவின் குறுங்குடி

எனக் காட்டியுள்ளார். மலர்கள் இரவும், பகலும் தேனைச் சொரிய வண்டுகளெல்லாம் அவற்றைப் பருகி இசை பாடி மகிழ்கின்றன. தாய்ப் பறவையாகிய கொக்கு தன் அலகிலுள்ள மீனைக் குஞ்சு உண்பதற்கு வசதியாக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறது. அதற்கேற்றாற்போல அத்தலத்திலுள்ள மாமும் கிளையும் தாழ்ந்திருக்கின்றன . அவற்றில் ஏறியுள்ள தாய்ப்பறவையின் மீனைக் குஞ்சுகள் எடுத்து உண்ணுகின்றன.

தக்க மரத்தின் தாழ்சினையேறித் தாய்வாயில்
கொக்கின் பிள்ளை வெள்ளிற வுண்ணும்

என்பனவே அக்கருத்தைத் தாங்கி நிற்கும் அடிகளாகும். இவ்வாறு வருணிப்பதிலும் திருமாலின் தலைமைத் தன்மையைப் புலப்படுத்துகின்றார். பாண்டி நாட்டின் நவதிருப்பதிகளுள் ஒன்றாகத் திகழும் திருக்குறுங்குடி இறைவனை நெருங்கியிருந்து முன்னர் தனக்கு எட்டெழுத்து மந்திரம் ஓதி அருளியது போல் மீண்டும் தனக்கு பரமபதம் கிடைக்க அருளமாட்டானா என்று எதிர்பார்த்து நிற்கும் தன்மையைச் சுட்டுவதாக உள்ளது இது.

## அழகுணர்ச்சியை மையமாக உடையவை :

### களிறுகளின் அன்புப் பிணைப்பு :

கவிஞன் கற்பனை செய்வது பகற்கனவு காண்பதை ஒத்தது. கனவு காண்பவர்கள் தங்கள் உள்ளம் விரும்புமாறே காண்கின்றனர். நடந்த நிகழ்ச்சிகளின் அடிப்படையில் சிலவற்றைக் கனவாகக் காண்கின்றனர். நடக்க வேண்டியவற்றிலும் அவரவர் உள்ளம் விரும்பும் வகையிலமைத்துக் காண்கின்றனர். " உள்ளம் விரும்புமாறு படைக்கும் உணர்ச்சியே பாட்டு, ஓவியம் முதலிய கலைகளுக்கு அடிப்படையாகும். இயற்கையைப் பாடும் கவிஞர்களும் உள்ளதை உள்ளவாறே பாடுவதில்லை. உள்ளதில் சிறிது குறைத்தும் சிறிது கூட்டியுமே பாடுகின்றனர்" [47] என்னும் கருத்துக்கேற்பவே

வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முனை
அளைமிகு தேன்தோய்த்து
பிரசவாரிதன் னிளம்பிடிக் கருள்செயும்
பிருதிசென் றடைநெஞ்சே

என்று தம் நெஞ்சை நோக்கிக் கூறுவாராய் திருப்பிருதியின் இயற்கைச் சூழலில் மனம் பறிகொடுத்து கற்பனை நயம் தோன்றப் பாடுகிறார். மனிதனிடம் காணப்படும் நல்ல, தீய பண்புகள் ஏனைய உயிரினங்களிடத்தும் உள்ளனவாக இயைத்து கற்பனையுடன் படைப்பதை சங்ககாலம் முதற்கொண்டு காண்கிறோம் மலைச்சாரலில் யானைகள் ஆணும் பெண்ணுமாய்க் கூட்டமாகப் படுத்திருக்கின்றன. அருகில் மூங்கிலின் இளங்குருத்துக்களும் மலர்களிலிருந்து தேன் வடிந்து சிதறுவதும் மனதைக் கவர அப்பொருட்களை ஒன்றோடொன்று இணைத்து கற்பனை நயம் பொருந்தப் பாடுகிறார். இவ்வாறு நடப்பது இயலாத ஒன்று என்பது ஆழ்வாரும் அறிந்ததே. ஆயினும் ஆண் யானை அன்பு மிகுதியால் வேறு சில உதவிகள் செய்வதையறிந்த அவருடைய உள்ளம் இத்தகையதொரு கற்பனையை அமைக்க விழைகிறது. அதனால் யானைகள் உணவூட்டும் சிறப்பை

மகிழ்ந்து பாடுகிறார். ஆண்யானை தன் பிடிக்கு உணவூட்டுவதாகப் பாடியுள்ள இக்கருத்து,

இருவெதி ரீன்ற வேற்றலைக் கொழுமுனை
சூல்முதிர் மடப்பிடி நாண்மேயல் ஆகும் [48]

பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும் [49]

பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறு [50]

ஈன்று நா ளுலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை [51]

சுனையிற் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக் கலைமாத்தன்
கள்ளத்தின் ஊச்சும் சுரம் [52]

என அமைந்துள்ள சங்கச் செய்திகளை நினைவுபடுத்துகிறது. ஆறறிவு படைத்த மனிதனிடம் காணப்படும் அன்புடைமை குறைந்த அறிவுடைய விலங்குகளிடத்தும் ஏனைய உயிர்களிடத்தும் காணப்படுவதை சங்கப்புலவர்கள் இங்ஙனம் புலப்படுத்துகின்றனர். அஃறிணை உயிர்களிடத்து விளங்கும் அன்புடைமையை மறவாது போற்றும் பண்பட்ட கவிதை உள்ளத்தையன்றோ இக்கற்பனை காட்டுகின்றது! இதையொட்டியே பிற்காலப் புலவர்களும் பல்வேறாய காட்சிகளைப் படைத்து மொழிகின்றனர்.

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்நின்று
இருகண் இளமூங்கில் வாங்கி - அருகிருந்த
தேன் கலந்து நீட்டும் திருவேங்கடங்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை [53]

என்று இரண்டாம் திருவந்தாதிப் பாடல் அமைந்துள்ளது. களிறுகள் தம் பிடிகளின் வாயில் மூங்கில் முளைகளை வாரித்தரும் அன்புக் காட்சியை ஞான சம்பந்தர்,

மருங்களி யார்பிடி வாயில்வாழ் வெதிரின் முளைவாரிக்
கருங்களி யானை கொடுக்கும் கற்குடி [54]

என்று பாடிப் பரவசமடைகிறார்.

உருகு காதலின் தழைகொண்டு மழலை வண்டு ஓச்சி,
முருகு நாறுசெந் தேனினை முழைநின்றும் வாங்கி
பெருகு சூல்இளம் பிடிக்கு ஒரு பிறைமருப் பியானை
பருக வாயினில் கையில் நின்று அளிப்பன பாராய் [55]

என்று கம்பராமாயணத்திலும் இத்தகைய கற்பனை சிறப்பாக இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. ஐந்தறிவு படைத்த உயிர்களிடத்துப் பெருகியுள்ள அன்புடைமையை ஆழ்வார் அழகுடன் காட்டிய மரபையொட்டியே, பலாச்சுளைகளை மந்தியின் வாயில் கொடுத்து கடுவன் மகிழ்கின்ற காட்சியை,

பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடுங்கடுவன்
மந்தியின் வாய்க் கொடுத் தோம்பும் [56]

என்று மாணிக்கவாசகரும் அனுபவித்துப் பாடியுள்ளார். திரிகூடராசப்பக் கவிராயரும்,

வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும் [57]

என்பதன் மூலம் அந்த அன்புடைமையை உணர்த்துகிறார்.

## வேங்கையும் அசோகும் :

அகன்ற பெரிய மலைகளில் வளர்ந்துள்ள வேங்கை மரங்கள் மேகமண்டலத்தைத் தொட்டுக்கொண்டு வளர்ந்திருக்க, அவற்றைத் தழுவிய வண்ணம் மிளகுக் கொடிகள் வளர்ந்திருந்தன. அக்காட்சியை

கார்கொள் வேங்கைகள் கனவரை தழுவிய
கறிவளர் கொடிதுன்னி
போர்கொள் வேங்கைகள் புனவரை தழுவிய
பூம்பொழி லிமயத்துள்

என்று சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார். 'கார்கொள் வேங்கை' என்பதனால் வானளாவ உயர்ந்துள்ள வேங்கை மரத்தையும் 'போர் கொள் வேங்கை' என்பதனால் கூட்டமாக இருந்து போர்புரியும் புலிகளையும் வேறுபட உணர்த்திக் காட்டுகிறார். இருபொருள் பயக்கும் ஒரு சொல்லையே செய்யுளில் அருகருகே அமைத்து அழகு செய்யும் பாங்கை இதில் காணலாம்.

திருப்பிருதியில் அசோக மலர்கள் இதழ்களை விரித்து மலர்ந்திருக்கின்றன. அவற்றிலுள்ள தேனை நாடி வண்டுகள் வருகின்றன. அவை நன்கு மலர்ந்து தேனைக் கொட்டிவிட்டது கண்டு வாடி நிற்கின்றன. இந்த அழகான காட்சியை தற்குறிப்பேற்றமாகப் பாடுகின்றார். மகரந்தத்தூள் பெருகியுள்ள அசோக மலர்கள் சிவந்த வண்ணத்தோடு மலர்ந்து விளங்குவதை நெருப்பு என்று நினைத்து வண்டுகள் அஞ்சி ஓடுகின்றன என்னும் பொருளில்,

தாது மல்கிய பிண்டிவிண் டலர்கின்ற
தழல்புரை யெழில் நோக்கி
பேதை வண்டுக ளெரியென வெருவரு
பிருதிசென் றடைநெஞ்சே

என்று அவற்றுக்குரிய இயல்புக்கேற்ற வகையில் பாடுகின்றார். இக்காட்சியை ஆசிரியர் அமைத்துள்ள திறம் அறிந்து மகிழத்தக்கது.

அள்ளற் பழனத்து அரக்காம்பல் வாயவிழ
வெள்ளந் தலைப்பட்டது எனவெரீஇ - புள்ளினந்தாம்
கைச்சிறகால் பார்ப்பொடுக்கும் கவ்வை யுடைத்தரோ
நச்சிலைவேல் கோக்கோதை நாடு [58]

என்று பாண்டியனுடைய சிறப்பை விளக்கிக் காட்டும் முத்தொள்ளாயிர வருணனை இவ்வருணனையை ஒத்திருக்கக் காண்கிறோம்.

## வண்டுகளின் இன்னோசை :

திருவேங்கட மலையிலுள்ள சோலைகளில் வாழும் வண்டுகள் தாம் மட்டுமே இறைவனைப் பாடிப் போற்ற வேண்டும், அதனாலேற்படும் இன்பத்தைத்தாம் மட்டுமே அனுபவிக்க வேண்டும் என்று எண்ணியதாகக் கற்பனை செய்கிறார். இயல்பாகவே வண்டுகள் ஒலியெழுப்பிக்கொண்டும் குறப் பெண்டிர் பாடிக்கொண்டும் இருந்த காட்சியை

குறவர் மாதர்க ளோடு வண்டு
குறிஞ்சி மருளிசை பாடும் வேங்கடத்து

என்று குறிப்பிடுகிறார். அதாவது குறக்குலப் பெண்டிர் இசை பாட அவர்களை விஞ்சி விடவேண்டும் என்னும் ஆவேசத்துடன் வண்டுகள் குறிஞ்சிப் பண்ணை இசைக்கின்றன. வண்டுகளின் ஒலியையும் அவை சுற்றித் திரியும் அழகையும் கண்டு அனுபவித்து அழகுணர்ச்சி பெருக்கெடுக்க,

கவரி மாக்கணம் சேரும் வேங்கடம்

வேய்கள் நின்றுவெண் முத்த மேசொரி
வேங்க டமலை

மின்னு மாமுகில் மேவு தண்திரு
வேங்க டமலை

என்றெல்லாம் கூறுகிறார். 'மின்னுமாமுகில்' என்று கூறி திருமகளும் திருமாலும் கூடி வாழ்கின்ற தன்மையைப் புலப்படுத்துகின்றார். ''ஒரு பொருளைக் காணும்போது அதன் பகுதிகள் பலவற்றையும் கண் காணுகின்றது. ஆனால் உணர்ச்சி வயப்பட்ட மனம் அந்தப் பொருளின் சில பகுதிகளை மட்டுமே நன்கு பதிய வைத்துக்கொள்கிறது'' [59] என்னும் கருத்துக்கேற்ப ஆழ்வாரின் கண்கள் திருவேங்கட மலையிலுள்ள பல பொருட்களையும் காணுகின்றன. ஆனால் வண்டுகளின் ஒலி, உயர்ந்தோங்கிய மரங்கள், மேகக் கூட்டங்கள் இவை அவருடைய மனதில் நிலைத்து நிற்க அவற்றைப் பற்றி விரிவாகவும் விளக்கமாகவும் பல்வேறிடங்களில் கூறுகிறார்.

சுரும்புகளும் வண்டுகளும் சுற்றிச் சுற்றி வருவதும் மயில்கள் ஆங்காங்கே தோகை விரித்து நிற்பதுமாகிய காட்சி திருவெள்ளியங்குடி வருணனையில் இடம் பெறுகிறது. சோலையிலுள்ள சுரும்புகள் பின்னணி இசை இசைக்க, வரிகளையுடைய வண்டுகள் இசைபாட அவற்றிற்கேற்றாற்போல் மயில்கள் நடனமாடுகின்றன. திருவழுந்தூரிலுள்ள சோலைகளிலும் வண்டினங்கள் ஒலியை எழுப்ப, குயில்கள் கூவ, மயில்கள் ஆடுகின்றன. இத்தகையதொரு காட்சியைக் காட்டியவர் திருநந்திபுர விண்ணகரத்து இயற்கை அழகிலும் மனம் பறிகொடுத்தவராய்

மைவரி வண்டுமது வுண்டுகிளை யோடுமலர்
கிண்டி யதன்மேல்
நைவளம்ந விற்றுபொழில் நந்திபுர விண்ணகரம்
நண்ணு மனமே

என்று அதன் சிறப்பைப் பாடுகிறார். கரிய அழகிய வண்டுகள் தம் இனங்களுடன் மது அருந்தி மலர்களைக் கோதி அதனாலான களிப்பால் நைவளம் என்னும் பண்ணை இசைத்துத் திரியும் சோலைகள் சூழ்ந்த நந்திபுர விண்ணகரம் புதிது புதிதாகப் பூ மலரும் சிறப்பாலும் பசுமையான பொன்னைப் போன்று உலாவுகின்ற வண்டுக் கூட்டங்களாலும் கரிய நெல்மணிகள் நிறைந்த கழனிகளாலும் பெருமை பெற்றது. திருமாலின் பெருமைக்குத் தகுந்தவாறு மலர்களைத்தூவி வழிபடும் மரங்களைத் தம்மகத்துக் கொண்ட பொழில்களும் திருமால் வயிறு போலப் பொலியும் பொன் தும்பிகளும் அவரது கரிய மேனி போன்ற வயல்களும் நிறைந்துள்ள இனிமையான காட்சியால் அத்திருமாலை மனக்கண்முன் நிறுத்துகிறார்.

வம்புமலர் கின்றபொழில் பைம் பொன்வரு தும்பிமணி
கங்குல் வயல்சூழ்
நம்பனுறை கின்றநகர் நந்திபுர விண்ணகரம்

என்று அது வருணிக்கப்படுகிறது. இங்கு இயற்கையோடு இயைந்து விளங்குகிறான் இறைவன் என்னும் உண்மையைப் புலப்படுத்துகிறார். சிறகுகள் கொண்ட மயில்களும், குயில்களும் ஆடியும் பாடியும் வர, அவற்றின் மீது மலர் சொரிய வண்டுகள் ஒலிக்க, மணம் வீசும் மாமரங்கள் வானளாவ உயர்ந்து நிற்க அது மேகங்கள் தங்குவதற்கு இடமாயுள்ளது. இச்சோலைகள் வெறும் கலையுணர்வுக்கு மட்டும் இருப்பிடமாக இல்லாமல் பக்தி உணர்வுக்கும் இடமாக உள்ளன. சோலையின் ஒருபுறத்தில் கிளைகளில் குதித்துக்கொண்டு குயில்கள் கூவும்போது பிறிதொரு மருங்கு மேகம் வந்ததாக நினைத்து மகிழ்ந்து மயில்கள் ஆடுகின்றன என்னும் காட்சிகளைக் காட்டுகின்றார்.

சிறைகொள்மயில் குயில்பயில மலர்கள்உக அளிமுரல
அடிகொள் நெடுமா
நறைசெய்பொழில் மழைதவழும் நந்திபுர விண்ணகரம்

கொம்புகுதி கொண்டுகுயில் கூவமயி லாலுமெழில்
ஆர்பு றவுசேர்
நம்பியுறை கின்றநகர் நந்திபுர விண்ணகரம்

என்பன ஆழ்வார் கூறும் அழகுணர்ச்சி மிக்க பாடல்கள். இத்தகைய காட்சியொன்றை சுந்தரரும்

அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில் [60]

என்றும்

சோலைமலி குயில்கூவக் கோலமயில் ஆலச்
சுரும்பொடு வண்டிசை முரல [61]

என்றும் கூறுகிறார். இயற்கையுடன் இணைந்து பக்தி மிளிர்வதைப் புலப்படுத்தும் பான்மையில் புலவர்கள் ஒருமித்த கருத்துடையவர்களாய்த் திகழ்ந்தமையை இது காட்டும், வண்டு, குயில், மயில், அன்னம் இவற்றை ஓரிடத்துக் கண்ட ஆழ்வார் கிளைகள் தழைத்தோங்கிய இனிமையான மாமரத்தின் சிவந்த தளிரை மூக்கால் குத்தி குயில்கள் பல்வேறுபட்ட இசையை இசைப்பதையும் புள்ளிகள் பொருந்திய மயில்கள் சோலைகளில் நடனமாடும்போது நறுமணமிக்க புதிய மலர்கள் மீது வண்டுகள் தங்கிப் பண்பாடுவதையும் அழகுற வருணிக்கிறார். வளையல்கள்

அணியப்பெற்ற பெண்களுக்குப் பின்னால் பெண்ணும் ஆணுமான அன்னங்கள் நடந்துபோய் அவர்களைப்போல் நடக்கவியலாமல் வெட்கப்பட்டு மறைவதாகக் கற்பனை செய்து கூறும் கவினை,

பெடையோ டன்னம் பெய்வளை யார்தம் பின்சென்று
நடையோ டியலி நாணி யொளிக்கும் நறையூர்.

என்னும் பாடல் வழி அறியலாம்.

## கரும்பும் எருமையும் :

திருநாங்கூரின் வயல்களில் கரும்புகள் நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அதனிடையே எருமைகள் ஏராளமாக உலாவித்திரிகின்றன. அந்தக் காட்சி

..... ஓங்கு பைந்தாள்
கண்ணார் கரும்பின் கழைதின்று வைகிக்
கழுநீரில் மூழ்கிச் செழுநீர்த் தடத்து
மண்ணேந் திளமேதி கள்வைகு நாங்கூர்

என்று கூறப்படுகிறது. வயல்களில் இளைய எருமைகள் கரும்புகளை மேய்ந்து அளவுக்கு அதிகமாகத் தின்றதால் நகர முடியாமல் 'சோறு கண்ட இடம் சொர்க்கம்' என்பது போல இருந்த இடத்திலேயே படுத்து அசைபோடுகின்றன. பிறகு மெதுவாக எழுந்து அசைந்து சென்று செங்கழுநீர்ப் பூக்கள் நிறைந்துள்ள பொய்கையில் மூழ்குகின்றன. பொய்கையிலுள்ள சேற்றில் கொம்புகளைக் குத்துவதால் அவற்றில் சேறு ஒட்டிக்கொள்ள அங்கிருந்து கிளம்ப எண்ணும்போது நிறைய உணவு உண்டதால் ஏற்பட்ட மயக்கத்தினால் கரையேற முடியாதபடி அங்கேயே தங்கி விடுகின்றன. மூன்றாமடியிலும் நான்காமடியிலும் தங்குதல் என்னும் பொருள்படும் 'வைகுதல்' என்னும் சொல்லை வைகி, வைகு என்பதாகக் கையாண்டு அதன்மூலம் எப்பொழுதும் விரைந்து தொழிற்படாமல் முடங்கிக் கிடக்கும் எருமைக்குரிய மந்த குணத்தைப் புலப்படச் செய்கிறார்.

## பொய்கையின் அழகு :

பொய்கைகளில் மலர்ந்துள்ள தாமரை மலரினின்றும் தேன் ஒழுகும் காட்சியை கற்பனை நயம் தோன்ற

..... பைந் தடத்துப்
பெடையோடு செங்கால வன்னம் துகைப்பத்
தொகைப்புண்ட ரீகத்தி டைச்செங்கழுநீர்
மடையோட நின்று மதுவிம்மு நாங்கூர்

என்கிறார். அன்னப் பறவைகள் தாமரை மலர்களில் துணையுடன் இருந்து கொண்டு விளையாடும் பொழுது அம்மலர்கள் சிதைவுண்டு அவற்றினின்றும் மது வெள்ளம் பெருகி செங்கழுநீர் மலர்ந்துள்ள மடைகளிலும் ஓடிப் பாய்கிறது. குளங்களிலும் வயல்களிலும் சூழ்ந்திருக்கும் திருக்கண்ணபுரத்து வயலில் களைபறிப்பவர்கள் களைக் கொட்டுகளைக்கொண்டு பறிக்கும்போது சிறு தூறுகளிலிருந்து புறப்படும் முயல்கள் அவர்கள் முகத்தில் துள்ளும். கலப்பை -களைச் செலுத்தும்போதும் காலால் குழப்பும் போதும் தாமரை மலர்களின் நறுமணம் கமழும். பொய்கைகளில் மலர்ந்துள்ள மணம் மிக்க கருங்குவளை மலர்கள் கண்களாகவும் செந்தாமரை மலர்கள் முகங்களாகவும் விளங்குவதை

கொங்குமலி கருங்குவளை கண்ணாகத் தெண்கயங்கள்
செங்கமல முகமலர்த்தும் திருக்கண்ணபுரம்

என்று காட்டுகிறார்.

வண்டமரும் மலர்ப்புன்னை வரிநீழல் அணிமுத்தம்
தெண்திரைகள் வரத்திரட்டும் திருக்கண்ண புரம்

என்று வருணிப்பதன்மூலம் புன்னை மரங்கள் மலர்களைச் சொரிவதையும் அலைகள் முத்துக்களைக் குவிப்பதையும் கூறுகின்றார். புன்னை மரங்களில் ஏராளமான மலர்கள் பூத்திருக்கின்றன. அவற்றில் வண்டுகள் தேனையுண்டு மகிழ்ந்து இசைக்கின்றன. மரங்கள் மலர்களை உதிர்ப்பதும் நீரலைகள் பொருள்களை இழுத்துக்கொண்டு வருவதுமாகிய இயற்கை நிகழ்ச்சியை கற்பனை நயம் தோன்ற புன்னை மலரின் அழகு நீரலைகளைக் கவர்வதால் அவை முத்துக்களைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு புன்னை மலர்களைப் பண்ட மாற்றாகப் பெற்றுக்கொண்டு செல்வதாகக் கூறுகிறார்.

## மருதமும் நெய்தலும் :

திருமங்கையாழ்வார் இயற்கைக் காட்சிகளை வருணிக்குமிடத்து திணைகள் ஒன்றோடொன்று மயங்கும் காட்சியையும் அழகுறக் காட்டுகிறார். சீராம விண்ணகரம் என்னும் தலத்தில் கடலில் வாழும் சங்குகள் அத்தலத்தின் நீர் வளத்தைக் கண்டு கடலின் உப்பு நீரை விட்டுப்புறப்பட்டன. மெல்ல மெல்லத் தாழைகள் இருக்கும் கழிகளுக்கு வந்துவிட்டன. பின்பு மெல்ல வயல்களுக்குச் சென்று சேர்ந்தன. அங்கிருந்த மழைநீர்க் கால்வாய்கள் வழியாக வீதிகளுக்கு வருகின்றன. கருவுற்றிருந்த அப்பூச்சிகள் வருத்தத்தைத் தாங்க முடியாமல் தெருவிலேயே முத்துக்களை ஈன்று விடுகின்றன.

மருவிவலம் புரிகைதைக் கழியூடாடி
வயல்நண்ணி மழைதருநீர் தவழ்கால் மன்னி
தெருவில்வலம் புரிதரளம் ஈனும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே

என்று தெருவெல்லாம் முத்துக்கள் கிடப்பதாகப் பாடுவதை நோக்க அத்தலத்தின் வளமும் சிறப்பும் புலனாகின்றன.

## நண்டு :

திருத்தெற்றியம்பலம் என்னும் தலத்திலுள்ள சோலைவளம், நீர்வளம் ஆகியவற்றை எடுத்துரைக்கும்போது தாமரை மலரில் நண்டுகள் அமர்ந்திருப்பதாகவும் நண்டுகளின் வாழ்விடங்களாகிய வளைகளைக் கமுகம் பாளையிலிருந்து உதிரும் முத்துக்கள் மூடி விடுவதாகவும் கூறுகிறார். தாமரை மலரில் நண்டு வீற்றிருந்தவாற்றை சுந்தரரும்

துள்ளி வெள்ளி வாளைபாய் வயல்
தோன்று தாமரைப் பூக்கள்மேல்
புள்ளி நள்ளிகள் பள்ளி கொள்ளும் [62]

என்று கூறியிருப்பதும் இவண் நோக்கத்தக்கது. திருநறையூர் என்னும் தலத்தின் வருணனையைக் காணும்போது அழகை வருணிப்பதில் திருமங்கையாழ்வார் ஏனைய ஆழ்வார்களிலும் ஒருபடி மேலோங்கி நிற்கிறார் என்று கூறலாம். ஆம்பல் மலர் ஒன்றில் ஆண்நண்டு தன் துணையுடன் வாழுங்காலத்து பெண் நண்டு கருவுற்றிருந்தது. அதற்கு இனிமையான பொருள்களைக் கொண்டு வந்து கொடுக்கவேண்டும் என்று ஆண் நண்டுக்கு ஆசை ஏற்பட அருகில் மலர்ந்திருந்த தாமரைப் பூவின் தேனைக்கொண்டு வருவதற்காக அதை அடைகிறது. அது அந்திப்பொழுதாக இருக்கவே கதிரவன் மறைந்துவிட தாமரைப் பூ மூடிக்கொள்ள நண்டு வெளிவர இயலாமற்போகிறது. மலரினுள் அகப்பட்டுக்கொண்ட அது அவ்விரவு முழுவதும் செய்வதறியாது அதற்குள் புரண்டு கொண்டேயிருக்க, அதன் உடல் முழுவதும் மகரந்தத்தூள் பட்டு நிறம் மாறிவிடுகிறது. மறுநாள் காலை கதிரவன் தோன்றியதும் தாமரை மலர் விரிய அதிலிருந்து வெளிவந்த நண்டு தன் பெண்துணை அமர்ந்திருக்கும் ஆம்பல் மலரை நோக்கிச் செல்கிறது. இரவில் ஆம்பல் மலர் விரிந்திருந்த காட்சி பெண் நண்டு ஆண் நண்டின் வரவை எதிர்பார்த்துக் கதவைத் தாளிடாமல் காத்திருந்தாற்போலவும் கதிரவன் தோன்றியதும் ஆம்பல் மலர் இயற்கையாகக் கூம்பிவிடுவது தன் ஆண்துணை

இரவில் வேறிடம் புகுந்து மீண்டதாகக் கருதி அதனுடன் ஊடல் கொண்டு கதவைத் தாளிட்டது போலவும் இருக்கிறது.

பள்ளி கமலத்திடைப்பட்ட
பகுவாய் அலவன் முகம் நோக்கி
நள்ளி யூடும்வயல் சூழ்ந்த
நறையூர் நின்ற நம்பியே

என்பது அக்காட்சியைப் புலப்படுத்தும் பாடல், படிப்போருள்ளத்தைக் கவரும் விதத்தில் ஊடற்காட்சியைக் கற்பனை நயம்படப் பாடியுள்ளமை ஆழ்வாரின் அழகுணர்ச்சியையும் கலையுணர்ச்சியையும் காட்டுகிறது. பக்திப் பெருக்கால் பரந்தாமனைப் பாடிப் பரவிய ஆழ்வார் இயற்கைக் காட்சிகளை அனுபவித்து வருணிப்பதிலும் உயர்ந்து நிற்கின்றார் என்று சொல்லலாம். இத்தகையதொரு ஊடற்காட்சியை ஞானசம்பந்தரும் வண்டின் மேல் வைத்துப் பாடுகின்றார்.

மாதர்வண் டுதன்கா தல்வண்டா டியபுன்னைத்
தாதுகண் டுபொழில் மறைந்தூடு சாய்க்காடே [63]

என்பது அவர் பாடல், அதாவது புன்னை மரங்கள் தோறும் பூக்கள் மலர்ந்து இருக்கின்றன. மலர்களின் மகரந்தத்தில் வாய் வைத்து ஆடி கருவண்டு நிறம் மாறி விடுகிறது. பெண் வண்டு துணை வண்டின் வண்ணம் வேறானமை கண்டு ஊடிக் கொண்டு சோலைக்குள் ஓடி ஒளிகிறது. இவற்றையெல்லாம் நோக்க பக்திப் பாடல்கள் பாடிய ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனைப்பாடிப் பரவுவதோடு அவனுறையும் தலங்களின் எழிலையும் தம் மனம் விரும்பும் வண்ணம் பாடி அனுபவித்திருக்கின்றனர் என்பது புலனாகின்றது.

## நெய்தல் நிலம் :

ஆழ்வார் பாடிய திருப்புல்லாணியில் நெய்தல் வளத்தைக் காணலாம். கடலில் அலை ஓயாது ஒலித்தல் இயல்பு. அவ்வலையின் உயர்வும் ஒலியும் காண்போர்தம் கருத்தைக் கவர்வன.

பொருது முந்நீர்க் கரைக்கே மணியுந்து புல்லாணி
புணரியோதம் பணிலம் மணியுந்து புல்லாணி
புரவி என்னப் புதம்செய்து வந்துந்து புல்லாணி

என அலை வீசு கடல் உயர்த்தி உரைக்கப்படுகிறது. ஒளி மிகுந்த முத்துக்களையும் அழகிய பவளங்களையும் மலர்ந்த தாமரை நிறைந்த பொய்கை களையும் கொண்டு சோலைகளால் சூழப்பட்டிருப்பதை

கள்ளவி ழும்மலர்க் காவியும் தூமடல் கைதையும்
புள்ளும் அள்ளற் பழனங்களும் சூழ்ந்த புல்லாணி

என்று குறிப்பிட்டு காவி மலரும் தாழை மலரும் நிறைந்து செந்நிற நெருப்புப் போலவும் மஞ்சள் நிற நெருப்புப் போலவும் காட்சியளிப்பதாக வருணிக்கிறார். மேலும் வயல்கள் பசுமையாகத் தோன்ற வெண்மையானதும் கருமையானதுமான பறவைகள் அவற்றிடை சுற்றித் திரிய வண்ணங்களின் கலவையாகத் திருப்புல்லாணி விளங்குகிறது.

## தேன்வெள்ளமும் மீன்களும் :

திருமணிக் கூடத்துக் கோயிலின் சிறப்பையும் சோலை வளத்தையும் 'தேம்பொழில் கமழும் நாங்கூர்த் திருமணிக்கூடம்' என்று குறிப்பிடுகின்றார். சோலைகளில் குரங்குகள் தேமாங்கனியை உண்டு மித மிஞ்சிய அளவில் தெவிட்டவே அதை மாற்றுவதற்கு வாழைப் பழங்களை உண்ணுகின்றன. தேனுண்ணுவதற்காக அப்பழங்களில் படிந்திருந்த வண்டுகள் அதனால் அஞ்சி ஓடுகின்றன. பொதிய மலையினின்றும் நறுமணத்துடன் புறப்பட்ட தென்றல் அங்குள்ள சோலைகள், வயல்கள், மன்றங்கள், மாடங்கள் ஆகியவற்றிடையே புகுந்து இதமாக வீசுகிறது. தாமரைப் பூவிலிருந்து பெருக்கெடுத்த தேன் நீரில் பாய்கின்றது. அதைப் பருகுவதால் கொழுத்த வாளைமீன் ஆனந்தத்தோடு துள்ளுகின்றது. பொறுத்துக்கொள்ள முடியாத கயல்மீன்கள் அச்சங்கொண்டு வேறிடத்திலுள்ள நீர் நிலைகளுக்குப் பெயர்கின்றன.

பங்கய முகுத்த தேறல் பருகிய வாளை பாய
செங்கய லுகளும் நாங்கூர்த் திருமணிக் கூடத் தானே

என்பது அப்பகுதி. திருக்கூடலூரில் தாழைகள் மலர்ந்திருப்பதும் கெண்டை மீன்கள் துள்ளியாடுவதும்

அருகு கைதை மலர கெண்டை
குருகென் றஞ்சும் கூடலூரே

என்று கூறப்படுகிறது. அருகிலுள்ள தாழைகள் மலரும் போது அவற்றின் தோற்றத்தை 'கொக்கு' என்று நினைத்த கெண்டை மீன்கள் உயிர் தப்பிப்பிழைக்கும் ஆர்வத்தில் துள்ளிப் பாய்வது விளக்கப்படுகிறது.

## நீர்வளம் :

சிறுபுலியூரின் மருதநில வளம், கடல் வெள்ளம் அலையெறிந்து நவமணி களைக் கொண்டு வந்து சேர்த்ததாக அழகுறச் சித்திரிக்கப்படுகிறது. அன்றியும்

அறையும் புனல் ஒருபால் வயல்
ஒருபால், பொழில் ஒருபால்
சிறைவண்டு இனம் அறையும்

என்று நீர் ஒருபக்கமும் வயல் ஒரு பக்கமும் பொழில் ஒரு பக்கமுமாக விளங்கும் அவ்விடங்களில் வண்டுகள் ஒலிக்கும் என்பதாகவும் காட்சி உள்ளது. நீர் நிலைகளில் மலர்கள் அடித்துச்செல்லப்படுவதால் மதுவோடு கூடிய வெள்ளப் பெருக்காக அது அமைய மதுவுண்ண வரும் வண்டுகள் நீர் நிலைகளில் மொய்த்துக் கொண்டிருக்கும். இது போன்றதொரு கருத்தமைந்த வருணனையை கம்பரும்,

ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்து
ஊக்கமே மிகுந்த உள்தெளிவு இன்றியே
தேக்கு எறிந்து வருதலில் தீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே[64]

என்னும் பாடலில் காட்டுவர். பொய்கைகளில் மலர்ந்துள்ள நீலோற்பல மலர்களும் மலர்கின்ற ஆம்பற் பூவும் தாமரைப் பூவுடன் சேர்ந்து மகளிரின் கண், வாய், முகம் என்னும் உறுப்புக்களாக மலர்ந்திருந்தன என்று கூறி ஊருக்கும் பொய்கைக்கும் வேறுபாடு தெரிந்து கொள்ள முடியாத நிலையில் அவை இருந்தன என்பதை

முழுநீலமும் அலராம்பலும் அரவிந்தமும் விரவி
கழுநீ ரோடு மடவாரவர் கண்வாய்முகம் மலரும்
செழுநீர்வயல் தழுவும்சிறு புலியூர்த்தல சயனம்

என்பதால் அறிய முடிகிறது.

திருப்புள்ளங்குடி இயற்கை வளம் மிகுந்த தலம். அத்தலத்தின் சிறப்பைக் கூறுமிடத்து

பள்ளச் செறுவில் கயலுகளப்
பழனக்கழனி யதனுள்போய்
புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும்
புள்ளம்பூதங் குடிதானே

என்று பறவைகள் தம் குஞ்சுகளுக்கு உணவு தேடி அலையும் காட்சியைக் கூறுகிறார். 'புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும் புள்ளம்பூதங்குடி' என்று அதன் பெருமையைக் கூறும் தொடர் சொல்லலங்காரம் மிக்கதாக விளங்குகிறது. திருவழுந்தூரின் இயற்கையெழில்

புள்ளுப் பிள்ளைக்கிரை தேடிப்
போன காதல் பெடையோடும்
அள்ளல் செறுவில் கயல்நாடும்
அணியார் வயல்சூழ் அழுந்தூரே

என்று அதே பாங்கிலேயே அமைக்கப்படுகிறது. பிள்ளைக்கு இரைதேடப் போகும் புள் தனியே செல்லாது தன் காதற் பெடையோடு இரைதேடித் திரியும் வயல் சூழ்ந்த திருவழுந்தூர் என்பதனால் அஃறிணை உயிர்களிடத்துமுள்ள அன்பின் நெருக்கம் உணர்த்தப்படுகிறது.

திருக்கண்ணபுரத்தின் இயற்கைச் சூழலை, செழிப்பு மிக்க அதன் சிறப்பை,

கார்வானம் நின்ற திருக்கணபுரம்
கருமா முகில்தோய் நெடுமாடக் கண்ணபுரம்
காவளரும் கடிபொழில்சூழ் கண்ணபுரம்

எனப் புகழ்ந்துரைக்கிறார். திருக்கண்ணபுரத்துக்கு அவர் கூறும் அடைமொழிகள் அத்தலச் சிறப்பைத் தெள்ளிதின் உணர்த்துகின்றன. அதன் நீர்ச் சிறப்பை நன்கு எடுத்துக் காட்டுவாராய் 'கார்' என்னும் சொல்லை அது பற்றிய விளக்கத்தில் கையாளுகிறார். கரிய நிற வண்ணனான திருமால் உறையும் தலம் அது என்பதைப் பெற வைக்கவே இவ்வாறு பேசுகிறார். நம்மாழ்வாரும் திருக்கண்ணபுரச் சிறப்பை,

வண்டுபாடும் பொழில்சூழ் திருக்கண்ணபுரம் [65]

என்றும்

செய்யில் வாளை உகளும் திருக்கண்ணபுரம் [66]

என்றும் வேறுவகையில் வருணித்திருப்பதைக் காணமுடிகிறது. திருக்கண்ணபுரத்திலுள்ள மாடங்கள் பொழில் சூழ்ந்து உச்சியில் கார் மேகங்கள் தழுவுவனவாய் அமைந்து கிடக்கும் கவின்மிகு காட்சி ஆழ்வாருடைய உள்ளத்தில் இறைவனைப் பற்றிய எண்ணத்தை ஏற்படுத்தி அவ்விறைவனைப் பாடலுள் தொடர்புறுத்திக் கூறுமாறு செய்து விடுகிறது.

இறைவனின் சிறப்புக்களைப் பின்புலமாகக் கொண்டதும் இறைத்தலங்களின் ஏற்றங்களைக் கூறுவதும் தத்துவப் பின் புலமுடையதும் குறிப்புப் பொருளைப் புலப்படுத்துவதும் அழகுணர்ச்சி உடையதுமாகிய வருணனைகள் இயற்கையின் பலதிறப்பட்ட கூறுபாடுகளைத் தனித்தனியே விளக்குவனவாய் அமைந்திருப்பினும் இறைப்பற்றை உணர்த்தும் கருவிகளாகவே விளங்குகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 11
2. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 183
3. சொ. சிங்காரவேலன், திருஞான சம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், ப.223.
4. L. Abercmbie, The Idea of great poetry, P.23
5. Ibid. P.20
6. திருநாவுக்கரசர் தேவாரம், ஐந்தாம் திருமுறை, தனிக்குறுந்தொகை, பா.1.
7. திருப்பாவை, பா.4
8. பெரியபுராணம், திருநாவுக்கரசு சுவாமிகள், பா.4.
9. திருஞானசம்பந்தர் தேவாரம், இரண்டாம் திருமுறை திருக்குறும்பலா, பா.7
10. மே.நூ. பா.8
11. சுந்தரர் தேவராம், திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும், பா.6.
12. ப. அருணாசலம், பக்தி இலக்கியம், ப.125
13. ச. பாலசந்திரன், இலக்கியத் திறனாய்வு, ப. 27.
14. திருவாய்மொழி, 3.9:1
15. சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், பா.31.
16. தேம்பாவணி, நாட்டுப்படலம், பா.25.
17. முக்கூடற்பள்ளு, பா.25.
18. சுந்தரர் தேவாரம், திருக்கலய நல்லூர், பா.9.
19. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.274
20. ச. பாலசந்திரன், மு.நூ.ப.102
21. திருஞான சம்பந்தர் தேவாரம், இரண்டாம் திருமுறை, திருக்கோவலூர், பா.2.
22. மே.நூ. பா.8.

23. மே.நூ. *பா.10.*

24. மு.வரதராசன், *இலக்கியத்திறன், ப.167.*

25. கம்பராமாயணம், *பாலகாண்டம், பா.34.*

26. சுந்தரர் தேவாரம், *திரு அரிசிற்கரைப்புதூர், பா.1.*

27. மே.நூ. *பா.7.*

28. திருஞானசம்பந்தர் தேவாரம், *இரண்டாம் திருமுறை, திருமாந்துறை, பா.6.*

29. அண்ணாமலை ரெட்டியார், *காவடிச்சிந்து, பா.5 : 3*

30. சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், *நாட்டுப்படலம், பா.57*

31. அண்ணங்கராசாரியார் (உ.ஆ) *பெரியதிருமொழி, ப.49.*

32. தொல்காப்பியம், சொல்லதிகாரம், *பெயரியல். நூ.1.*

33. ஆ.சிவலிங்கனார், *தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும், ப.3.*

34. மே. நூ. *ப.7*

35. சிலப்பதிகாரம், *மனையறம் படுத்தகாதை, 28*

36. அண்ணாமலை ரெட்டியார், *மு.நூ.பா.5 : 2*

37. மு. வரதராசன், *இலக்கியத்திறன், ப.120.*

38. குறுந்தொகை, *பா.385.*

39. அகநானூறு, பா.352.

40. திருஞானசம்பந்தர் தேவாரம், *இரண்டாம் திருமுறை, திருக்குறும்பலா, பா.2.*

41. மே.நூ. திருக்கேதாரம், *பா.6.*

42. சுந்தரர் தேவாரம், *திருக்கானாட்டுமுள்ளூர், பா.3.*

43. திருஞானசம்பந்தர் தேவாரம், *முதல் திருமுறை, திருவீழிமிழலை, பா.10.*

44. சீவகசிந்தாமணி, நாமகளிம்பகம், *பா.22*

45. அ.ச. ஞானசம்பந்தன், *இலக்கியக்கலை, ப.236.*

46. திருஞான சம்பந்தர் தேவாரம், *முதல் திருமுறை, திருவையாறு, பா.26.*

47. ந. சுப்புரெட்டியார், *கவிதையனுபவம், ப.157.*
48. நற்றிணை, *பா.116.*
49. குறுந்தொகை, *பா.37.*
50. கலித்தொகை. *பா.11*
51. அகநானூறு, *பா.85.*
52. ஐந்திணையைம்பது, *பா. 23*
53. இரண்டாம் திருவந்தாதி, *பா.75.*
54. திருஞானசம்பந்தர் தேவாரம், *முதல் திருமுறை, திருக்கற்குடி, பா.4.*
55. கம்பராமாயணம், *அயோத்தியாகாண்டம், சித்திர, பா.10.*
56. திருக்கோவையார், *பா.98.*
57. திருக்குற்றாலக்குறவஞ்சி, *பா. 8*
58. முத்தொள்ளாயிரம், *பா.13.*
59. மு.வரதராசன், *இலக்கியத்திறன், ப.73.*
60. சுந்தரர் தேவாரம், *திருக்கலயநல்லூர், பா.1*
61. மே.நூ. *பா.8.*
62. மே.நூ. *திருப்புறம்பியம், பா.5.*
63. திருஞானசம்பந்தர் தேவாரம், *இரண்டாம் திருமுறை, திருச்சாய்க்காடு, பா.7.*
64. கம்பராமாயணம், *பாலகாண்டம், ஆற்று, பா. 21*
65. திருவாய்மொழி, *9.10 : 3.*
66. மே. நா. *9.10 : 7.*

# 4. அகப்பொருள் பாகுபாடு

பண்டைத் தமிழர் தம் வாழ்க்கையை அகம், புறம் என இரு பிரிவுகளாகப் பகுத்துக் கொண்டனர். அகம் என்பது ஒருவனும் ஒருத்தியும் ஊழ் வயத்தால் தாமே எதிர்ப்பட்டுக்கூடிக் கலந்த பேரின்பம்; அடுத்தவருக்கு இது இவ்வாறு இருந்தது என்று வெளிப்பட உரைக்கப்படாததாய் மனத்தளவில் நிற்கும் இன்பமாகும். ஒத்த பண்புடையார் இருவர் தம்முள் தனியாகக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனால் பெறுகின்ற இன்ப நிலையையே 'அகம்' எனக் குறிப்பிட்டு வாழ்ந்தார்கள். புறம் எனப்படுவது வாழ்வின் பிற கூறுபாடுகளாகிய வீரம், கொடை முதலிய பண்புகளை உணர்த்தும். தொல்காப்பியப் பொருளதிகாரம் இதை விரித்துரைக்கின்றது.

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான் அமர்ந்து வருஉம் மேவற்று ஆகும் [1]

என்று காதலாகிய இன்பம் பற்றி தொல்காப்பியர் கூறுகிறார். பழந்தமிழர் அகவாழ்வில் சிறந்து வாழ்வதைத் தம் வாழ்வின் குறிக்கோளாகக் கருதினர். அதே சமயம் புற வாழ்வையும் அவர்கள் புறக்கணிக்கவில்லை.

காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே [2]

என்று கூறும் தொல்காப்பியர் அகவாழ்வின் அடிப்படையில் காதல் மனையாளும் காதலனும் இணை பிரியாது இருக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்துகிறார்.

காமப் பகுதி கடவுளும் வரையா
ரேனோர் பாங்கினு மென்மனார் புலவர் [3]

என்று கடவுளுக்கும் மக்களுக்கும் உரிய அகவாழ்க்கை விதியைக் கூறுகிறார். புணர்ச்சி வேட்கையைக் கடவுளிடத்தும் நீக்கார் ; மக்களிடத்தும் நீக்கார் என்பது இதன் பொருளாகும். இங்கு கூறப்படும் ''பகுதி என்பது கடவுளிடம் கடவுட் பெண்டிர் நயப்பனவும், அவர் மாட்டு மானிடப் பெண்டிர் நயப்பனவும் கடவுள் மானிடப் பெண்டிரை நயப்பனவும் பிறவுமாம்'' [4] என்பர் நச்சினார்க்கினியர். கடவுளை மானிடப் பெண்டிர் விரும்பிய அகத்துறை அமைதியைப் பக்தி இலக்கியங்களில் இடம்பெறும் நாயக நாயகி பாவனையில் காண்கிறோம்.

இறைவனுக்கும் உரியதாகப் பேசப்படும் இலக்கிய வழக்காக காதல் இருந்து வருகிறது. வாழ்க்கையை விளக்கிக் காட்டும் கண்ணாடி இலக்கியமாதலால் உலகோர் தம்மிடையே நிலவும் பழக்க வழக்கங்கள், ஒழுக்க முறைகள், வாழ்வியல் நெறி முறைகள் போல்வனவற்றைத் தாம் வழிபடும் பரம்பொருளுக்கும் உரியதாக்கி உரைப்பதைப் பல்வேறிடங்களில் காணமுடிகிறது. கடவுளிடத்து உயிர்கள் காட்டும்அன்பு விளக்கங்களில் கடவுளின் பெயர் சுட்டப்படுவது

மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார்[5]

என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு மாறுபடத் திகழ்வதால் அவ்வொழுக்கத்தை அகத்திணைக்கு உரியதன்றாக நெறிப்படுத்தினர். இவ்வாறு கடவுளிடத்துச் செலுத்தும் காமப்பகுதியைப் புறத்திணைக்குரியதாக ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்திருப்பினும் அதன் பொருட்கூறுகள் யாவும் அகத்திணைத் தொடர்புடையன -வாகவே அமைந்துள்ளன. இத்தன்மையை பக்தி இலக்கியங்கள் வாயிலாக நன்கறியலாம்.

கடவுள் வழிபாடு பல்வேறு காலங்களில் பல படித்தான முறைகளில் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. சங்க காலத்தில் மக்கள் இயற்கையை வழிபட்டனர். கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்று நிலைகளில் பரம்பொருளை வழிபட்ட பாங்கினை தொல்காப்பியர் குறிப்பார். மக்கள் தம்மிடமுள்ள குற்றங்களை நீக்கிப் பேரின்ப நிலையை அடையமுயல்வது கடவுள் வழிபாட்டின் நோக்கமாகும். கடவுளிடம் தங்களை ஒப்படைப்பதற்குரிய நெறியாக அதைக் கொண்டனர். அதுவே காதல் நெறியாக நாயக நாயகி பாவனையாக இலக்கியங்களில் சுட்டப் பெறுகிறது. ஆணும் பெண்ணுமாகிய மனித இனத்தில் அன்பினால் கூடும் நெறியே உள்ளப்புணர்ச்சியாகும். இவ்வுள்ளப் புணர்ச்சியே களவொழுக்கத்தின் சிறப்பியல்பு. ''அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் காமக்கூட்டம்''[6] என்று தொல்காப்பியனாரும் ''அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே''[7] என்று பிற சான்றோரும் உள்ளப் புணர்ச்சி ஒன்றையே களவுக்குரிய சிறப்பியல்பாகக் குறித்துள்ளனர். சங்க காலத்தில் மனிதக் காதலே பாடுபொருளாக இருந்தது. பக்தி இலக்கிய காலத்தில் அம்மனிதக் காதல் தெய்வீகக் காதலாக மாறியது. அடியார்கள் தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் கருதிக் கொண்டு களவு கற்புநெறித் துறைகள் எல்லாவற்றிலும் வைத்துப்பாடி சிற்றின்பத் துறைகளைப் பேரின்பத் துறைகளாக மாற்றி அமைத்துக் காட்டும் முயற்சியில் ஈடுபட்டனர். ''தமிழ் மொழிக்கண் தோன்றிய சமய இலக்கியங்களும் அறவிலக்கியங்களும்

பொருளாலும் வடிவாலும் அகத்திணைக்குட்பட்ட கடன் சொல்லுந் தரமன்று. ஆழ்வார், நாயன்மார்கள் மக்கட் காதலுக்கென வகுத்த அகத்திணையுலகச் சுவடுகளைப் பின்பற்றியதாலன்றோ தெய்வ அன்பு அக இலக்கியத் தடத்துப் பாய்ந்ததாலன்றோ தமிழகத்தின் இறைப் பாசுரங்கள் புதுமையும் தனிமையும் பெற்ற ஓர் இலக்கியவுலகமாக விளங்கின்றன'' [8] என்னும் கூற்று இதை வலியுறுத்துவதாகும்.

சங்க இலக்கியத்தில் காதல் மிகச் சிறந்த ஒன்றாகப் பேசப்பட்டது. அது இடைக்காலத்தில் பக்தி நிலையில் இடம் பெறும் ஒன்றாக மாறியது. திருக்குறளில் காமத்துப்பால் வியக்கத்தக்க வகையில் அமைந்துள்ளது. உயர்ந்த காதல் வாழ்க்கைக்கு விளக்கம் கொடுத்தவர் வள்ளுவர். அன்பின் ஐந்திணை என்று சான்றோர் புகழந்த ஒத்த அன்புடைய காதலரின் வாழ்க்கை நெறி திருக்குறளில் கூறப்படுகிறது.

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு[9]

உறுதோறும் உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள் [10]

அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு [11]

என அக்காதலுக்கு உயர்வு கொடுத்து வள்ளுவர் விளக்கியுள்ளார். அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரம் கானல்வரியால் அகத்துறை இலக்கியமாகத் திகழ்ந்தது.

மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரை களப்பிரர்கள் தமிழகத்தை ஆண்ட காலமாகும். அக்காலத்தில் இல்லறத்தையும் பெண்களையும் தூற்றும் நிலை இருந்தது. ஆகவே நாயக நாயகி பாவனை தோன்றுவதற் -கிடமில்லை. அடுத்து வந்த பல்லவர் காலத்தில் சமயப் புரட்சி ஏற்பட்டது. சமயச் சான்றோர் இறைவனின் பெருமைகளை நாயக நாயகி பாவனையில் பாடி சமயத் தொண்டு செய்ய முற்பட்டனர். பக்தியில் தம்மை மறந்து இறைவனைப் பற்றினர். தம்மைக் காதலியாகவும் இறைவனைக் காதலனாகவும் வைத்துப் பாடினர். அவர்கள் உள்ளமே பெண்மையாகப் பக்குவப்பட தாமே தலைவியாகவும் தோழியாகவும் தாயாகவும் இருந்துபேசினர். அவ்வாறு பேசும்போது தலைவி (சீவான்மா) தன்னிடம் குறைகள் நிறைந்திருப்பதாகக் கூறிக்கொள்வாள். தலைவனோ (பரமான்மா) குறையில்லாதவனாகப் போற்றிப் புகழப்பெறுவான். உயர்ந்த அன்பு

நிலையை வெளிப்படுத்துவதற்கு அகத்துறையை விட சிறந்த ஒன்றில்லை. எனவே எல்லாம் வல்ல பரம்பொருளிடத்துப் பேரன்பு செலுத்தி ஆடிப்பாடி அகத்துறைகள் வாயிலாக பக்தி எனும் பெருவெள்ளத்தில் மூழ்கித் திளைத்தனர்.

ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும் இயக்கப்பெற்ற சமயம் சார்ந்த பக்தி நெறியில் காதலுணர்ச்சியை வெளியிடுவதற்கு வாய்ப்புக்கள் பலவாக அமைந்தன. தலைவியின் நெஞ்சம் முழுவதையும் தனக்கு உரிமையாகப்பெற்ற சங்ககாலத் தலைவனின் இடத்தை சமயப் பாடல்களில் இறைவன் பெறுகிறான். தலைவனின் அன்பு ஒன்றையே தலைவி எதிர்நோக்கி நிற்பதாகக் கூறும் சான்றோர் அத்தலைவியாக தம்மை அதாவது சீவான்மாவாகக் குறிப்பிடுகின்றனர். இதனால் இயல்பாகவே பெண்ணாகத் தோன்றி 'மானிடர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்றுரைத்த ஆண்டாளையன்றி ஆடவர்களாகிய நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், குலசேகராழ்வார் ஆகியோரை முறையே பராங்குச நாயகி, பரகால நாயகி, குலசேகர நாயகி என நாயகியர்களாகக் கருதிப் போற்றுகின்ற மரபு தோன்றியது.

பக்தியுலகில் பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் இடையே காணப்படும் தொடர்புகளுள் நாயக நாயகி பாவனை அதாவது தலைவன் தலைவி உறவு தலை சிறந்த ஒன்றாகக் கூறப்படுகிறது. "இறைவன் மீது பக்திக் காதலுள்ளவர்கள் தங்களைக் காதலிமார்களாகப் பாவித்துக்கொண்டு பக்தி செய்து பாடும் வழக்கத்தை ஆழ்வார்களின் பக்திப் பூங்காவில் காணலாம். இதனை நாயக நாயகி பாவம் என்று வழங்குவர்"[12] என்று கூறும் கருத்து உண்டு. இத்துறையில் ஆழ்வார்கள் வெற்றி கண்டமைக்குச் சங்க இலக்கிய அகத்துறைப் பாடல்களும் அத்துறையை விளக்கும் தொல்காப்பியமும் அவர்களுக்குப் பெரிதும் உதவின. "புருடோத்த மனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன்னர், உலகிலுள்ள ஆன்மாக்கள் யாவும் பெண் தன்மையினை அடைந்து நிற்கும் என்பது வைணவர்கள் கண்ட தத்துவமாகும்"[13] என்றும் கூறுவர். தண்டகாருணியத்தில் வாழ்ந்த முனிவர்கள் இராமபிரானின் அழகில் ஈடுபட்டதால் பெண்மையை விரும்ப அவன் கண்ணனாய்ப் பிறவியெடுத்த போது ஆயர்குல மங்கையர்களாகப் பிறந்து அவனைக் கூடி மகிழ்ந்தார்கள். ஆனால் ஆழ்வார்களோ அப்பொழுதே பெண்மை நிலையை அடைந்து இறைவனாகிய பரமான்மாவைக் காதலிக்கும் நிலையை அவர்கள் பாடல்களின் வாயிலாக அறிகிறோம். ஞான நிலையிலிருக்கும்போது அவர்கள் தாங்களாகவே நின்று பேசுவதும் காதல் வயப்பட்ட நிலையிருக்கும்போது பெண் தன்மையடைந்து பெண் பேச்சாகப் பேசுவதும் உண்டு என்பதை "ஞானத்தில் தம் பேச்சு ப்ரேமத்தில் பெண்பேச்சு"[14] என்னும் வழக்கினால் அறியலாம். அதன்

காரணமாகவே திருமங்கையாழ்வாருக்கு 'பரகால நாயகி' என்ற பெண்மைப் பெயரும் நம்மாழ்வாருக்கு 'பராங்குசநாயகி' என்ற பெயரும் வழங்கபட்டது.

காதல், வீரம் பற்றிக் கூறும் அகப்பொருள், புறப்பொருள் குறித்த, செய்திகளைக் கூறவந்த தமிழ்நூலார் அவ்விரு ஒழுக்கங்களையும் முறைப்படுத்திக் கூறியுள்ளனர். அகவாழ்க்கை கைக்கிளை முதலாகப் பெருந்திணை ஈறாக ஏழு பிரிவுகளைக்கொண்டு விளங்குவதை தொல்காப்பியம்,

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப[15]

என்று கூறுகிறது. நம்பியகப்பொருள் அதை விரிவாகக் கூறுகின்றது. இந்நூல்கள் கூறும் அகத்துறைகளுக்கேற்ப இலக்கியங்கள் விளங்குவதை பல்வேறு கால இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். முன்னோர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றி அவர்கள் வகுத்துத் தந்த நெறி பிறழாது சமயச் சான்றோர் நூல் செய்தமைக்கு திருமங்கையாழ்வாரின் பெரியதிருமொழிப் பாடல்கள் சான்றாக விளங்குகின்றன. திருமங்கையாழ்வார் இறைவனிடம் அளவற்ற காதல் கொண்டு அவனுடைய திருமேனியழகில் மயங்குகின்றார். அத்திருக்கோல ஈடுபாடு காரணமாக நாயக நாயகி பாவத்தில் உள்ளங்கனிந்து பாடியிருக்கும் பெரும்பாலான பாடல்கள் தமிழ் அகப்பொருள் இலக்கணத்தைத் தழுவி அமைந்துள்ளன. திருமாலைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் பாவித்துக்கொண்டு அவர் பாடிய பாடல்களில் அமைந்துள்ள துறைகள் பலவாகும். வளை கவர்ந்த தலைவனை நினைத்து ஏக்கமுற்ற தலைவியாகிய பரகால நாயகி பேசுவது, தலைவனைக் கண்டு மயங்கிய தன் மகளின் நிலையைத் தாய் கூறுவது, பிரிவாற்றாமையால் பசலை நோயுற்று வாடும் தலைவி வண்டு, குருகு, நாரை, அன்னம், பூவை ஆகியவற்றை நோக்கிப் பேசுவது, தன் எழிலும் நிறையும் தலைவன் கவர்ந்ததாகக் கூறுவது ஆகிய அகப்பொருள் துறைகளில் அமைந்தனவாய் அவை ஆழ்வாரின் அருளியல் அனுபவங்களைக் காட்டுகின்றன. பெண்மை நிலையிலிருந்து கொண்டு இறைவனை அனுபவிக்கும் அவருடைய பாடல்கள் தலைவி கூற்று, தோழி கூற்று, தாய் கூற்று ஆகியனவாய் அமைந்துள்ளன.

### *தலைவி கூற்று நிகழ்தல் :*

தலைவி கூற்று நிகழ்த்துவதற்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர்

பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைபட்டுக் கலங்கினு நாணுமிக வரினும்[16]

என்றும்,

உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
தானே கூறுங்காலமும் உளவே[17]

என்றும் கூறியுள்ளார். மக்களின் வாழ்க்கைக்கென வகுக்கப்பட்ட இவ்வகத்துறை நெறிகள் இறைவனைப் பற்றிப் பாடும் நிலைக்கு உயர்ந்து விடுகின்றன. இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் நிகழ்வனவாகிய 'பழிதீர் முறுவல் சிறிதே தோன்றல்' முதலான ஐந்து நிலைகளையும் மெய்யுறு புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்தவரேயன்றி உள்ளப்புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்தோரும் அடைதற்குரியவர் ஆவர். களவியலில் நிகழும் உள்ளப் புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்த நாயகியின் நிலையை ஆழ்வாரின் அட்டபுயகரத் திருமொழி காட்டுகிறது. நாயகியுடன் சேர்ந்து மகிழ்வதற்காக நாயகன் அட்டபுயகரத்தனாக வருகிறான். பிறருக்கு அவன் இன்னான் என்பது புலப்படவில்லை. ஆனால் அவனுக்கும் நாயகிக்கும் அப்போது ஏற்பட்ட பேச்சை தோழி செவிமடுத்து நாயகியிடம் வினவ, அதற்கு அவள் நாயகன் வந்ததாகவும் தான் அவனுடன் பேசியதாகவும் பெருமையுடன் கூறுகிறாள். இரணியனின் உடல் இரு பிளவாகும்படிச் செய்த சிங்கவுரு, மேனியில் தெரிவதால் நரசிம்மனோ, மாபலியிடம் வாமன வடிவுடன் நடந்து சென்று மூவுலகங்களையும் அளந்து கொண்ட திரிவிக்கிரமனோ, ஒப்பற்ற தலைவனான இராமனோ என்று கேட்டபோது அட்டபுயகரத்தோன் என்று சொன்னதாகக் குறிப்பிடுகிறாள். அம்பு, ஆழி, வாள், மலர், சிலை, தண்டு, சங்கு, கேடயம் ஆகியவற்றை எட்டுக் கரங்களிலும் தாங்கியிருப்பது கொண்டும்,

கலைகளும் வேதமும் நீதிநூ லும்
கற்பமும் சொற்பொருள் தானும், மற்றை
நிலைகளும் வானவர்க் கும்பிறர்க்கும்
நீர்மையி னாலருள் செய்து, நீண்ட
மலைகளும் மாமணி யும்மலர்மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற
அலைகடல் போன்றிவ ரார்கொலென்ன
அட்ட புயகரத் தேனென்றாரே

என்பது கொண்டும் மங்கையரின் நிறையைக் கொள்ளை கொள்ளும் நீலநிற அழகு, திருத்துழாய் அணிந்திருத்தல் முதலான ஒப்பனையழகு, அடியவர்கள் சூழ்ந்திருப்பது, நெஞ்சு உறுதியாகப் பற்றிக்கொண்டிருப்பது போன்றவற்றாலும் தன்னிடம் வந்து மகிழ்வித்தவன் அட்டபுயகரத்தோனாகிய தன் நாயகனே என்று

தோழிக்குக் கூறுகிறாள். இவ்வாறு கூறுவதன் வாயிலாக நாயகனின் அழகையும் குணத்தையும் அருள் திறத்தையும் புகழையும் விளங்க வைக்கிறாள்.

## உடன்போக்கு :

தலைவனும் தலைவியும் பகற்குறியிலும் இரவுக் குறியிலும் பலகாலும் கூட்டம் நிகழ்த்தி வருவதனால் அவர்களது களவொழுக்கம் வெளிப்பட்டு சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி, மூக்கினுச்சி சுட்டு விரல் சேர்த்துப் பேசும் நிலை உருவாகும். அதையறிந்த தலைவன் தோழியின் துணைகொண்டு ஒருவருக்கும் தெரியாமல் நள்ளிரவில் தலைவியை உடன் கூட்டிக்கொண்டு தன் மனைக்குச் செல்வான். இவ்வாறு செல்வதை 'உடன்போக்கு' என்னும் சொல்லால் குறிப்பர் அகப்பொருள் நூலார். உடன்போக்கிற்குரிய இலக்கணத்தை வரையறை செய்யும்போது

தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி
மன்னு நிமித்தம் மொழிப் பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்த லென்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்[18]

என்று கூறுகிறார் தொல்காப்பியர். மேலும் அது எவ்வப்பொழுது நிகழும் என்பதை

ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்
பிரிதல் அச்சம் உண்மை யானும்
அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த வாங்கிரு வகையிலும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும் [19]

என்னும் நூற்பாவில் கூறுகிறார். உடன்போக்கு ''கொண்டுதலைக் கழிதல்''[20] என்றும் அவரால் குறிப்பிடப்படுகிறது. இதையே விரிவு படுத்தி நம்பியகப்பொருள் காட்டுகிறது.

போக்கறி வுறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்தல் தேற்றலென்
றியாப்பமை உடன்போக் கிருநான்கு வகைத்தே [21]

என்று போக்கறிவுறுத்தல் முதலாகத் தேற்றல் ஈறாக எட்டு வகையினையுடையது அன்பமைந்த உடன்போக்கு என்கிறது அது. நற்றாய் புலம்பற்குரிய தன்மையவாக,

செவிலி புறத்தொடு நிற்றலிற் கவலையிற்
பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடும்
அயலார் தம்மொடும் பயிலிடந் தம்மொடும்
தாங்கல ளாகிச் சாற்றிய வெல்லாம்
பூங்கொடி நற்றாய் புலம்பற் குரிய [22]

என்று கூறப்பட்டுள்ளது.

களவுப்புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவியை அழைத்துக் கொண்டு தலைவன் செல்லுதல் பண்டைத் தமிழ் வழக்காக இருந்தது. அது உயர்ந்த நெறியாகவும் கருதப்பெற்றது. அதனையொட்டிய நிலையிலேயே பெரிய திருமொழியிலும் உடன்போக்குத்துறை அமைந்துள்ளது. தன்னருகில் படுத்து உறங்கிய மகளைக் காணாமல் தாய் நினைத்துப் புலம்புவதாக மூன்றாம் பத்து ஏழாம் திருமொழிப் பாடல்கள் அமைந்துள்ளன. பரகால நாயகி தலைவனுடனேயே இணைந்து இன்பம் அனுபவிக்க எண்ணுகிறாள். அவளுடைய ஆற்றாமையையும் வேட்கை மிகுதியையும் கண்ட நாயகனுக்கு இரக்கம் பிறக்கிறது. இனியும் அவளை வருத்தக் கூடாது என்று கருதி அவளுடைய தாய்க்குத் தெரியாமல் வந்து அவளை அழைத்துச் சென்று விடுகிறான். தாயோ விழித்துக்கொண்டு மகளைக் காணவில்லை யாதலால் தேடுகிறாள். அன்பின் மிகுதியால் தூரத்தில் ஒருவன் தன் மகளின் கையைப் பிடித்துக்கொண்டு செல்வதைக் கண்ணாரக் கண்டதாகக் கூறுகிறாள். கரியானொரு காளை வந்து பிடித்துக்கொண்டு செல்வதாகக் கூறி வருந்துகிறாள்.

கள்வன் கொல் யானறியேன்
கரியானொரு காளைவந்து
வள்ளிமருங் குலென்றன்
மடமானினைப் போதவென்று
வெள்ளிவளைக் கைப்பற்றப்
பெற்றதாயரை விட்டகன்று
அள்ளலம் பூங்கழனி
யணியாலி புகுவர்கொலோ

என்பது அவள் வருத்தத்தைப் புலப்படுத்தும் பாடல். சொல்லாமல் தன்பெண்ணை அழைத்துப் போனதால் முதலில் கள்வனென்றும் அதனால் ஒழுங்காக

அணியாலி புகுவரோ புகாரோ என்று தனக்கு ஐயம் ஏற்பட்டதாகவும் கூறுகிறாள். முன் கண்ணனாய்ப் பல குறும்புகள் செய்தவனே இப்போது வயலாலி மணவாளனாய் வந்து வீட்டினுள் புகுந்து தன் பெண்ணை அழைக்க அவளும் சென்றிருக்கிறாள் என்றும் அதனால் பழி ஏற்படும் என்றும் இதுவரை காத்து நின்ற தன்னைப் பிரிந்து இரக்கமின்றிச்சென்று விட்டாள் என்றும் வருந்துகிறாள்.

என்துணை யென்றெடுத்தேற்
கிறையேனு மிரங்கிற்றிலள்,
தன்துணை யாயவென்றன்
தனிமைக்கு மிரங்கிற்றிலள்
வன்துணை வானவர்க்காய்
வரஞ்செற்றரங் கத்துறையும்
இன்துணை வன்னொடும்போ
யெழிலாலி புகுவர்கொலோ

என்பது அவள் கூற்றாக அமைந்த பாடல். தன் மகளை அழைத்துச் சென்றவன் இறைவன் என்பதை அறிந்து அவன் அவளை எவ்வித இடர்ப்பாடுமின்றிக் காப்பான் என்பதை நன்கு உணர்ந்தவளாயினும் மகட்பிரிவால் அலைபாயும் தாயின் மன நிலையை அழகுபடச் சித்திரிப்பதாக உள்ளது இக்காட்சி.

முன்பு இராமனாய்த் தோன்றியபோது சீதை அவனைத் தொடர்ந்து காட்டுக்கு வருவதாகச் சொல்ல அவனும் அவளை உடன் அழைத்துச் சென்றபோது அவளுக்குத் தீங்கிழைத்த விராதனை வதைத்து அவள் அச்சத்தைப் போக்கினான் என்றும் அவ்வாறு சீதையின் அச்சத்தைப் போக்கியவன் இன்று தன் மகளுக்குப் பயம் ஏற்படாதபடிப் பார்த்து தீங்கின்றி அழைத்துச் சென்று களித்திருப்பான் என்றும் கூறியவள் சூர்ப்பனகை மூக்கரிந்ததால் அவனை விட்டு சீதை பிரிந்திருக்க நேர்ந்ததை நினைத்து தன் பெண்ணுக்கும் அப்படியொரு நிலை நேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்று நினைத்து அஞ்சியவளாய்ப் புலம்புகின்றாள்.

அஞ்சுவன் வெஞ்சொல்நங்காய்
அரக்கர்குலப் பாவைதன்னை
வெஞ்சின மூக்கரிந்த
விறலோன்திறங் கேட்கில், மெய்யே
பஞ்சியல் மெல்லடியெம்
பணைத்தோளி பரக்கழிந்து
வஞ்சியந் தண்பணைசூழ்
வயலாலி புகுவர்கொலோ

என்பது அப்புலம்பல். கிருட்டிணனாகத் தோன்றியபோது பூதகி போன்ற அரக்கர்களை அழித்தும் பிறருக்காக உழைத்தும் வாழ்ந்தவன் உருக்குமணியை அழைத்துச் சென்றபோது விட்டுப் பிரியாமல் சென்றது போல் அவள் பெண்ணையும் அழைத்துச் செல்வான் என்று அருகிலிருந்த பெண்டிர் கூறிச் சமாதானப்படுத்த. ஓரிடத்தில் பிறந்து மற்றோரிடத்தைப் பிறப்பிடமாகக் காட்டியவனும் விண்ணகரம், வெஃகா, வேங்கடம், குடந்தை, திருவரங்கம், திருக்கண்ணபுரம் என்றாற்போன்ற பல ஊர்களை உடைய்வனுமாகிய அவன் திருவாலியே புகுவானென்று எப்படி முடிவு செய்து அவனைத் துணையாகக் கொண்டு தன் மகள் நடந்திருப்பாள் என்று ஐயுற்று, தன் மகள் தன்னிடம் சொல்லாமல் அவனுடன் சென்று விட்டதை மீண்டும் மீண்டும் பேசி, அவ்விருவரும் திருவாலிக்குச் சென்று சேர்ந்திருப்பார்களோ மாட்டார்களோ என்றெண்ணிக் கலங்குகிறாள். இருவரும் திருவாலிக்குத் தான் செல்கின்றனர் என்று தெரிந்திருந்தும் இருவரும் ஒருவரையொருவர் விஞ்சும் அழகும் மணக்கும் பொருத்தமும் உடையவராதலின் மயங்கிப் பித்துப்பிடித்து செல்லுமிடம் அறியாது எங்காவது தடுமாறித் துன்புறுவரோ என்று அவர் பொருட்டு கவலையுறுகிறாள் அத்தாய். பரகால நாயகியின் தாயாக இருந்து ஆழ்வார் பாடிய இந்த மூன்று பாடல்களும் 'அயலார் தம்மொடும்' நற்றாய் புலம்பிய அகத்துறையில் அமையக் காண்கிறோம்.

மகளைப் பிரிந்த தாயர் தம் மகளை எண்ணிக்கலங்குவதை சங்ககாலம் முதல் இன்று வரை புலவர்கள் பாடியுள்ளனர்.

ஒருமக ளுடையேன் மன்னே அவளுஞ்
செருமிகு மொய்ம்பில் சுடர்வேற் காளையொடு
பெருமலை அருஞ்சுரம் நெருநற் சென்றனள் [23]

என்னும் பாடல் மகள் உடன்போக்கை மேற்கொண்டாள் என்பதை அறிந்த தாயின் துன்பநிலையை எடுத்துக்காட்டும் சங்கப் பாடல்களுக்குச் சான்றாகும். பெரியாழ்வாரும் தாய் நிலையில் நின்று தன்மகள் உடன்போக்கு மேற்கொண்டதை அறிந்து பதறிய வண்ணம் அருமையாக வளர்த்த தன் மகளை நினைத்து,

ஒருமகள் தன்னை யுடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண் மால்தான் கொண்டு போனான் [24]

என்று வருந்திக் கூறினார். . மாணிக்கவாசகரும்

பாழியன் மென்மொழி வன்மனப் பேதையோர் ஏதிலன்பின்
தோழியை நீத் தென்னை முன்னே துறந்துதுன் னார்கண்முன்னே
வாழியிம் மூதூர் மறுகச்சென் றாளன்று மால்வணங்க
ஆழிதந் தானம் பலம்பணி யாரின் அருஞ்சுரமே[25]

என்று நாயகியின் தாய் நிலையில் நின்று பாடியமை அறிகிறோம்.

பரகாலநாயகித் தாயார் தன் மகளைப் பற்றிய சிந்தனையில் இருந்தபோது மகளுடைய விளையாட்டுப் பொருள்களை நினைத்தவளாய் மண்ணால் சிற்றில் கட்டி விளையாடிய முற்றத்தையும் பந்தையும் வளர்த்த பைங்கிளியையும் தனக்கு விருப்பமானதும் பேசுவித்துப் பழக்கியதுமான பூவையையும் வேண்டா என்று துறந்து சென்று விட்டாளே என்று மகளைக் குறை கூறினாள்.

முற்றிலும் பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற
சிற்றில்மென் பூவையும் விட் டகன்றசெழுங் கோதை தன்னைப்
பெற்றிலேன் முற்றிழையைப் பிறப்பிலி பின்னே நடந்து
மற்றெல்லாம் கைதொழப்போய் வயலாலி புகுவர் கொலோ

என்னும் இப்பாடல் 'பயிலிடம் தம்மொடும் 'புலம்பற்குரிய துறையில் அமைந்துள்ளது.

இதுவென் பாவைக் கினியநற் பாவை
இதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி
இதுவென் பூவைக்கினிய சொற்பூவை யென்று
அலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
நீங்கின ளோவென் பூங்க ணோளே[26]

என்று இவ்வாறு தாயொருத்தி புலம்பிய நிலையை சங்கப் பாடல் காட்டுகின்றது. தலைவியோடு தொடர்புள்ள பொருள்களைக் கண்ட மாத்திரத்தில் அவள் நினைவு மீதூர துயர்ப்படும் தாயின் மனநிலையைக் குறிப்பிடும் இப்பாடலும் அவளோடு தொடர்புடையதும் அவளுக்கு மிகவும் விருப்பமானதுமான பொருள்களை நாயகன் பொருட்டு விட்டுச் சென்று விட்டாளே என்று எண்ணிக் கலங்கும் தாயின் மன நிலையைக் காட்டும் பெரிய திருமொழிப் பாடலும் இணைத்து எண்ணி மகிழத் தக்கதாக உள்ளது.

## பிரிவாற்றா நிலை :

ஆழ்வாராகிய நாயகிக்கு சௌரிராசப் பெருமானாகிய நாயகன் அருள்

செய்யவில்லை. நாயகியின் உடல் மெலிந்து நிறம் மாறியது. அந்நிலை கண்ட தாய் நாயகனின் தன்மையைப் பழித்தும் தலைவியின் இளமைக்கு இரங்கியும் பேசுகின்றாள். தன் மகள் நாயகனுடைய பிரிவாலும் நினைவாலும் மெலிந்து விட, வளை கழன்று விழுவதாகவும் 'அகலகில்லேன் இறையுமென்று அவனையே' நினைத்துக் கொண்டிருப்பதாகவும் இங்கே கண்ணபுரம் காணலாகுமோ என்று கை நீட்டிக் கேட்கும் நிலையில் இருப்பதாகவும் உண்ணாமலும் உறங்காமலும் சோர்வுடன் இருப்பதாகவும் அனைத்துப் பொருளையும் வெறுப்பதாகவும் கூறுகிறாள். தலைவன் பிரிவால் தலைவி அனைத்துப் பொருளையுமே வெறுப்பதாகக் கூறியுள்ளமை பாரதியாரின்

உணவு செல்லவில்லை சகியே ! உறக்கம் கொள்ளவில்லை
மனம் விரும்பவில்லை சகியே ! மலர்பிடிக்கவில்லை [27]

பாலும் கசந்தத டீ சகியே ! படுக்கை நொந்ததடி
கோலக் கிளிமொழியும் செவியில் குத்தலெடுத்ததடீ [28]

என்னும் பாடல் அடிகளை நினைவூட்டுகின்றது.

வழக்கமாகச் செய்யக் கூடிய செயல்கள் எதுவும் செய்யாமல் நாயகி பித்துப் பிடித்தவள் போல் காணப்படுகிறாள் என்றும் அரங்கனை நினைந்தவளாய்த் துயர்ப்படும் அவளை பெரிய பிராட்டியோடு அவ்வரங்கன் இணைத்து ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும் கூறும் அவ்ள் நீண்ட காலம் ஆசைப்படும் அவனுடன் இணைந்திருக்கப் பெறாமையால் எல்லாவற்றையும் வெறுத்துவிட்டாள் என்று கூறு முகத்தான்

துளம்படு முறுவல் தோழியர்க் கருளாள்
துணைமுலை சாந்துகொண் டணியாள்
குளம்படு குவளைக் கண்ணிணை யெழுதாள்
கோல நன் மலர்க் குழற் கணியாள்
வளம்படு முந்நீர் வையமுன் னளந்த
மாலென்னும் மாலின மொழியாள்
இளம்பிடி யிவளுக் கென்னினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே

என்று முறையிடுகிறாள். இனிய சொற்களைச் சொல்லாதவளாக பிறர் கேட்பதற்குப் பதில் கூறாதவளாக அவள் இருக்கும் நிலை பிறர் கண்டு அலர் தூற்றுவதற்கேற்ப உள்ளது. தோழியருடன் கலகலப்பாகப் பேசுவதில்லை. சந்தனம், மலர் போன்ற குளிர்ச்சியான பொருள்களை ஏற்றுக் கொள்வதில்லை; வருத்தத்தைத் தாங்கும்

பருவமில்லாதவளாக இருக்கிறாள் என்பது போன்ற தன்மைகளைப் புலப்படுத்தும் அவள் பின்னர் நாயகியின் உடல் நாளுக்கு நாள் மெலிந்து பசலை நிறமாவதாகவும் வளை கழலுவதாகவும் கூறி வருந்துகிறாள். தொல்காப்பியம் கூறும் அகத்திணை மரபுக்கு ஏற்றவாறு காமத்துப்பாலில் அதிகாரங்களை வகுத்துக் கொண்ட வள்ளுவர் படர்மெலிந்திரங்கல், பசப்புறு பருவரல், உறுப்பு நலன் அழிதல் ஆகியவற்றைத் தலைவியின் கூற்றாக அமைக்கிறார். அம்முறையிலேயே ஆழ்வாரின் பாடல்களும் அமைகின்றன. வள்ளுவர் இத்துறைகளைத் தலைவியின் கூற்றாக அமைத்திருக்க ஆழ்வார் தலைவியின் சார்பாக தாய் கூறும் கூற்றாகப் பாடியுள்ளார். நாயகியின் நிலைகண்டு இரக்கமுற்ற தாய் அவளிடம் எதைக் கேட்டாலும் நாயகனின் பெயரையே சொல்லுவதன்றி வேறுபேச்சுப் பேசுவதில்லை என்றும் அவனுடைய மேனியழகையே நினைத்து உருகுகிறாள் என்றும் அவள் கண்ணீர் சொரியவும் இடையொடியவும் மென்மையழியவும் விட்டு விடாமல் அவளை விரைவில் வந்து அடையவேண்டும் என்றும் முறையிட்டவள் உலகோரை உய்வித்தற் பொருட்டுப் பல்வேறு பிறப்புக்களை எடுத்து அவர்களைக் காத்தருளிய காத்தற் கடவுளான நாயகன் தன் மகளைக் காக்கலாகாதா என்றும் வேண்டுகிறாள்.

அன்னமும் மீனும் ஆமையும் அரியும்
ஆயஎம் மாயனே! அருளாய்

என்று தலைவியின் ஆற்றாமை கண்டு இரங்குவதாக உள்ளது பாடல்.

## தூது அனுப்புதல்:

அரசன் ஒருவன் மற்றோர் அரசனுக்கு ஒருவர் வாயிலாக தூது சொல்லியனுப்புவது பழங்காலம் தொட்டு இருந்து வந்தது. போர் முதலிய காரணங்களுக்காக அரசர்களிடம் இருந்து வந்த இந்தப் பழக்கம் இலக்கியத்தில் கற்பனையாக அமையும்போது சிலவகை வடிவம் பெற்றது. அதன்படி பேசாத பறவைகளையும் விலங்குகளையும் உயிரில்லாத மேகம், தென்றல் முதலியவற்றையும் தூது அனுப்புவதாகக் கற்பனை செய்து பாடுவது காதல் பாட்டுக்களில் இடம்பெற்றது. நம்பியகப்பொருளில் புறனடை நூற்பாவான

நெஞ்சு நாணு நிறைசேர் அறிவும்
செஞ்சுடர்ப் பரிதியும் திங்களும் மாலையும்
புள்ளும் மாவும் புணரியும் கானலும்
உள்ளுறு த்தியன்றவும் ஒழிந்தவை பிறவும்
தன்சொற் கேட்குநபோலவும் தனக்கவை
இன்சொற் சொல்லுந போலவும் ஏவல்

செய்குந போலவும் தேற்றுந போலவும்
மொய்குழற் கிழத்தி மொழிந்தாங்கு அமையும் [29]

என்பது தூது விடுப்பது பற்றிக் கூறுகிறது. இலக்கண விளக்கப் பாட்டியலும்

உயர்திணைப் பொருளையு மஃறிணைப் பொருளையும்
சந்தியின் விடுத்தல் முந்துறு தூது [30]

என்று இலக்கணம் வகுத்துள்ளது. இவ்விலக்கணத்துக்கேற்ப இறைவனிடம் தூது அனுப்பும் முறையில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடல்கள் பாடியுள்ளனர். அவர்களுடைய தூதுப் பாடல்கள் பக்திச் சுவை நிறைந்து உள்ளத்தை ஈர்க்கும் வகையிலமைந்துள்ளன. வண்டு, அன்றில், நாரை, கிளி, கோழி, குயில், காக்கை போன்ற பறவைகளைத் தூது அனுப்பியதாகப் பாடியுள்ளனர். "நாயகி நாயகர் காதலைப் பக்திப் பாடல்களுக்கு உரிய வடிவில் பாடிய ஆழ்வார்களும் நாயன் மார்களும் தூது என்னும் வகையை நன்கு பயன்படுத்தி நெஞ்சை உருக்கும் பாடல்கள் பலவற்றை அளித்திருக்கிறார்கள்"[31] என்னும் கூற்று பக்திப் பாடல்களில் தூது என்னும் இலக்கிய வகையை அவர்கள் கையாண்டமையைக் காட்டும்.

திருவாலி இறைவன் ஆழ்வார் உள்ளத்தில் புகுந்து நின்றதும் அந்த அனுபவம் வளர வளர அவனை நேரில் கண்டது போன்ற உணர்ச்சி ஆழ்வாருக்கு ஏற்படுகிறது. உடனே அவனைத் கட்டியணைத்து அனுபவிக்கும் எண்ணம் வருகிறது. தாம் பேசியதற்கு ஒரு சொல்கூட அவன் மறுமொழியாகச் சொல்லவில்லை என்பது ஆழ்வாருக்குப் பொறுக்கலா காத்துன்பத்தைத் தருகிறது. அதனால் முதலில் இறைவனோடு கூடிக் கலந்து நின்று அவ்வின்பத்தைச் சற்று அனுபவித்து மகிழ்வதற்கு முன்பே பிரிந்து அல்லலுறும் நாயகித் தன்மையைப் பெறுகிறார்.

பிரிவாற்றா நிலையில் துயருறும் நாயகி நாயகனிடம் தூதுவிடும் பாங்கில் திருமொழியை அமைக்கிறார். அதன்படி நாயகி வண்டு, குருகு, செம்போத்து, காக்கை, குயில், கிளி, கோழி, பல்லிக்குட்டி முதலியவற்றைத் தூது விடுத்து தன் நிலையை அறிவிக்குமாறு கூறுவதோடு நாயகனைத் தன்னிடம் வந்து சேருமாறு கூவியழைக்கும்படியும் வேண்டிக் கொள்ளுகிறாள். ஆழ்வார் பாடலில் பல்லிக் குட்டியிடம் நாயகி உரைப்பதைக் கருத்தில் கொண்டு "அஃறிணைப் பொருள்களுள் பல்லிக்குட்டியும் தூது அனுப்பும் மரபில் இடம்பெறுவது புதிய இலக்சிய மரபாய்த் தோற்றம்பெறுகிறது"[32] என்பர். இங்கு பல்லியிடம் தூது விடும் முறையில் நாயகியின் கூற்று அமையாவிட்டாலும் பல்லியை பேசும் உயிர்ப் பொருளாகக் கருதி தன் துன்ப நிலையை அதனிடம் உரைக்கும் முறையில்

பாடல்கள் அமைந்துள்ளன. வீட்டில் பல்லி ஒரு திசையில் ஒலித்தால் யாரோ விருந்தினர் வருவர் என்று நம்பும் பழைய நம்பிக்கை ஒன்றுண்டு. இதனை யொட்டியே 'திருமால் வருமாறு ஒலி செய், பல்லியே' என்று கூறுகிறாள் பரகால நாயகி.

பிரிவால் வருந்தும் தலைவியைப் பார்த்து தாயர் வருந்துவர் என்பதற்குரிய இலக்கணமாக தொல்காப்பியர் கூறிய

மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம் [33]

என்னும் தொடருக்கு நச்சினார்க்கினியர் உரை எழுதும்போது "அச்சம் சார்தலென்று கூறப்பட்டவற்றையும் அவை போல்வன பிறவற்றையும் பல்லி முதலிய சொல்நற்சொல் தெய்வங் கட்டினும் கழங்கினு இட்டு உரைக்கும் அத்தெய்வப் பகுதி என்பவற்றோடு கூட்டி வருந்திக் கூறலும்"[34] என்பது முதலாப் பொருள் கூறுகிறார். இதன்மூலம் 'பல்லி ஒலிப்பது நற்சொல்லேயாகும்'என்னும் நம்பிக்கை மக்களிடம் வேரூன்றி நின்றதை அறிகிறோம். பல்லி ஒலிப்பதை 'பல்லி கொட்டல்' என்றும் கூறுவர். இத்தொடரைப் பயன்படுத்தியே பரகால நாயகி

கொட்டாய் பல்லிக்குட்டி குடமாடி யுலகளந்த
மட்டார் பூங்குழல் மாதவனைவரக் கொட்டாய் பல்லிக்குட்டி

என்று வேண்டுகிறாள். உலக வழக்கில் பல்லி சொல்லுக்குப் பலன் சொல்வதுண்டு.

பல்லியின் சொல்லும்சொல் லாக்கொள்வ
தோவுண்டு பண்டு பண்டே [35]

என்பது நம்மாழ்வார் கூற்று. பல்லியை விளித்து கொட்டச் சொன்ன நாயகி, கிளியிடம் ஒளிமிக்க ஆழிப்படையை வலக்கையில் தாங்கியுள்ளவனும் வலிமை வாய்ந்த அழகிய தோள்களையுடையவனுமான நாயகனை வரச் சொல்லுமாறு கூறுகிறாள். மேலும் கண்ணில் பட்ட வண்டு, குருகு இவற்றை அழைத்து தன் நிலையை நாயகனிடம் கூறும்படி தூது விடுகிறாள். அவை தம் துணையுடன் மகிழ்வதைச் சுட்டிக்காட்டி,

தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே
பூவிரிய மதுநுகரும் பொறிவரிய சிறுவண்டே
தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி
ஏவரிவெஞ் சிலையானுக் கென்னிலைமை யுரையாயே

என்று தான் பிரிவால் வருந்தி நிற்கும்போது அவை துணையுடன் கூடி மகிழ்வது

நீதியன்று என்பதையும் கூடி வாழுமாறு செய்வது அவற்றின் கடமை என்பதையும் உணர்த்துகிறாள். திருவாலியில் அந்தணர்கள் நிறைந்திருப்பதைச் சுட்டிக்காட்டி அவர்களெதிரில் தூதுச்செய்தியை அவனுக்கு அறிவித்தால் அவர்களும் தனக்காகப் பரிந்து பேசி அவனுக்கு நல்லுரையும் கூறி தன்னிடம் அவன் வருமாறு செய்வார்கள் என்பதை வெளியிடுகிறாள். அவன் தன்னைப் பற்றி என்னதான் நினைத்திருக்கிறான் என்பதை அறிந்து வந்து கூறுமாறு கேட்கும் அவள், அவன் தன்னை நினையாதிருப்பினும் தான் அவனையே நினைந்து நைந்து போகும் நிலை வருவதை உணர்த்துகிறாள். இப்பாடலில் காணப்படும் 'தூவிரிதல்' என்பது கருமயோக, ஞானயோக செயல் முறைகளையும்' 'மலருழக்குதல்' என்பது சீவான்மாவின் வெளிப்பாட்டையும் 'துணை' என்பது இறைவனைச் சூழ்ந்து நிற்கும் அடியவர்களையும் 'பூவிரிய மது ' என்பது சீவான்மாவினுள்ளிருக்கும் பரமான்ம வடிவத்தையும் 'பொறி' என்பது சங்கு, சக்கரம் முதலிய சின்னங்களையும் 'வண்டு' என்பது அடியாரையும் குறிப்பதாகக் கருதுவர்[36]. தன்னை அவன் நினையா திருப்பினும் தனக்கு அவனையே நினைந்து நைந்து போகும் நிலை வருவதை உணர்ந்து அந்த வண்டிடம் புலம்புகின்றாள்.

தானாக நினையாயேல் தன்னினைந்து நைவேற்கு, ஓர்
மீனாய கொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ?
தேன்வாய வரிவண்டே திருவாலி நகராளும்
ஆனாயற் கென்னுறுநோ யறியச்சென் றுரையாயே

என்பது புலம்பல் மொழி. திருவாலி நகராளும் ஆயனுக்கு இரண்டு தலைமை சேர்ந்த பிறகு தன்னைக் கவனிப்பதற்கு நேரமில்லை என்றும் ஆயனாயினும் ஆங்காங்கே பல பெண்களை ஆதரித்து வந்தான் என்றும் அப்படிப்பட்டவன் நொந்து போயிருக்கும் தன்னை மேலும் மேலும் வருந்தவிடான் என்றும் அதை அவன் அறியுமாறு சொல்ல வேண்டும் என்றும் வேண்டுகிறாள். அவள் இவ்வாறு பறவைகளைத் தூது செல்லும்படி வேண்டும் போதெல்லாம் நாயகனே நெஞ்சில் நிறைந்திருந்தபடியால் அவனே நேரில் வந்ததாக எண்ணி அவனிடம் தன் துன்ப நிலையையும் தன்னுடைய உறுப்பு நலன் கெடுவதையும் எடுத்துக் கூறி தன்னைக் கூடுமாறு கேட்பதாக உள்ளது,

வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப,
நாணாளும் நின்னினைந்து நைவேற்கு, ஓ! மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த
தோளாளா! என்றனக்கோர் துணையாள னாகாயே !

என்னும் பாடல். முதலிலுள்ள நான்கு பாடல்களில் தூது விட்டவள் இப்பாடலில் நாயகனை நேரில் காண்பதாகக் கூறுகிறாள். காதல் மிகுதியால் பேசும்போது நிலை தடுமாறி தான் நெஞ்சில் நினைத்தவற்றை நேரில் காண்பதாகக் கருதுவதற்கு அவளுடைய இடையறா எண்ணமே காரணமாகும். பரகால நாயகியைப் போலவே சங்ககாலத் தலைவி ஒருத்தியும் குருகை விளித்து தூது சென்று பாடுமாறு வேண்டுவதை,

சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே
துறைபோ கறுவைத் தூமடி யன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே
எம்மூர் வந்தெம் உண்துறைத் துழைஇச்
சினைக்கெளிற் றார்கையை யவரூர்ப் பெயர்தி
அனையவன் பினையோ பெருமற வியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே [37]

என்னும் பாடலால் அறிய முடிகிறது. புறச் செய்தியே புகலும் புறநானூற்றுப் பாடலுள்ளும் பறவையைத் தூதாக விடுத்த வழக்கு பேசப்படுகிறது. விளிக்கும் முறையில் பிசிராந்தையார் 'அன்னச் சேவல்' என்று தொடங்குவதாய்ப் பாடிய பாடலொன்றில் உயிர் நண்பனாக விளங்கும் கோப்பெருஞ்சோழனுக்கும் தனக்கு முள்ள உறவைப் புலப்படுத்தும் அவ்வளவிலேயே ஆண் அன்னத்தின் துணையாக விளங்கும் பெண் அன்னம் விரும்பும் அணிகலன்களை அரசன் தருவான் என்பதாகக் கூறப்பட்டுள்ளது.

வண்டு, குருகு ஆகியவற்றைத் தூதனுப்பிய பின்னரும் துயரத்தில் மூழ்கியிருந்தவள் செம்போத்து, காக்கை, கிளி முதலிய பறவைகளை விளித்து தன் நிலை கூறுமாறு வேண்டுகிறாள். பறவைகள் வழக்கமாக ஒலி செய்து கொண்டிருக்கும்போது அவற்றை அழைத்து நாயகன் தன்னிடம் வந்து சேரும்படியாகக் கூவ வேண்டும் என்கிறாள். செம்போத்தை விளித்த அவள்,

திருத்தாய் செம்போத்தே திருமாமகள் தன் கணவன்
மருத்தார் தொல்புகழ் மாதவனைவரத் திருத்தாய் செம்போத்தே

என்று கூறுகிறாள். செம்போத்து என்னும் அழகிய பறவை வலம் வருமானால் மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சி நடக்கும் என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் அதை வலம் வரச் சொல்லுகிறாள். இவ்வாறு கூறியவள் தன் வீட்டு முற்றத்தில் காக்கை

அமர்ந்திருப்பதைக் காணுகின்றாள். முற்றத்தில் காக்கை வந்து அமர்ந்து கொண்டு கரைந்தால் விருப்பமானவர்கள் வருவர் என்பதால் நாயகன் வருமாறு கரைய வேண்டுகிறாள்.

கரையாய் காக்கைப் பிள்ளாய் கருமத முகில்போல் நிறத்தன்
உரையார் தொல்புகழ் உத்தமனைவரக் கரையாய் காக்கைப் பிள்ளாய்

என்பதன் வாயிலாக நாயகன் வருவதைத் தான் உறுதிப்படுத்திக் கொள்ளும் வண்ணம் அது கரைய வேண்டும் என்னும் குறிப்பைப் புலப்படுத்துகிறாள். காக்கை கரையும் ஒலியிலும் தாம் எதிர்பார்த்திருந்த காதற் செய்தி பற்றிய குறிப்பைக் கேட்டு மகிழ்வர் என்னும் கருத்தமைந்த

காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர்
கார ணாகரு ளக்கொடியோனே [39]

என்னும் பெரியாழ்வார் கூற்றும் இவ்விடத்து நோக்கத் தக்கது. மரத்தின் கிளையில் குயில் அமர்ந்து கூவிக் கொண்டிருப்பதைக் கண்ட நாயகி அதை நோக்கியும் நாயகன் வரும்படியாகக் கூற வேண்டும் என்கிறாள். செம்போத்து, காக்கை, குயில் ஆகியவற்றைத் தூதாக விடுத்தவள் பறவைகளில் ஏறத்தாழ மக்கள் பேச்சை ஒத்து ஒலிக்கவல்ல கிளியையும் தூதாக விடுக்கிறாள்.

பிரிவாற்றாமையால் உடல் மிகவும் மெலிந்து வளை நெகிழ்ந்து குழல் கலைந்து சோர்ந்திருக்கும் நாயகி தன் தலையில் உட்காரவரும் தும்பியைக் கண்டு, அது தன் கூந்தல் மலரில் தேனுண்ண வந்ததென்று நினைத்து அதனிடம் தனக்கு உதவி செய்யும் வண்ணமாக நாயகன் அணிந்திருக்கும் துழாயில் சென்று அமர்ந்து கேட்டு மீண்டும் தன்னிடம் வந்து அவனைப் பற்றிய செய்தியைச் சொல்லுமாறு ஊத வேண்டும் என்று வேண்டி அவ்வாறு செய்தால் உணவளிப்பதாகவும் கூறுகிறாள். நாயகனைச் சார்ந்த பொருள்களைத் தொட்டு வந்த தும்பியைத் தொட்டாலே அவனைத் தொட்டது போலாகும் என்றெண்ணி தலைவியர் ஆறுதலடைவர் என்பதற்கேற்ப நாயகன் அணிந்த மாலையில் ஊதிய வண்டு தன்னிடம் வந்தமர்ந்து ஊத வேண்டும் என்பதாக உள்ளது அவள் நிலை. மீனாக, ஆமையாக, நரசிம்மமாக உருவெடுத்தவனும் கருநிறம் கொண்டவனும் மலர் மகளை மார்பில் உடையவனும் வலக்கையில் திருவாழி ஏந்தப் பெற்றவனும் வராகவதாரத்தில் பூமியை மீட்டவனும் வாமனனாகி வந்தோனும் நந்தகோபரின் மிடுக்குள்ள மகனாக வளர்ந்தோனும் காயாம்பூ நிறமுடையவனுமான கண்ண புரத்தானின் நறுந்துழாய் மாலையில் அமர்ந்து பின்னர் வந்து ஊதுவாய் என்று

தும்பியிடம் கூறுகிறாள். நாயகனிடம் செல்லும் வழியில் நிலப்பூ, நீர்ப்பூ ஆகியவற்றைக் கண்டுவிட்டால் அங்கேயே அமர்ந்து தேனுண்டு கிடக்கும் என்று கருதி அவ்வாறு உண்ட மயக்கத்தில் உறங்கிவிட்டால் நாயகனிடம் செல்ல மறந்து விடலாம் என்று நினைத்தவளாய்,

நீல மலர்கள் நெடுநீர் வயல்மருங்கில்
சால மலரெல்லா மூதாதே, வாளரக்கர்
காலன் கண்ணபுரத் தெம்பெருமான் கதிர்முடிமேல்
கோல நறுந்துழாய் கொண்டூதாய் கோல்தும்பீ

என்று நுட்பமாகப் பேசுகிறாள். தான் இட்ட பணியைச் செவ்வனே செய்ய விருப்பத்துடன் செல்ல வேண்டும் என்று வற்புறுத்தி ஏனைய மலர்களுக்கு அது செல்வதால் அடையப்போகும் பயன் எதுவுமில்லை, திருத்துழாய் மாலையில் அமர்ந்து வந்தால் மட்டுமே அவனுடைய அருளைப் பெறலாம் என்று கூறி அத் தும்பிக்கு ஊக்கமூட்டியவளாக

ஏரார் மலரெல்லா மூதிநீ யென்பெறுதி
பாரா ருலகம் பரவப் பெருங்கடலுள்
காரா மையான கண்ணபுரத் தெம்பெருமான்
தாரார் நறுந்துழாய் தாழ்ந்தூ தாய் கோல்தும்பீ

என்கிறாள். இவ்வாறு தும்பியைத் தன் நாயகனிடம் சென்று வரும்படி பாடல்களைப் பாடுகிறாள். மாணிக்கவாசகர் நாயகியாகி தும்பியை விளித்து தன் உள்ளத் துயரங்களை அதனிடம் சொல்வதாக உள்ள திருவாசகப் பாடலை பரகால நாயகியின் பாடல் ஒரு வகையில் ஒத்திருப்பதாகக் கருத இடமுண்டு. சிறு பூவில் காணப்படும் தேனை உண்ணாது ஆனந்தத் தேன் சொரிகின்ற நாயகனிடம் சென்று ஊதுமாறு தும்பியை விளித்து மாணிக்கவாசக நாயகி

தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூ தாய் கோத்தும்பி [40]

என்று கூறுவதே அப்பாடல். இவ்வாறு பல்வேறு உயிரினங்களையும் அழைத்து நாயகனின் பிரிவால் தான் பசலையுற்று வருந்துவதாகவும் அவ்வழகை நிலைக்கச் செய்வதற்கு அவனை வரச்சொல்ல வேண்டும் என்றும் தூது விடுக்கிறாள் பரகால நாயகி.

வைணவர்களின் வேதமாகிய திருவாய்மொழி பாடிய நம்மாழ்வார் தம்மை நாயகியாகக் கற்பனை செய்து அன்னம், அன்றில், கிளி, பூவை முதலிய பறவைகளை திருமாலிடம் தூது அனுப்புவதாகப் பாடும் பாடல்கள் இலக்கிய நயமும் பக்திச் சுவையும் நிரம்பியவை. நாயகனின் பிரிவாற்றாமையால் வாடி மெலிந்த நாயகி பறவைகளையும் உயிரில்லாப் பொருள்களையும் நோக்கிப் புலம்பி அப்புலம்பல் மொழிகளைத் தான் கூறியவாறு தலைவனிடம் கூறாதொழிந்தால் உணவு பெறா நிலை ஏற்படும் என்பதாகப் பேசுகிறாள்.

நீயலையே சிறுபூவாய் !
நெடுமாலார்க் கென்தூ தாய்
நோயெனது நுவலென்ன
நுவலாதே யிருந்தொழிந்தாய்
சாயலொடு மணிமாமை
தளர்ந்தேன் நான் இனியுனது
வாயலகில் இன்னடிசில்
வைப்பாரை நாடாயே [41]

என்பது அது.

சைவ சமயக் குரவருள் ஒருவரான சுந்தரரும் நாயக நாயகி முறையில் பாடுமிடத்து இவ்வாறு தூது விடுப்பதைக் காண்கிறோம். அதில் தலைவி உடல் மெலிந்து வாடுவதாகவும் வளை கழல்வதாகவும் உணர்த்தி தலைவனை வரச் சொல்லி மேகம், கிள்ளை, பூவை, நாரை, சக்கரவாகம், வண்டு, குருகு, குயில், அன்னம் ஆகியவற்றைத் தூது அனுப்புகிறாள். சுந்தர நாயகி கிளியையும் வண்டையும் குருகையும் தூதாக அனுப்புவதில் பரகால நாயகியை ஒத்திருக்கிறாள். நாயகியர் அனைவரும் தலைவனை நினைத்து தம்மை மறந்த நிலையில் பறவைகளையும் அஃறிணைப் பொருள்களையும் தூது அனுப்புகிறார்கள்.

பறக்கும்எங் கிள்ளைகாள் பாடும்எம் பூவைகாள்
அறக்கண்என் னத்தகும் அடிகளா ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உறக்கம்இல் லாமையும் உணர்த்த வல்லீர்களே [42]

என்பது அதற்கொரு சான்று.

திருஞான சம்பந்தரும் நாயகித் தன்மை அடைந்து அந்நாயகி மூலமாக வண்டு, குருகு, கோழி, புறா, அன்னம், அன்றில், குயில், கிளி, பூவை

ஆகியவற்றை அழைத்து நாயகனைப் பிரிந்ததாற்படும் மன வேதனையையும் உடல் மெலிய பசலை நோய் வந்துற்றமையையும் எடுத்துக்காட்டி தோணிபுர நாயகனை வரச்சொல்லுமாறு கூறுகிறார். நாயகன் தன்னிடத்தில் வரும்படியாக அழைத்து குயிலைக் கூவுமாறும் அவனுடைய திருப்பெயர்களைச் சொல்லுமாறு கிளியிடம் கெஞ்சுவதாகவும் பாடல்களை அமைக்கிறார்.

சிறையாரு மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளத்
துறையாருங் கடல்தோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே [43]

என்பது அவர் பாடல். மாணிக்கவாசகரோ எனில் நாயகி நிலையில் நின்று நாயகன் பிரிந்ததனால் ஏற்பட்ட பிரிவுத்துயரை ஆற்ற முடியாமல் குயிலை விளித்து நாயகனைக் கூவியழைக்கும்படிச் சொல்லுகிறார். நாயகனின் பெருமைகளை யெல்லாம் குயிலை விளித்துக் கூறுவதில் குறிப்பிடுகிறார்.

தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயி
லேஇது கேள்நீ
வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை
ஆட்கொண்ட வள்ளல்
ஊன்பழித்துள்ளம் புகுந்தென் உணர்வது
வாயவொருத்தன்
மான்பழித் தாண்டமென் னோக்கி மணாளனை
நீவரக் கூவாய் [44]

என்பது அத்தகைய பாடல்களுள் ஒன்றாகும். தலைவனுடைய பெயர், நாடு, ஊர் முதலிய பத்து உறுப்புகளையும் கூறி அவன் பெருமையை விளக்குவதாகக் காட்டும் திருத்தசாங்கப் பகுதியில் கிளியை விளித்து அப்பத்தையும் கூறுமாறு தலைவி வேண்டுவதாகவும் குறிப்பிடுகிறார்.

தாயுமானவரும் கிளியைத் தூதாக அனுப்பும் தன்மையிலமைந்த பாடல்களை பைங்கிளிக்கண்ணி என்னும் தலைப்பிலமைத்து ஐம்பத்தெட்டுக் கண்ணிகளைப் பாடியுள்ளமை அறிகிறோம். இறைவனாகிய தலைவன் மீது அன்புகொண்ட தாயுமானவத் தலைவி தலைவனிடம் கிளியைத்தூது அனுப்புகிறாள். அதை விளித்து தன் மனத்தில் நிறைந்திருக்கும் தலைவனுக்குத் தன்னுடைய துன்பங்களை யெல்லாம் எடுத்துச்சொல்லி தான் இன்புறுமளவிலான

செய்தி கொண்டு வரவேண்டும் என்றும் உயிருக்குயிராகிய தலைவன் விரைவில் வரச் செய்ய வேண்டும் என்றும் ஒருவரும் அறியாதவாறு மிகவும் இரகசியமாகத் தூது சென்று வரவேண்டும் என்றும் வேண்டுகிறாள்.

அகமேவு மண்ணலுக்கென் னவ்வமெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பைங்கிளியே[45]

என்பது கிளிக்கண்ணிப் பாடலாகும். திருமங்கையாழ்வார் பாடல்களில் காதல் தூதாக அனுப்பப்பெறும் பறவைகள் சீவான்மாக்களைப் பரமான்மாவிடத்தில் சேர்க்கத் துணையாக அமைகின்றன. தலைவி உடுத்தும் உடையும் அணியும் வளையும் முறையே அகங்காரத்தையும் மமகாரத்தையும் அதாவது யான், எனது என்னும் செருக்குகளையும் உணர்த்துவதாக அமைந்துள்ளன. தலைவன் பிரிந்து சென்ற காரணத்தால் உடல் மெலிந்து ஆடை நெகிழ்வதும், வளை கழல்வதுமாகக் கூறப்படுவது இறைவன் அடியவருக்கு அருள் செய்ய காலம் தாழ்த்தி நிற்க, அதையுணர்ந்த அவ்வடியவர் யான், எனது என்னும் செருக்கு ஒழிந்து நிற்கும் நிலையைக் குறிப்பால் உணர்த்துவதாக அமைகிறது.

காம மயக்கத்தால் அஃறிணைப் பொருள்களை முன்னிலைப்படுத்தித் தன் ஆற்றாமையைக் கூறி தூது சென்று வருமாறு கூறுவதை முன்னையோர் ஒரு நெறியாகவே கொண்டதால் இலக்கணநூலார் காமமிக்க கழிபடர்கிளவி என்னும் தொடரால் இதனை உணர்த்தினர். ''காம மிக்க கழிபடர் கிளவியும்''[46]என்று முத்து வீரியம் இதற்கு இலக்கணம் கூறுகிறது. தூது அனுப்பியும் வராமற்போகவே நாயகி அவனையே நினைந்து காமம் மீதூர்ந்தவளாய் மெலிவடைகிறாள். உறக்கத்தை மறந்து விடுகிறாள். இதைக் கண்ணுற்ற தாய் மேகம் போன்ற மேனியுடையவனும் தேவர்களின் உயிரைக் காப்பவனுமாகிய தலைவன் தன் மகளை மட்டும் துன்புறுத்துகிறான் என்றும் வெற்றி பொருந்திய வில்லை ஆள்கின்றவனும் மராமரம் ஏழையும் ஒரே அம்பினால் துளைத்தவனுமான அவன் தன் பெண்ணை வருத்துவது ஏனோ என்றெண்ணி வருந்துகிறாள். மான் போன்ற நோக்குடைய தன் மகள் அவனை எண்ணிக் கண்ணீர் விட்டு அவனது வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பதைக் கருத்தில் கொண்டு திருடி உண்பதற்கே அவனுக்கு நேரம் போதாதாகையால் எங்கு வரப்போகிறான் என்று நொந்து கொண்டு அவள் நிலையைப் புலப்படுத்து முகமாக

தாய்வாயில் சொற்கேளாள் தன்னாயத்
தோடணையாள் தடமென் கொங்கை
யே, ஆரச் சாந்தணியாள், எம்பெருமான்
திருவரங்கமெங்கே? என்னும்

பேய்மாய முலையுண்டிவ் வுலகுண்ட
பெருவயிற்றன் பேசில் நங்காய்
மாமாய னென்மகளைச் செய்தனகள்
மங்கையீர்! மதிக்கி லேனே

என்று அவனை நினைத்தவண்ணம் ஒப்பனை செய்வதில் நாட்டமில்லாதிருப்ப தாகவும் அவன் பெருமைகளைப் பற்றியே பேசிக்கொண்டிருப்பதாகவும் குறிப்பிடுகிறாள். பலரும் பார்த்து இகழ்ந்து பழி தூற்றிப் பேசக்கூடிய அளவுக்கு மாயவனே, மாதவனே என்றெல்லாம் பிதற்றிக் கொண்டிருப்பதாகவும் ஆயத்தோடு விளையாடுவதில்லையென்றும் தான் வளர்க்கும் கிளி, பூவைகளைக் கூடப் பேணுவதில்லை என்றும் கூறுகிறாள்.

## சுற்றத்தார் ஐயம் :

களவல ராயினுங் காமமெய்ப் படுப்பினும்
அளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினும் [47]

என்பது தொல்காப்பிய நூற்பா. தலைவன் தலைவி களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகியவிடத்தும் புதிதுற்ற அழகு கண்டவிடத்தும் அயலார் வினவுவர் என்பது இதன் பொருள். இந்நூற்பா குறிப்பிடும் இலக்கண அமைதிக்கேற்ற முறையில் பெரிய திருமொழியின் எட்டாம் பத்து முதல் திருமொழிப் பாடல்கள் அமைந்துள்ளன. தொல்காப்பியத்தில் சுற்றத்தினர் தோழியை வினவுவதாக அமைந்துள்ள பாங்கு சற்றே மாற்றம் பெற்று பெரியதிருமொழியில் சுற்றத்தினர் தாயை வினவுவதாக அமைகிறது. திருக்கண்ணபுரத்து இறைவனிடம் தன் மனத்தைப் பறிகொடுத்த நாயகியிடம் பல மாற்றங்கள் ஏற்பட்டதைக் கண்ட சுற்றத்தார் அவற்றுக்குரிய காரணங்களைக் கேட்டறிவதற்கு வந்தனர். அவ்வாறு வந்தவர்களிடம் நாயகியின் தாய்,

சிலையிலங்கு பொன்னாழி திண்படைதண்
டொண்சங்கம் என்கின் றாளால்
மலையிலங்கு தோள் நான்கே மற்றவனுக்
கெற்றேகாண்! என்கின் றாளால்,
முலையிலங்கு பூம்பயலை முன்போட
அன்போடி யிருக்கின் றாளால்
கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரத்
தம்மானைக் கண்டாள் கொல்லோ

என்று காதல் நோயால் நாயகனுக்குரிய சங்கு சங்கரத்தையும் அவன் தோள்களையும்

அவனிருக்கும் கண்ணபுரத்தையும் பற்றிச் சொல்லிப் புலம்புவதையும் உற்றாரோடு பேசாதிருப்பதையும் கூறுகிறாள். நாவுக்கரசர் பாடிய பாடல் போலவே இது அமைந்துள்ளது.

வனபவள வாய்திறந்து வானவர்க்கும்
தலைவனே என்கின்றாளால்
சினபவளத் திண்டோள்மேல் சேர்ந்திலங்கு
வெண்ணீற்றன் என்கின்றாளால்
அனபவள மேகலையோடு அப்பாலைக்
கப்பாலான் என்கின்றாளால்
கனபவளம் சிந்தும் கழிப்பாலை சேர்வானைக்
கண்டாள் கொல்லோ [48]

என்பது அவர் பாடல். தலைவியின் களவொழுக்கத்தை அறிந்து கொண்ட ஊர்ப்பெண்டிர் அதைத் தெரியாதது போலக் காட்டிக்கொண்டு அவள் மேனியில் மாற்றங்கள் நிகழக் காரணம் வினவ, தாயும் சிறிதும் தயக்கமின்றி உண்மை நிலையை வெளிக்காட்டிக் கூறுவதை இங்கு அறிய முடிகிறது.

## ஒளிவளை இழந்தமை :

பிரிவுத் துயரால் தலைவி வருந்திக் கூறுவதையும் வருந்தும் இடத்தையும் கூறவந்த தொல்காப்பியம்

கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின்
அலமரல் பெருகிய காலத்து மிகுதியும்
இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும் [49]

வண்ணம் பசந்து புலம்புறு காலை
உணர்ந்த போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே[50]

என்று இலக்கணம் கூறுகிறது. தன் உடல் மெலிந்தாலும் அது பற்றி வருந்திக் கூறியவண்ணம் தானிருக்கும் இடத்தில் இருப்பதன்றி தலைவன் இருக்குமிடத்திற்குச் செல்லுதலில்லா உயர்ந்த நிலையிலுள்ளவள் தலைவி என்பதை,

உடம்பும் உயிரும் வாடியக் காலும்
என்னுற் றனகொல் இவையெனின் அல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை[51]

என்றும் கூறுகிறது. இவ்விலக்கண அமைதிக்கேற்பவே ஆழ்வார் பாடல்கள் அமைகின்றன. நாயகியைச் சார்ந்தோரின் அளவற்ற அன்பைக் கண்டு நாயகன் தானே அவளிடம் வருகிறான். அதனால் மகிழ்ந்த தலைவி பின்னர் அவன் அருகிலிருக்கும் நிலை நீங்கிவிட

ஏடி லங்கு தாமரைபோல்
செவ்வாய் முறுவல் செய்தருளி
மாடு வந்தென் மனம்புகுந்து
நின்றார் நின்றவூர் போலும்

மாலைப் புகுந்து, மலரணைமேல்
வைகி யடியேன் மனம்புகுந்தென்
நீலக் கண்கள் பனிமல்க
நின்றார் நின்றவூர் போலும்

என்ஐம் புலனும் எழிலுங்கொண்
டிங்கே நெருநல் எழுந்தருளி
பொன்னங் கலைகள் மெலிவெய்தப்
போன புனிதன் ஊர்போலும்

என்றெல்லாம் பலவாறு நாயகன் வந்தமை, மென்மலர்களைப் பரப்பிய பள்ளியில் கூடியிருந்தமை, உள்ளத்துள் நிறைந்தமை, பிரிந்து சென்றபோது ஆடை நெகிழ்ந்தமை ஆகியவை குறித்துப் புலம்புகிறாள். உரலில் கட்டுண்டது, மருத மரத்தை முறித்தது, தயிர் திருடி உண்டமைக்காகத் தாய் யசோதை அடிக்க முனைந்தபோது அஞ்சி அதை உண்ணவில்லை என்று சொல்லும் பாவனையில் வாயைத் துடைத்துக் கொண்டது, கோவர்த்தன மலையைத் தூக்கிப் பிடித்துக் கோவலரைக் காத்தது, குவலயாபீடம் என்னும் யானை அஞ்சும்படி அதன் தந்தத்தை ஒடித்தது, நப்பின்னையை மணந்து கொள்ளுவதற்காக எருதுகளை அடக்கியது, இரணியனின் உடல் பிளந்தது ஆகிய வீரதீரச் செயல்களைச் செய்த மாயவனைப் பிரிந்தமையால் உடல் மெலிந்து வளைகள் கழன்றன என்றும் இரங்கிக் கூறுகிறாள். மேலும்,

வண்டமரும் மலர்ப்புன்னை வரிநீழ லணிமுத்தம்
தெண்டிரைகள் வரத்திரட்டும் திருக்கண்ண புரத்துறையும்
எண்டிசையு மெழுசுடரு மிருநிலனும் பெருவிசும்பும்
உண்டுமிழ்ந்த பெருமானுக் கிழந்தேனென் ஒளிவளையே

என்று அவள் நாயகன் புகழைக்கூறும் வகையில் பாடல்களை அமைத்த ஆழ்வார்

இறைவனின் அவதாரச் சிறப்புகளையும் அடியவர்க்கு அருளும் கருணை உள்ளத்தையும் தெள்ளிதின் விளக்குகின்றார்.

தலைவன் பிரிந்து சென்றவிடத்துத் தலைவி வாடுவதால் அவள் மேனி மெலிவடையும். அவ்வாறு மெலிவடையும்போது அவள் முன்கை வளையல்கள் கையினின்றும் கழன்று வீழ்ந்துவிடும். இதனை 'வளை சோர்தல்' அல்லது 'தொடிநெகிழ்தல்' என்பர்.

யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே[52]

என்று குறுந்தொகைத் தலைவி தன் வளை நெகிழ்வது பற்றிக் கூறுவதைக் காண்கிறோம். சங்க இலக்கியத்துள் காணப்படும் இம்மரபே பக்தி இலக்கியத்துள் நுழைந்து விட்டதெனலாம்.

## துன்பத்துப் புலம்பல்:

தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் காணப்படுவதாகிய ''இன்பத்தை வெறுத்தல்''[53] என்று தொடங்கும் நூற்பா சுட்டும் இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், பசலை பாய்தல், கண்துயில் மறுத்தல் ஆகிய அகத்துறைகள் பெரிய திருமொழியில் இடம் பெறுகின்றன. திருக்கண்ணபுரத்தில் இறைவனைக் காணப் புறப்பட்ட ஆழ்வாருக்கு நடுவழியில் நாயகி பாவனை தோன்றி விடுகிறது. ஆறுதல் பெற அந்திமாலைப் பொழுதில் தனித்திருக்கும் நாயகி தன் ஏக்கத்தைப் புலப்படுத்தும் வகையில் பேசுகிறாள். வாசுதேவரின் கால்களில் கம்சன் பூட்டிய விலங்கு முறிந்தொழிவதற்குக் காரணனான கிருட்டிணன் ஆய்ப்பாடி வந்து சேர்ந்ததாகவும் அவன் பொருட்டு தன் மனம் தன்னை விட்டு அகன்றதாகவும் அவனருள் கிடைப்பது வரை உயிரைக் காத்து நிற்க எண்ணியிருப்பதாகவும் அவ்வாறு எண்ணியிருக்கவும் அவன் மாட்டுக் கொண்ட காதலால் சந்திரன், தென்றல் ஆகியவை வருத்தி ஏக்கத்தைப் பெருகச் செய்வதாகவும் வளைகள் கழன்றோடுவதாகவும் கூறி, பின்னர்

எரியும் வெங்கதிர் துயின்றது
பாவியேன் இணைநெடுங் கண்துயிலா
கரிய நாழிகை ஊழியில்
பெரியன கழியுமா றறியேனே

என்று புலம்புகிறாள். பகல் முழுவதும் மேய்ந்து விட்டுத் தம் இருப்பிடம் திரும்பும்

ஆநிரைக் கூட்டங்களின் மணியோசையும் ஆயர்களின் குழலோசையும் மாலைப் பொழுதை அறிவுறுத்த அக்காலம் வந்துற்ற பின்னும் நாயகன் தன்னைத் தேடி வராதது கண்டு

மலங்க வெஞ்சமத் தடுசரம்
துறந்தஎம் அடிகளும் வாரானால்
இலங்கு வெங்கதிர் இளமதி
யதனொடும் விடைமணி யடும் ஆயன்
விலங்கல் வேயின தோசையு
மாய்இனி விளைவதொன் றறியேனே

என்று மனம் நொந்து கொள்கிறாள். ''பருவங் கண்டு பெருமகள் புலம்பலும்''[54] என்னும் இலக்கண அமைதி பொருந்த இது அமைகிறது. இன்பப் பாடல்களைக் காட்டிலும் தலைவன் பிரிவால் ஏற்படும் துன்பப் பாடல்களில் இலக்கிய நயத்தையும் உணர்ச்சிப் பெருக்கையும் ஒரு படி மேலாகவே காணமுடிகிறது. தனிமையை நினைந்து புலம்பும் தலைவிக்கு கார், இளவேனில் முதலான பருவங்களும் மாலைக் காலமும் தூபமிட்டாற்போல துன்பத்தைப் பெருக்குகின்றன. அகத்துறை வாழ்வில் ஈடுபட்டிருந்த தலைவி தலைவனைப் பிரிந்திருந்த நிலையில் பொழுது கண்டிரங்கி

நின்வலித் தமைகுவன் மன்னோ அல்கல்
புன்கண்மாலையொடு பொருந்திக் கொடுங்கோல்
கல்லாக் கோவலர் ஊதும்
வல்வாய்ச் சிறுகுழல் வருந்தாக் காலே[55]

என்று கூறுகிறாள். வள்ளுவரின் கற்பனைத் தலைவியும்

பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்[56]

அழல்போலும் மாலைக்குத் தூ தாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை[57]

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும்[58]

என்று கூறியே வருந்துகிறாள். மாலைப்பொழுது வருத்துவதால் பிரிந்தவர் மயங்கி வருந்துவது பற்றிக் கூறுவது 'பொழுது கண்டு இரங்கல்' என்னும் துறை. பரகால நாயகியின் நிலை இதற்கேற்பவே அமைகிறது. காதல் நோய் காலையில் அரும்பும்; பகல் முழுவதும் மொட்டாக இருக்கும்; மாலையில் நன்றாக மலரும். அந்த நேரத்தில் மகிழ்ச்சியுடன் இருக்கக்கூடிய உயிரினங்களையும் மற்றுமுள்ள

பொருள்களையும் கண்டு தான் மட்டும் மகிழ்ச்சியுடன் இருக்க முடியவில்லை என்னும் எண்ணத்தில்

திண்திமி லேற்றின் மணியும் ஆயன்
தீங்குழ லோசையும் தென்றலோடு
கொண்டதோர் மாலையும் அந்தியீன்ற
கோல இளம்பிறை யோடுகூடி
பண்டைய அல்ல இவை நமக்குப்
பாவியே னாவியை வாட்டஞ் செய்யும்

என்று கூறுமுகத்தான் மாலை நேரம் தன்னுயிரை வாட்டுவதாகக் கூறுகிறாள் அவள்.

## இன்பத்தை வெறுத்தல்:

இன்பத்திற்கேதுவாகிய பொருள்களைக் கண்டவழி, அவை காமத்திற்கு ஏதுவாகலின் அவற்றின் மேல் நாயகிக்கு வெறுப்புத் தோன்றுகிறது. திங்கள் இயற்கையில் குளிர்ச்சி மிக்கது. அது புணர்ந்தோர்க்கு இன்பமும் பிரிந்தோர்க்குத் துன்பமும் தருவது. தலைவனைப் பிரிந்திருந்த நாயகிக்கு அத்திங்கள் துன்பத்தைத் தருகிறது. உடலுக்கு இன்பத்தையும் உள்ளத்துக்கு மகிழ்ச்சியையும் கொடுக்கக் கூடிய குளிர்ச்சி பொருந்திய தென்றல் காற்று பிரிவுத் துயரிலிருந்த அவளுக்கு நெருப்பாகச் சுடுகிறது. நாயகன் அருகில் இருந்தபோது அன்றில் பறவையின் குரலினிமையில் மனத்தைப் பறிகொடுத்த அவளுக்கு அக்குரல் பழைய நிகழ்ச்சிகளை மனத்தில் தோற்றுவித்து வருத்துகிறது. பகற்பொழுதில் வீட்டிலிருந்து வெளியில் மேய்ச்சலுக்காகச் செல்லும் ஆநிரைக் கூட்டங்கள் மாலையானதும் வீடு திரும்பும். அப்போது அவற்றின் மணியோசை மாலை நேரம் வந்து விட்டது என்பதைக் காட்டும். மகிழ்ச்சியைத் தரக்கூடிய மாலை நேரத்தில் கேட்கும் மணியோசை அவளுக்குத் துன்பத்தைத் தர அவ்வோசையை வெறுக்கிறாள். நாயகனுடைய புல்லாங்குழலின் இனிமையில் மனதைப் பறிகொடுத்திருந்த அவளுக்கு ஆயர்கள் ஊதி வரும் குழலின் ஓசை துன்பத்தைத் தர, அவ்வோசை தன் இளமையை வாட்டுவதாகப் புலம்புகிறாள்.

அந்தி காவலன் அமுதுறு பசுங்கதிர் அவைசுட
தென்றல் வந்து தீவீசும் என்செய்கேன்
அன்றி லின் குரல் அடரு மென்னையே
கொல்லைவல் லேற்றின் மணியும் கோயின்மை செய்யுமே
ஏங்கு வேய்ங்குழல் என்னோ டாடும் இளமையே

என்பன முறையே இக்கருத்தைத் தாங்கிய தலைவியின் கூற்றுக்குச் சான்றாவன.

இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், பசலை பாய்தல், கண்துயில் மறுத்தல் ஆகிய அகத்துறைகளை மூன்றாம் பத்து ஆறாம் திருமொழியிலும் எட்டாம் பத்து ஐந்தாம் திருமொழியிலும் ஒன்பதாம் பத்து நான்கு, ஐந்தாம் திரு மொழிகளிலும் பதினோராம் பத்து ஒன்று, இரண்டாம் திருமொழிகளிலும் காண முடிகிறது.

தலைவனைப் பிரிந்த தலைவி வருந்தியவாறு இன்பத்தை வெறுத்தும் துன்பத்துப் புலம்பியும் இருப்பது இரங்கல் நிமித்தத்தின் பாற்படும். அதற்கேற்ற முறையில்

திரையெடுத்து வருபுனல்சூழ் திருக்கண்ணபுரம்

பவ்வத் திரையுலவு புல்லாணி

என முதற்பொருளாகிய நெய்தல் நிலமும்

மடலெடுத்த நெடுந்தாழை மருங்கெல்லாம் வளர்பவளம்

வண்டமரும் மலர்ப்புன்னை வரிநீழல் அணிமுத்தம்

காவார் மடல்பெண்ணை அன்றில் அரிகுரலும்

என தாழை, பவளம், புன்னை ஆகிய கருப்பொருள்களும் முதற் பொருளாகிய இளவேனிற்காலத் தென்றல் என்னும் பெரும் பொழுதும் மாலை என்னும் சிறு பொழுதும் பரவலாகப் பொருந்தியுள்ளது.

கொங்குமலி கருங்குவளை கண்ணாகத் தெண்கயங்கள்

செங்கமல முகமலர்த்தும் திருக்கண்ண புரத்து

என்று மருத நிலக் கருப்பொருள்களாகிய குவளை, கமலம் ஆகிய மலர்களும் அமைந்து திணைமயக்கம் உடையதாயிருப்பதும் அறியத் தக்கது.

### நெஞ்சொடுகிளத்தல்:

தலைவனைக் காணாத துன்பத்தினால் வருந்திய தலைவி நெஞ்சொடு கிளந்தும், தோழியிடம் புலம்பியும் தன் நிலையைப் புலப்படுத்துகிறாள். இரங்கலாகிய உரிப்பொருளுக்குரிய நிலமாவது நெய்தலாகும். தலைவனையே எண்ணி இரங்கும் தலைவியின் மனநிலை ஒன்பதாம் பத்தின் மூன்றாம் திருமொழியில் புலப்படுத்தப் படுகிறது. கடற்கரைத் தலமான திருப்புல்லாணி இதில் இடம் பெறுவதால் நெய்தலுக்குரிய உரிப்பொருளாகிய இரங்கல் இங்கு பொருத்தி உரைக்கப்படுகிறது.

வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்

வரையா நாளிடை வந்தோன் முட்டினும்

உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
தானே கூறுங் காலமும் உளவே [59]

என்னும் தொல்காப்பிய இலக்கணம் இங்கு பொருந்தியிருக்கக் காணலாம். தன் நெஞ்சுக்குக் கூறுமுகத்தான் தோழியிடம் தன் நிலையைக் கூறுவது தொல்காப்பிய இலக்கணத்தையொட்டி பெரிய திருமொழியில் இடம் பெறுகிறது. ஆனால் அவ்விலக்கணத்தையொட்டி, தலைவன் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் சென்ற காலத்து வருந்தியதற்கான செய்தி பெரிய திருமொழிப் பாடல்களில் எங்கும் இடம் பெறவில்லை.

தன்னை நைவிக் கிலெண்வல் வினையேன் தொழுதும்எழு
பொன்னை நைவிக்குமப் பூஞ்செருந்தி மணிநீ ழல்வாய்,
என்னைநை வித்தெழில் கொண்ட கன்றபெரு மானிடம்

முருகுவண் டுண்மலர்க் கைதையின் நீழலில் முன்னொர் நாள்
பெருகுகா தன்மையென் உள்ளமெய்தப் பிரிந்தானிடம்

என்று பலவாறாகக் கூறி இரங்கும் தன்மை காட்டப்படுகிறது. இது கலித் தொகைப் பாடலில் கூறப்படும் புன்னையின் நிழலில் தலைவன் தலைவி சந்தித்தமையும் தலைவன் பிரிந்தமையும் தலைவன் பிரிய தலைவியின் அழகு நலன் அழிந்தமையும் ஆகிய செய்தியை ஒத்திருப்பது அறியலாம். [60] தலைவனைப் பிரிந்து இரங்கும் தலைவியின் துயருறு நிலையை அதற்குரிய நெய்தல் நிலத்தைச் சார்ந்த கருப்பொருள்களுடன் தொடர்பு படுத்திப் பேசும் வடிவம் பண்டைய இலக்கியங்களைப் போலவே பெரிய திருமொழியிலும் உண்டு என்பதை இது காட்டும்.

## தலைவனின் சூளுரையைத் தோழியிடம் கூறல்:

தலைவியுடன் தனியிடத்துக்கூடி மகிழ்ந்த தலைவன் பின் அவளை விட்டுப் பிரிந்து செல்லுமிடத்து விரைந்து திரும்பி வந்து மணம் செய்து கொள்வதாகச் சூள் உரைத்துச் செல்வதுண்டு. சிலர் அச்சூளுரையைப் பேணி மணம் செய்து கொள்வர். சிலர் அதனைப் பேணாதவராகப் பொய்த்து விடுதலு முண்டு. அகப்பாடல்களில் காணப்படும சூளுரைத்துச் செல்லும் செய்தி பெரிய திருமொழியிலும் காணப்படுகிறது.

பேதை நின்னைப் பிரியே னினியென் றகன்றான்

என்று சூளுரைத்த தலைவனைச் சுட்டுகிறாள் தலைவி. இது போல் தலைவன் செய்த சூளுரையைத் தலைவி தன் தோழியிடம் சொல்லும் அகப்பாடல்களில்

தோழி அவளுக்கும் தலைவனுக்குமுள்ள உறவை வினவுவதும் அயலார் சாட்சி உண்டா என்று வினவுவதுமாக உள்ள அகத்துறை பெரிய திருமொழியில் இடம் பெறவில்லை. ஆயின் தலைவி அதற்குரிய பதிலாகக் கூறும் முறையில்,

கொங்குண் வண்டே கரியாக வந்தான்

என்பதாக அமைந்த பாடல் மட்டும் இடம் பெறுகின்றது. குறுந்தொகைத் தலைவியொருத்தி, தலைவனுக்கும் தனக்குமுள்ள உறவுக்குச் சாட்சியாக 'ஒரேயொரு குருகு உண்டு' என்று கூறுமாப்போல [61] பரகாலநாயகியும் தலைவனுக்கும் தனக்குமுள்ள உறவுக்குச் சாட்சியாக 'ஒரேயொரு வண்டு உண்டு' என்று கூறுவது காண்கிறோம்.

## இயற்பழித்தலும் இயற்பட மொழிதலும்:

தொல்காப்பியர் பொருளதிகாரத்துக் களவியலில் தலைவி கூற்று நிகழும் இடங்களை வரையறுத்துச் சொல்லும்போது,

'வழுவின்றி நிலைஇய வியற்படு பொருளினும்'[62] என்று கூறியுள்ளார். அதற்கு உரைகண்ட நச்சினார்க்கினியர் ''வழுவின்றி நிலைஇய என்றதனால் தோழி இயற்பழித்துழியே இயற்பட மொழிவதென்க''[63] என்று குறிப்பிட்டுள்ளார். தோழி தலைவனை இயற்பழித்த வழி அவனைக் குற்றமில்லாதவனாக நிறுவி இயற்பட மொழியும் பண்பு தலைவிக்கு உண்டு என்பது பெறப்படுகிறது. இவ்விலக்கண வடிவம் பெரிய திருமொழியின் பதினோராம் பத்து ஐந்தாம் திருமொழியில் பொருந்தியிருக்கக் காணலாம். 'சாழலே' என்று முடியும் பாடல்களுக்குரிய இலக்கணத்தை

''இயற்பழித் துரைத்துழி இயற்பட மொழிதலும்''[64]

என்று நம்பியகப் பொருள் கூறுகிறது. 'சாழல்' என்னும் இப்பாடல் வடிவத்தையே பிற்கால முத்துவீரியம் என்னும் ஐந்திலக்கண நூலில்

உழையரியற் பழித்தலும் ஒண்ணுத லாளவற்
கியற்பட மொழிதலு மியல்புணைந் துரைத்தலும்[65]

என்றுகுறிப்பிட்டுள்ளமை அறியலாம்.

பெரிய திருமொழியில் இவ்விலக்கணங்கள் பொருந்தப்பெற்ற திருமொழிப் பாடல்கள் 'சாழல்' என்ற ஒரு விளையாட்டை விளையாடிக்கொண்டே நாயகியும் தோழியும் தலைவனின் பெருமைகளைச் சுட்டுவதாக அமைந்துள்ளன.

கோதைவேல் ஐவர்க்காய் மண்ணகலம் கூறிடுவான்
தூ தனாய் மன்னவனால் சொல்லுண்டான் காணேடி
தூதனாய் மன்னவனால் சொல்லுண்டா னாகிலும்
ஓத நீர் வையகம்முன் உண்டுமிழ்ந்தான் சாழலே

என்னும் பாடலில் தோழியின் கூற்றாக வரும் முதலிரு அடிகள் தலைவனைப் பழிப்பது போன்றுள்ளன. ஆயின் தலைவியின் கூற்றாகப் பின்னர் வரும் இரண்டு அடிகளும் புகழ்தற்குரிய தலைவன் அவன் என்பதையும் அதற்குரிய காரணத்தையும் விளக்குகின்றன. தோற்றுவாய் நிலையில் பழிப்பாகுமாறு காணப்படினும் அவை இறுதியில் மேம்பாடுடைய முடிவு கொண்டனவாய் அமைந்துள்ளன. தலைவனின் மேம்பாட்டுக்குரிய பொருத்தமான காரணம் பின்னிரு அடிகளில் ஆசிரியரால் விளக்கப்படுகின்றது. வினாவும் விடையுமாகக் கூறும் செய்தியில் ஐயம் அகலுகிறது. கொள்வோன் கொள்வகை அறிந்து அவன் உளங்கொளச் சொல்லும் பாங்கையும் இதன் வழி நன்குகாண முடிகிறது. தலைவன் பிரிவால் துன்புறினும் அவனுடைய பாராமுகத்தால் வருந்தினும் பல்வேறு இன்னல்களுக்கு உள்ளாயினும் அவனைப் பிறர்பழித்துப் பேசுவது பொறுக்காத தலைவி தன் துயரை உள்ளடக்கிக் கொண்டவளாய் இயற்பட மொழிவதை அறிய முடிகிறது.

## தாயின் முறையீடு :

தொல்காப்பிய இலக்கண முறைப்படி நற்றாய், செவிலி என இருவர் பேசப் படுகின்றனர். ஆனால் பெரிய திருமொழியில் தாய் ஒருத்தியே இடம் பெறுகிறாள். அகவிலக்கியங்களிலும் இலக்கணங்களிலும் இடம் பெறும் நற்றாய் என்பவள் தலைவியைப் பெற்றெடுத்த தாய். இவள் தன் மகளுடைய களவொழுக்கத்தைச் செவியுற்றதும் அவ்வொழுக்கத்தின் போக்கையும் தன் மகள் தேர்ந்தெடுத்த தலைவனுடைய பொருத்தத்தையும் செவிலியுடன் கண்காணித்து வருவாள். இதற்கு

கிழவோன் அறியா அறிவினள் இவள்என
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே[66]

என்று விதி கூறுகிறார் தொல்காப்பியர். தன் மகளுடைய கரந்தவொழுக்கத்தைத் தோழி வாயிலாகச் செவியுற்றதும் அவ்வொழுக்கத்தின் போக்கையும் தன் மகள் தேர்ந்தெடுத்துள்ள தலைவனின் பெருமையையும் ஆற்றலையும் ஆராய்ந்து வருவாள் தாய். மகள் மெலிவுற்ற நிலையறிந்து அகவிலக்கியத்தில் தாய் ஏற்பாடு

செய்யும் 'வெறியாட்டு' இங்கு இடம் பெறவில்லை. களவொழுக்கம் நிகழும் காலத்தில் தன் மகளுக்காகத் தலைவனிடம் தாய் உரையாடும் செய்தி பற்றிய குறிப்பு தொல்காப்பியத்திலோ பிற அகவிலக்கியங்களிலோ காணப்படாமல் பெரிய திருமொழியில் மட்டுமே அமைந்துள்ளது.

நாயகனுடன் கலந்து பிரிந்து பிரிவாற்றாதவளான நாயகியின் காதலையும் அக்காதலுக்குத் தக்கபடி அவன் வந்து அவளைக் காணாதிருப்பதையும் நோக்கின தாய் நற்குலத்தில் பிறந்து சிறந்த அறிவு படைத்தவள் என்றும் பெரிய பிராட்டியைப் போல் நாயகனை மார்புறத் தழுவி அனுபவிக்க வேண்டுமென்று ஆசைப்படவில்லை என்றும் அவன் திருவடிகளையே ஆசைப்பட்டு அவற்றுக்குப் பணி செய்வதையே தன் கடமையாக நினைத்திருக்கிறாள் என்றும் கூறி

குவளையங் கண்ணி கொல்லியம் பாவை
சொல்லுநின் தாள்நயந் தீருந்த
இவளை உன்மனத்தா லென்நினைந் திருந்தாய்
இடவெந்தை எந்தை பிரானே

என்று வினவுகிறாள். இந்தத் தாய் உலகிலுள்ள பேரழகிகளுக்குத் தமிழர் உவமையாய்க் குறிப்பிடும் கொல்லிப்பாவையாகவே தன் பெண்ணைப் பாவித்துப் பேசுகிறாள். ஓரி என்ற தமிழரசனுக்கு உரியது கொல்லிமலை. அம்மலையில் தவம் செய்யும் முனிவர்களுக்குத் தீங்கு செய்ய அரக்கர்கள் வருவார்கள். தருமத்தின் தலைவனான அவ்வரசன் தெய்வச் சிற்பி படைத்த ஒப்பற்ற அழகையுடைய ஒரு பெண் பதுமையை அங்கே அமைத்தான். இயந்திரத்தால் இயங்கும் அது அங்கு வரும் அரக்கரைக் கண்டு சிரிக்கும். அதன் அழகையும் சிரிப்பையும் கண்டு அரக்கர் மயங்கி விழுவர். பின் அவர்கள் உயிர்பெற்று எழுவது இல்லை. இங்ஙனம் கண்டாரைத் தன் அழகால் மயக்கிக் காமவேட்கையை உண்டாக்கிக் கொல்லும் தன்மையைக் கருதியே அதனை மக்கள் கொல்லிப்பாவை என்று அழைத்தனர். அத்தகைய பதுமையாகவேதாய் மகளைப் பாவிக்கிறாள். சிறந்த அழகு படைத்த தன் பெண்ணை நாயகன் புறக்கணிக்கிறானே என்ற ஆற்றாமை மிக்க தாய் அவள் படும் பாட்டை விளக்கினாலாவது அவனது உள்ளத்தில் இரக்கம் பிறக்குமோ என்று கருதுகிறாள். அக்கருத்தின் அடிப்படையில் பரத்துவத்தின் உயர்ந்த எல்லையில் நிற்கும் அவன் அலட்சியமாக இருப்பது தவறு என்றும் அவளைத் துன்புறுத்துவது அவன் பெருமைக்குத் தகாது என்றும் கூறுவதோடு பழமொழிகளை எடுத்துரைத்துப் பேசுகிறமுகத்தான் நாயகியின் காதல் மிகுதியைக் காட்டுகிறாள். 'பிள்ளை கையிற் கிண்ணம் மெள்ளவே கொள்ளலாம்' என்னும் பழமொழி நாயகியின் தாயினால் 'பிள்ளை தன் கையிற் கிண்ணமே' என்று கூறப்படுகிறது. மிக்க

வலிமையுள்ளவர்கள் பொற்கிண்ணம் ஒன்றைக் கவர்ந்தால் அதை மீட்டுக் கைப்பற்றுவதற்கு முயற்சி செய்ய வேண்டும். அங்ஙனமின்றி சிறுபிள்ளை கவர்ந்த கிண்ணத்தைக் கைப்பற்ற முயற்சி செய்ய வேண்டுவதில்லை. நினைத்தபோது எளிதாக வாங்கிக் கொள்ளலாம். அதுபோல் பரகால நாயகியையும் சிறுபிள்ளையாக எண்ணி நினைத்தபோது வருவதும் போவதுமாக அவன் அலட்சியம் செய்கிறான் என்கிறாள்.

மன்றில் மலிந்து கூத்துவந் தாடி
மால்விடை யேழும டர்த்து, ஆயர்
அன்று நடுங்க ஆனிரை காத்த
ஆண்மைகொ லோவறி யேன்நான்,
நின்ற பிரானே! நீள்கடல் வண்ணா!
நீயிவள் தன்னை நின்கோயில்
முன்றி லெழுந்த முருங்கையில் தேனா
முன்கை வளைகவர்ந் தாயே

என்று கூறுவதில் 'முன்றி லெழுந்த முருங்கையில் தேன்' என்னும் பழமொழி அப்படியே ஆளப்படுகிறது. தம் வீட்டு முற்றத்திலுள்ள மரத்தில் தேன் இருந்தால் அதனை எப்படி எளிதில் கவர்ந்து கொள்ளலாமோ அப்படி தன்னுடைய நாயகியின் வளை களை எளிதாகக் கவர்ந்து கொண்டதாகக் கூறி வருந்துகிறாள். 'அங்கையில் வட்டு' 'தொண்டர்கைத் தண்டு' 'பெருவழி நாவல் கனி', 'எருக்கிலைக்காக எறி மழுவோச்சல்' 'கோழிவெண்முட்டைக்குக் குறுந்தடி ஏன்?' 'கவுள் கொண்ட நீர்' என்பன போன்ற பழமொழிகள் ஆழ்வார் காலத்தில் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும். எனவே நாயக நாயகியின் நிலையைப் பழமொழிகளோடு ஒப்பிட்டுக் காட்டி தாய் பேசுவது போல் பாடல்களை அமைத்துள்ளார். மகளின் பிரிவாற்றாத் துயர் கண்ட தாய்க்குப் பழமொழிகளே வாயில் வருகின்றன. உலகியல் வாழ்க்கையில் நல்லதோ, தீயதோ எதைப் பேசினாலும் பழமொழிகளை எடுத்தாள்வது மக்களிடையே காணப்படுகிறது. இதை மனத்தில் கொண்டே ஆழ்வாரும் தாய் பேச்சில் பழமொழிகளை அமைத்துள்ளார். 'பழமொழியால் பணிந் துரைத்த பாட்டு' என்று கூறப்படும் அளவுக்கு நாவன்மை மிக்கவளாக விளங்குகிறாள் தாய்.

### *தலைவி ஊடல்:*

தலைவிபால் வேறுபாடு உண்டாகும்பொழுது தலைவன் அவள் சினத்தைத் தணித்தற் பொருட்டு நெருங்கி வந்து பணிதல் உண்டு.

காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வரிபடுங் கிழமை அவட்கிய லான[67]

என்பது தொல்காப்பியர் கூறும் விதி. இவ்வகத்துறை, பத்தாம் பத்தின் எட்டாம் திருமொழியில் பொருந்தியிருக்கக் காணுகின்றோம். தன்னை அழகு படுத்திக் கொண்டு சென்றால் நாயகி தன்னுடன் கொண்ட ஊடல் நீங்கி மகிழ்வாள் என்னும் எண்ணத்துடன் ஒப்பனை செய்து கொண்டு நாயகியிடம் வருகின்றான் நாயகன். வந்தவன் வெளியிலேயே நின்று விட அவன் அவ்வாறு நிற்பதன் காரணத்தை வினவுகின்றாளேயன்றி அவனை அன்புடன் வரவேற்கவில்லை. அவனிடம் முகம் கொடுத்தும் பேசவில்லை. குண்டலம் தொங்க விட்டும் துழாய் மாலை சூடிக் கொண்டும் ஆடை அணிந்து கொண்டும் வருவதாக அவன் கூறியும்,

காதில் கடிப்பிட்டுக் கலிங்க முடுத்து,
தாதுநல் லதண்ணந் துழாய்கொ டணிந்து,
போது மறுத்துப் புறமேவந் துநின்றீர்,
ஏதுக்கிது என்னிது என்னிது என்னோ!

என்றவளாக ஏறிட்டுப் பார்க்காமல் ஊடல் கொண்டு நிற்கிறாள். நாயகன் அவனால் விரும்பப்பட்டாளொருத்திக்குக் காட்டல் வேண்டி மாலை சூடி வந்திருக்க வேண்டும் என்னும் ஐயத்தை அவளிடம் ஏற்படுத்தியிருக்கலாம். ஏறிட்டும் பார்க்காமலிருக்கவே அவன் தன்னுடைய அலங்காரங்களையெல்லாம் மாற்றிக் கொண்டு எளிமையான துவராடை அணிந்து வந்து கதவுக்குப் புறத்தே நிற்க,

துவரா டையுடுத் தொருசெண்டு சிலுப்பி
கவராக முடித்துக் கலிக்கச்சுக் கட்டி
சுவரார் கதவின் புறமேவந்து நின்றீர்
இவராரிது என்னிது என்னிது என்னோ!

என்று கேட்கிறாள். கதவின் பின்புறம் நிற்பவர் யாரென்று ஏளனமாக நாயகி வினவுவதாக இப்பாடல் அமைகிறது. அகப்பொருள் தரும் மருதப் பின்புல ஊடல் இங்கு அமையவில்லை. நாயகனின் சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுச் செயல்களே நாயகி ஊடல் கொள்ளக் காரணமாகின்றன. தலைவன் அணிந்து வந்த மலரைக் கண்டு அவனால் காதலிக்கப்படும் யாரோ ஒரு பெண்ணுக்குக் காட்டுவதற்குச் சூடியிருக்கிறானென்று தலைவி ஊடல் கொண்டதாக

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீரென்று[68]

என்னும் குறள் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

வருவதாகக் குறிப்பிட்டுச் சென்ற நேரத்தில் நாயகன் வராமலிருக்க மனம் வருந்திய நாயகி நேரம் குறிப்பிட்டுச் சென்றால் அந்நேரத்திற்கு வரவேண்டும் என்றும் அவ்வாறின்றி நள்ளிரவில் வந்து புகுந்ததையும் எவ்வளவு நேரமாயினும் ஏற்றுக் கொள்வாள் என்னும் ஏளனம் தோன்ற புன்சிரிப்புடன் நிற்பதையும் வேறு பெண்களுடன் மகிழ்ந்திருந்து விட்டுத் தன்னிடம் அன்புள்ளவன் போல் வந்து நிற்பது தேவையற்றது என்பதையும் எடுத்துரைத்து வாயில் மறுக்கிறாள்.

தக்கார் பலர்தேவி மார்சால வுடையீர்
எக்கே யிதுஎன் னிதுஎன் னிதுஎன்னோ

என்பது அவள் கூற்று.

கருமலர்க் கூந்தலொருத்தி தன்னைக்
கடைக்கணித்து, ஆங்கே யொ ருத்திதன்பால்
மருவி மனம்வைத்து மற்றொருத்திக்
குரைத்தொரு பேதைக்குப் பொய்குறித்து
புரிகுழல் மங்கையொருத்தி தன்னைப்
புணர்தி யவளுக்கும் மெய்யனல்லை
மருதிறுத் தாய்! உன் வளர்த்தியூடே
வளர்கின்ற தாலுன்றன் மாயைதானே [69]

என்னும் பெருமாள் திருமொழிப் பாடலும் பரகால நாயகியின் கூற்றையொட்டி அமைந்திருக்கக் காண்கிறோம்.

தலைவி தன் உள்ளத்திலுள்ள அன்பை மறைத்துக்கொண்டு வேறு பொருள் பயக்கும் சொற்களால் தன் ஊடலை தலைவனுக்குப் புலப்படுத்துவது உண்டு.

அருள்முந் துறுத்த அன்புமொழி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே [70]

என்னும் தொல்காப்பியர் கூறும் விதியால் இதை அறியலாம். தலைவி ஊடல் கொள்ளுமிடத்து தன் நிலையினின்றும் தலைவன் மாறுவான். இதை,

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய [71]

என்று குறிப்பிடுகின்றார். மேலும் அவர் கற்பியலில்,

அகன்ற கிழவனைப் புலம்புநனிகாட்டி
இயன்ற நெஞ்சந் தலைப்பெய்த் தருக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும் [72]

என்று தலைவி கூற்று நிகழுமிடத்திற்கு இலக்கணம் கூறியுள்ளார். இதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் பரத்தையர் தன் மாட்டு மனம் நெகிழ்ந்த மென்மையின் பொருட்டு அவர்க்கு அருள் செய்யப் பிரிந்து வந்தோனை, தனது தனிமை மிகவும் அறிவித்து அவன்மேற் சென்ற நெஞ்சினைச் செல்லாமல் அவனிடத்தினின்றும் மீட்டு அருகப் பண்ணி பிறருள் ஒருத்தியைக் காணாளாயினுங் கண்டாள் போலத் தன் முன்னர்ப் பெய்து கொண்டு வாயின் மறுத்ததனால் தோன்றிய நயனுடைமைக் கண்ணும் [73] என்று கூறியுள்ளார். நம்பியகப்பொருள் ஆசிரியரும்

வாயில் வேண்டல் வாயில் மறுத்தல் [74]

என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றமை அறிகிறோம்.

நாயக நாயகி பாவனையில் திருமங்கையாழ்வார் பாடல்கள் பாடியமைக்கு சங்க இலக்கிய அகத்துறைப் பாடல்களும் அவற்றை இலக்கண வகையில் விளக்கும் தொல்காப்பிய இலக்கணமும் அவருக்குப் பெரிதும் கைகொடுதது உதவியுள்ளன. பண்டைத் தமிழர் அகவாழ்க்கைக்குக் கொடுத்த முதன்மை அறிந்து இறைவனைத் தலைவனாகவும் அவனுடைய இயல்பை உலகோர் ஏத்தும் வகையில் பாடலாக்க வந்த தன்னைத் தலைவியாகவும் உருவாக்கி, அகவொழுக்கத்தைத் தெள்ளிதின் விளக்கி நிற்கும் முறையில் தலைவி கூற்று நிகழ்தல், நற்றாய் இரங்கல், தலைவி வருந்தல், தூதுவிடுதல், உடன்போக்கு நற்றாய்புலம்பல், இயற்பட மொழிதல், ஊடல், வாயில் மறுத்தல் முதலான அகப்பொருள் துறைகளை உள்ளடக்கி திருமங்கையாழ்வார் மரபு காத்து நிற்பதை இதன்வழி நன்குணரலாம்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், *பொருளியல். நூ. 29*
2. மே. நூ. *கற்பு. நூ. 51*
3. மே. நூ. *புறத். நூ. 28*
4. மே. நூ. பொருள், *நச்சி உரை. ப. 259*
5. மே. நூ *அகத். நூ. 54*

| | | |
|---|---|---|
| 6. | மே. நூ. | *களவு. நூ. 1* |
| 7. | குறுந்தொகை | *பா. 10* |
| 8. | வ. சுப. மாணிக்கம் | *தமிழ்க்காதல். ப. 115* |
| 9. | திருக்குறள் | *1103* |
| 10. | மே. நூ. | *1106* |
| 11. | மே. நூ. | *1110* |
| 12. | ந. சுப்புரெட்டியார், | *சோழநாட்டுத் திருப்பதிகள் ப.14* |
| 13. | ந. சுப்புரெட்டியார், | *திருவேங்கடமும் தமிழ் இலக்கியம் ப. 123* |
| 14. | ஆச்சார்ய ஹ்ருதயம் | *சூத் .118* |
| 15. | தொல்காப்பியம் | *அகத். நூ.1* |
| 16. | மே. நூ | *களவு. நூ. 20* |
| 17. | மே. நூ. மே. பா | *நூ. 21* |
| 18. | தொல் | *அகத். நூ. 37* |
| 19. | மே. நூ | *பொருள். நூ. 31* |
| 20. | மே. நூ | *அகத். நூ. 15* |
| 21. | நம்பியகப்பொருள் | *நூ. 181* |
| 22. | மே. நூ. | *நூ. 185* |
| 23. | நற்றிணை | *பா. 184* |
| 24. | பெருமாள் திருமொழி | *3.8 : 4* |
| 25. | திருக்கோவையார் | *பா. 230* |
| 26. | ஐங்குறுநூறு | *பா. 375* |
| 27. | பாரதியார் கவிதைகள் | *அருணாபதிப்பகம். ப. 187* |
| 28. | மே. நூ. | *மே. ப.* |
| 29. | நம்பியகப்பொருள் | *நூ. 223* |
| 30. | இலக்கண விளக்கப் பாட்டியல் | *நூ. 874* |

31. மு. வரதராசன், — *தமிழ் இலக்கிய வரலாறு, ப. 147*

32. ச. வே. சுப்பிரமணியன் *(ப.ஆ)* ந. கடிகாசலம் — *தமிழ் இலக்கியக் கொள்கை-7, ப. 320*

33. தொல்காப்பியம் — *அகத். நூ. 36*

34. மே. நூ. பொருள், — *நச்சி உரை, ப. 70*

35. திருவிருத்தம் — *பா. 48*

36. அண்ணங்கராசாரியார் (உ. ஆ) — *பெரிய திருமொழி, ப. 87*

37. நற்றிணை — *பா. 70*

38. புறநானூறு — *பா. 67*

39. பெரியாழ்வார் திருமொழி — *5.1: 4*

40. திருவாசகம், — திருக்கோத்தும்பி. *பா. 3.*

41. திருவாய் மொழி — *1. 4 : 8*

42. சுந்தரர் தேவாரம் — *ப. 432*

43. திருஞானசம்பந்தர் தேவாரம் — *திருத்தோணிபுரப்பதிகம், பா. 10*

44. திருவாசகம் — *குயிற்பத்து, பா.4*

45. தாயுமானவர் — *பைங்கிளிக்கண்ணி . பா.2*

46. முத்துவீரியம் — *நூ. 348*

47. தொல்காப்பியம் — *களவு. நூ. 24*

48. திருநாவுக்கரசர் தேவாரம் — *பா. 4210*

49. தொல்காப்பியம் — *கற்பு. நூ.6*

50. மே. நூ — *பொருள். நூ. 8*

51. மே. நூ. — *நூ. 9*

52. குறுந்தொகை — *பா. 31*

53. தொல்காப்பியம் — *மெய்ப்பாடு. நூ. 22*

54. நம்பியகப்பொருள் — *நூ. 170*

| | | |
|---|---|---|
| 55. | அகநானூறு | *பா. 71* |
| 56. | திருக்குறள் | *1223* |
| 57. | மே. நூ. | *1228* |
| 58. | மே. நூ. | *1224* |
| 59. | தொல்காப்பியம் | *களவு. நூ. 21* |
| 60. | கலித்தொகை | *பா. 135* |
| 61. | குறுந்தொகை | *பா. 25* |
| 62. | தொல்காப்பியம் | *களவு. நூ. 20* |
| 63. | மே. நூ. | *ப. 81* |
| 64. | நம்பியகப்பொருள் | *நூ. 176* |
| 65. | முத்துவீரியம் | *நூ. 861* |
| 66. | தொல்காப்பியம் | *களவு. நூ. 26.* |
| 67. | மே. நூ. | *கற்பு. நூ.19* |
| 68. | திருக்குறள் | *1313* |
| 69. | பெருமாள் திருமொழி | *பா. 6:3* |
| 70. | தொல்காப்பியம் | *கற்பு. நூ.20* |
| 71. | மே. நூ. | *பொருள். நூ. 31* |
| 72. | மே. நூ. | *கற்பு. நூ. 6* |
| 73. | மே. நூ. பொருள், | *நச்சி உரை, பக். 195-96* |
| 74. | நம்பியகப்பொருள் | *நூ. 204.* |

***

# 5. உலகியலும் மெய்ப்பொருளும்

உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் உள்ளபடியே விளக்குவது உலகியல் சிந்தனையின்பாற்படும். அஃது அன்றாடம் நடை பெறுகின்ற வாழ்க்கை அனுபவங்களை விளக்கிக் கூறி இயற்கையின் தன்மையை வலியுறுத்துவது, வாழ்க்கை எவ்வாறெல்லாம் இருக்க வேண்டும்; எவ்வாறெல்லாம் இருக்கக்கூடாது என்பதையும் விளக்குவது. அத்தகைய நீதி, அறநெறி முதலியவற்றை உணர்த்தும் பாடல்களில் உணர்ச்சி குறைந்து கருத்துக்குச் சிறப்பிடம் உள்ளவாற்றைப் பக்தி இலக்கியங்களில் காணலாம்.

பெரிய திருமொழி உலகியலையும் மனிதத் தன்மையையும் உணர்த்துவதாக அமைந்து வாழ்க்கை நிலையாமை, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, பிறவித்துன்பம், பெண் இன்பத்தினால் மயங்கிய நிலையினால் ஏற்படும் கேடு, புலனடக்கம் ஆகிய உலகியல் சிந்தனைகளைப் புலப்படுத்துவதாய் அமைகின்றது.

## *வாழ்க்கை நிலையாமை:*

வாழ்க்கை நிலையாமையுடையது. மாற்றங்களுக்கு உட்படுவது. இதில் நிகழும் தோற்றங்கள் உண்மையல்ல. வெறும் மாயத் தோற்றங்களே. அவை பொறி புலன்களால் உணரப்படுதலின் அத்தோற்றங்கள் மெய்ம்மைகளாக இருந்து பின்பு நிலையில்லாதனவாக மறைகின்றன.

மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே [1]

பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்குந்
தோன்றின மறையும் மறைந்தன தோன்றும் [2]

எனப் பட்டினத்தார் கூறுவர். வாழ்க்கை நிலைத்தலில்லாததென்பதால் அவ் வாழ்க்கையில் செய்ய வேண்டிய செயல்களைக் காலம் கடத்தாது செய்து முடிக்க வேண்டும். அதற்கு எல்லாம் வல்ல பரம்பொருளை வாழ்த்தி அவன் அருளைப் பெற வேண்டும். இதற்குரிய வழியை பெரிய திருமொழி கூறுகின்றது. இவ்வுலகத்திற்கு உயிராற்றல் ஊட்டிக் காப்பாற்றும் இறையே என்றும் மாறாது நின்று நிலவக் கூடியது. எனவே அதைத் தேடிக் கண்டறிந்து அவ்விறையை வாழ்த்தி வழிபட வேண்டும் என்னும் கருத்து

ஓடினே னோடி யுய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதந் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்.

என்னும் பாடல் அடிகளால் அறியப்படுகின்றது.

## பாசநோய் :

வாழ்க்கையின் நிலையாமையை மறந்து பல்வேறு வகைப்பட்ட இன்பத்திலும் சுகத்திலும் ஈடுபட்டுக் காலத்தை வீணாக்கும் பேதை மக்களுக்கு

தாயே தந்தையென்றும்
தாரமேகிளை மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன்

என்னும் தற்சார்புப் பாடல் வழியாக அறிவுரை கூறுகிறார் ஆசிரியர். தாய், தந்தை, தாரம், மக்கள், உறவினர் என்றிருக்கக்கூடிய பாசம் இறையனுபவத்தில் ஈடுபடுவதைத் தடைசெய்கிறது; வாழ்க்கைப் பற்றினைத் தூண்டுகிறது. வாழ்க்கைப் பற்றை நீக்கினால்தான் இறைவனருளைப் பெறமுடியும். எனவே இறையருளைப் பெறுவதற்குத் தடையாயிருக்கும் பாசமே 'நோய்' என்று இங்குக் குறிப்பிடப்படுகிறது. ஆழ்வாரால் 'நோய்' என்று கூறப்படும் வாழ்க்கையின் நிலையாமைத் தன்மை ஏழு பாடல்களில்[3] சுட்டிக் காட்டப்படுகிறது. புலனிச்சை தோன்றிட அதனைத் தாம் அனுபவித்து மேலும் மேலும் அவ்விச்சைப் பொருளைப் பெறுவதற்கு அலைந்து திரிந்தாலும் அதனைக் குறிப்பிடுங்கால் 'நோயே பட்டொழிந்தேன்' என்கிறார் ஆழ்வார். இங்கு புலனைக் கருவியாகக் கொண்டு துய்க்கும் மனமும் அது தவறென்று உணர்த்தும் அறிவும் ஒன்றுடன் ஒன்று பொருவதும் விளக்கப்படுகின்றது. இறைவன் பாதங்களில் புரியும் கைங் கரியங்களுக்கு தாய், தந்தை, தாரம், உறவு ஆகியவையெல்லாம் தடையாக இருப்பதால் அதை 'நோய்' என்று குறிப்பிடுகின்றார் அவர்.

உறவு, சொந்தம் என்பதெல்லாம் அர்த்தமற்றது. இறைவன் ஒருவனே அர்த்தமுள்ளவன். எக்காலத்திலும் நம்மைக் கைவிடாமல் கண்ணும் கருத்துமாய் நோக்கிக் கொண்டிருக்கும் அவனே உயிர்களைக் காக்கும் வல்லமை பெற்றவன். பிறவி காரணமாக உறவினராயும் ஆபத்து வந்த காலத்தில் அஞ்சி ஒதுங்கி நிற்பவராயும் இருக்கும் பெற்றோரும் உண்மையில் காக்கும் வல்லமை

வாய்ந்தவர்கள் ஆகார் என்பதை விளக்குவதற்காகவே தாய், தந்தை, தாரம், உறவு, சுற்றம் ஆகியோரைக் குறிக்க 'நோய்' என்னும் சொல் கையாளப்படுகிறது.

## பஞ்சமா பாதங்கள்:

பொய், களவு, காமம், சூது, கொலை ஆகியவை 'பஞ்சமா பாதகங்கள்' எனப்படுகின்றன. வாழ்க்கை, நீரில் போடும் கோலத்தைப் போன்று மறைந்துவிடக் கூடியது என்பதை மறந்து அவ்வாழ்க்கை வளத்தை மேன்மேலும் பெருக்கிக் கொள்ளும் எண்ணத்தில் ஐம்பெருங்குற்றங்கள் நிகழுகின்றன என்பதை எட்டுப் பாடல்கள் [4] காட்டுகின்றன. சூதாட்டத்தில் ஈடுபடுவதும் வஞ்சகத் தன்மையால் களவுத் தொழில் செய்வதும் மங்கையரிடத்துக் காமுற்றுத் திரிவதுமாகிய தவறுகளைச் செய்பவர் வாழ்க்கை விரைவில் முடிந்து விடும் என்பது சுட்டிக்காட்டப்பட்டு வாழ்க்கை நிலையாமை அறிவுறுத்தப்படுகிறது.

## வாழ்நாளை வீணாக்குதல் :

நீரிற்குமிழியென அமைகின்ற வாழ்கையின் நிலையாமையை உணராமல் களவுத் தொழிலையும் கொலைத் தொழிலையும் சுயநலம் கருதிச் செய்து வாழ்நாளை வீணாக்குவது தவறு என்பதும் அவற்றைத் தாமே செய்தமைக்காகப் பின்னர் வருந்துவதும்,

கள்வனே னானேன் படிறுசெய் திருப்பேன்
கண்டவா திரிதந்தே னேலும்

கொன்றேன் பல்லுயிரைக்
குறிக்கோளொன் றிலாமையினால்

என்னும் பாடல் பகுதிகளால் உணர்த்தப்படுகிறது. கலைகளைக் கற்றுக் கொள்ளாமலிருத்தல், ஐம்புலன் வழிச் செல்லுதல், போகத்தைப் பெருக்கிப் பொழுதை வீணாக்குதல், பந்தமார் வாழ்க்கையையே பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்ந்து வாழ்க்கையை வீணாக்குதல் ஆகியவை பற்றிய செய்திகள்,

கற்றிலேன் கலைக ளைம்புலன் கருதும்
கருத்துளே திருத்தினேன் மனத்தை
பெற்றிலே னதனால் பேதையேன் நன்மை

என்பது போன்ற பாடல்களில் இடம்பெறுகின்றன. தவறுகளையே செய்து கொண்டிருக்கும் நிலை,

தெரியேன் பாலகனாய்ப்
பலதீமைகள் செய்துமிட்டேன்

என்பது போன்ற பாடல்களில் சுட்டிக் காட்டப்படுகின்றது. வாழ்க்கை நிலைத்தலில்லாதது என்பதை உணர்ந்து நிலைத்து நிற்கக் கூடிய இறைவனை அடைவதற்கு முயலாமல் தவறான செயல்களைச் செய்துகொண்டு வாழ்நாளை வீணாக்குதல் தவறு என்னும் கொள்கை நிலை நாட்டப்படுகிறது.

ஒருவர் வாழ்நாளில் செய்கின்ற அறச்செயலே இறைவனருளை அவருக்குக் கூட்டிவைக்கும் என்பது அனைவரும் அறிந்த உண்மை. பயனுள்ள அந்நற்செயலைக் காலம் தாழ்த்தாது செய்ய வேண்டும் என்னும் கருத்தை விளக்கு முகமாக

அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை [5]

என்று கூறுகிறது குறள். பெரிய திருமொழியும் வாழ்நாளை வீணாக்காமல் செய்யக்கூடிய அறங்களையெல்லாம் செய்யுமாறும் இல்லையென்று வந்து இரப்பவரிடம் இனிய சொற்களைப் பேசுமாறும் வற்புறுத்துகின்றது. முதல் பத்து ஆறாம் திரு மொழியில் ஐந்தாவதாக அமைந்துள்ள,

இடும்பையா லடர்ப்புண்டு, இடுமினோ துற்றென்
றிரந்தவர்க் கில்லையே யென்று,
நெடுஞ்சொலால் மறுத்த நீசனே னந்தோ
நினைக்கிலேன் வினைப்பயன் தன்னை.

என்னும் பாடலிலும் ஒன்பதாம் திருமொழியில் மூன்றாவதாக அமைந்துள்ள,

என்றேனு மிரந்தார்க்
கினிதாகவு ரைத்தறியேன்

என்னும் பாடலிலும் செய்ய வேண்டிய அறச் செயல்களைச் செய்யாது வாழ்நாளை வீணாக்கிய தம்முடைய இழிநிலையை ஆழ்வார் சுட்டிக் காட்டுகிறார்.

### *யாக்கை நிலையாமை:*

நிலையற்றதான வாழ்க்கையில் நிலைத்த பரம்பொருளாகிய இறைவனை நாடும் நாட்டமே வேண்டும் என்பதை உணர்த்தும் வகையில் பாடல்கள் விளங்குவ -தோடன்றி வாழ்வின் புன்மையை உணர்த்தும் பாங்கில் புண்ணாராக்கை, ஊனேராக்கை, பிணிவளர் ஆக்கை, குரம்பை என்னும் சொற்களால் யாக்கை குறிப்பிடப்பட்டு அது நிலையற்றது என்பது புலப்படுத்தப்படுகிறது.

யாக்கை நிலையாமை வற்புறுத்தப்படுமிடத்து ஊன் சுவராகவும், எலும்பு தூணாகவும் அமைந்துள்ள நிலைத்தலில்லா யாக்கை பற்றிப் பேசப்படுகிறது.

ஊனிடைச் சுவர்வைத் தென்புதூண் நாட்டி
உரோமம்மேய்ந்து ஒன்பது வாசல்
தானுடைக் குரம்பை பிரியும்போ துன்றன்
சரணமே சரணமென் றிருந்தேன்

என்று யாக்கை வருணிக்கப்படுமிடத்து அழியும் உடம்பின் தன்மையும் அழிதலில்லா இறைவனைச் சரணடைதலே மேலானது என்பதும் பெறப்படுகிறது. ஆழ்வார் 'குரம்பை' என்று கூறும் யாக்கையை மாணிக்கவாசகர் 'ஊனார் புழுக்கூடு'[6] என்றும் தாயுமானவர் 'நாற்றச் சடலம்'[7] என்றும் கூறுகின்றனர்.

உடல் உழலுதலுக்கு அல்லது துன்புறுதலுக்கு அமைந்ததேயாகும் என்பதும் அழிவுக்கு உரியது என்பதும்,

புண்ணா ராக்கை தன்னுள்
புலம்பித் தளர்ந் தெய்த்தொழிந்தேன்

ஊனே ராக்கைதன்னை உழந்தோம்பி
வைத்தமையால்....

என்னும் கூற்றுக்களால் விளக்கப்பட்டு மனித உடல் இன்பத்திலும் துன்பத்திலும் இளமையிலும் முதுமையிலும் ஆடியசைந்து ஈடுகொடுத்துப் பின்நிலை தடுமாறி அழிந்துவிடும், இளமையழகுடன் உலவிவரும் அது சிறிது சிறிதாக முதுமையடைந்துவிடும் என்பதும் குறிப்பிடப்படுகிறது. நிலையாமையை அறிவுறுத்துங்கால் இளமை நிலையாது; செல்வம் நிலையாது எனக் கூறுவதைக் காட்டிலும் இவற்றோடு இன்ப துன்பங்களைத் துய்த்து வந்த இவ்வுடலும் நிலையாது என்று கூறும்பொழுது நிலையாமையின் ஆழத்தை மேலும் உணர முடிகிறது.

## இளமை நிலையாமை :

இளமைப் பருவம் விரைவில் முடிவடையும் என்பதை மறந்து, உடல் வலிமையைக் கொண்டு உலக ஆசையில் ஈடுபட்டு மக்கள் கெட்டுப் போகிறார்கள். இதைக் கண்டு மனம் நொந்த நிலையில் இளமைப் பருவம் நிலையற்றது என்பதையும் உடலில் வலிமை இருக்கும்போதே அதைக்கொண்டு இறையருளை அடையும் முயற்சியில் ஈடுபடவேண்டும் என்பதையும் பெரிய

திருமொழி உணர்த்துகின்றது. உடம்பெடுத்த மனிதப் பிறவிக்கு மிகவும் துன்பம் தருவது முதுமைப் பருவம். முதுமையில் கண்பார்வை குன்றுவதும் நிற்கவோ நடக்கவோ முடியாத நிலையும் உண்ட உணவு செரிக்காத தன்மையும் ஏற்படுவதுண்டு. இருமல் முதலிய நோய்கள் வந்து இடர்ப்படுத்தும், வீட்டில் உள்ளவர்கள் அவமதிக்கவும் செய்வார்கள். இத்தகைய உலகியல் கருத்து,

முதுகு பற்றிக் கைத்த
லத்தால் முன்னொரு காலூன்றி
விதிர்வி திர்த்துக் கண்க
ழன்று மேற்கிளை கொண்டிருமி
இதுவென் னப்பர் மூத்த
வாறென் றிளையவ ரேசாமுன்

என்னும் பாடலில் பொருந்தியிருக்கக் காணலாம்.

முதுகு கூனிட்ட நிலையில் நடப்பவர்கள் முதுகின்மேல் கை வைத்தவாறே நடப்பதும், கையில் தடியூன்றி அதன் பலத்தில் காலூன்றி நடப்பதும், கண்பார்வை மங்கிய நிலையில் கண்ணுக்கு மேலாகக் கையை வைத்துக் கண்ணைச் சுருக்கிக் காணும் காட்சியுமாகிய இளமைப் பருவத்தின் மாற்றத்தை ஆழ்வார் பொருத்தமாகக் கூறியிருப்பதைப் போன்றே பிற்காலத்து அருணகிரியாரும்

தொந்தி சரிய மயிரே வெளிறநிரை
தந்த மசைய முதுகே வளையஇதழ்
தொங்க வொருகை தடிமேல்வர மகளிர் நகையாடி
தொண்டுகிழ னிவனா ரெனஇருமல்
கிண்கிணெனமு னுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிடுபடு செவியாகி [8]

என்று கூறியுள்ளமை காண்கிறோம்.

இளமைப் பருவத்தில் மறைந்து கிடக்கும் உடல் நரம்புகள் முதுமையில் உடல் மெலிந்து தசை சுருங்குவதால் சிலிர்த்துக் கொண்டு விகாரமாய்த் தெரியும் என்பதும் முதுகில் கூன் விழும் என்பதும் இப்படிப்பட்ட நிலையிலும் ஓரிடத்தில் இருக்காமல் தடியூன்றிக் கொண்டு நடப்பர் என்பதும் அப்போது நீண்ட தூரம் நடக்கமுடியாதபடிக் கால்கள் தடுமாறிக் கண் சுழலுவதும் வாய் குழறுவதும் ஆகிய நிலை ஏற்படும் என்பதும் விளக்கப்படுமுகத்தான் இளமை நிலையாமை குறித்து நாலடியார் [9] கூறுவதும் இங்குக் கருதத் தக்கது.

நிலையாமையை எண்ணி, உடல் வலுவும் இளமையும் இருக்கும்போதே இறைவனுறையும் தலங்களுக்கெல்லாம் சென்று அவன் திருப்பெயர்களைப் பரவி வழிபட வேண்டும் என்னும் கருத்து

உறிகள் போல்மெய்ந் நரம்பெ
முந்தூன் தளர்ந்துள் ளமெள்கி
நெறியை நோக்கிக் கண்க
ழன்று நின்று நடுங்காமுன்
அறிதி யாகில் நெஞ்சில்
அன்பா யாயிர நாமஞ்சொல்லி
வெறிகொள் வண்டு பண்கள்
பாடும் வதரி வணங்குதுமே.

என்னும் பாடலால் புலப்படுத்தப்படுகிறது. ''கவிதைகளில் இடத்திற்கேற்பச் செய்யுளின் நடைக்கேற்பச் சொற்கள் யாதொரு தட்டுத்தடையின்றி விரைந்து வந்து உதவும் நிலையே சொல்வளமாகும் ''[10] என்னும் கூற்றுக்கேற்ப, இளமை நிலையாமையைச் சொல்லிக்கொண்டு வருமிடத்து கருத்துக்கும் நடைக்கும் ஏற்ற சொற்கள் தங்குதடையின்றி வருகின்றமை அறியப்படும்.

மூப்பு மிகும்போது கண்கள் சுருங்கிப் பசையற்றுச் சந்து வழியாகப் பிளிச்சையை வெளிவிடும் என்பதும் கண்களில் குழி விழும் என்பதும் தாள்களை ஒரு புறம் திருப்ப அவை மற்றொரு புறமாகி ஒன்றோடொன்று முட்டிக் கொண்டு வலியை விளைவிக்கும் என்பதும் இந்த நிலையிலும் ஓரிடத்தில் நிற்கமாட்டாமல் தள்ளித் தள்ளித் தடுமாறி நடக்கவும் நேர்தல் இயல்பு என்பதும் விளக்கப்படுகிறது. முதுமைப் பருவத்தில் நடையில் தடுமாற்றம் ஏற்படுவதுபோல் பேச்சிலும் தடுமாற்றம் ஏற்படும் என்றும், இளமையில் ஆண்டவனை வழிபடாமலும் வாழ்க்கையில் செய்ய வேண்டிய அறச்செயல்களைச் செய்யாமலும் நாளை செய்யலாம் என்று காலத்தைக் கடத்திக் கொண்டே போனால் முதுமை அடைந்தவுடன் எங்கும் செல்ல முடியாத நிலை ஏற்படுமென்றும், வெளியில் தடுமாறிக் கொண்டு நடந்து சென்றால் ஏனையோர் கிழப்பருவம் கண்டு எள்ளி நகையாடுவர் என்றும், அறச் செயல்கள் செய்வதற்குக் கூட கைநடுங்கும் என்றும் தெளிவாகக் கூறப்படுகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தும் முதுமைப் பருவம் வந்துற்ற போது சிதிலமடைந்துவிடும் என்பதும் கண் தெரியாத படியும் காது கேளாதபடியும் காலால் அடியெடுத்து வைக்க முடியாதபடியும் முதுமை அதிகரித்து மூலையில் கிடந்து கண்டபடி பிதற்றும் காலம் ஏற்பட்டுத் துன்புற

நேரும் என்பதும் அந்நிலை வந்து சேருமுன் இறைவனைச் சென்று பணிய வேண்டும் என்பதுமான கருத்துக்கள் குறிப்பிடப்படுகின்றன.

முதுமை வருமிடத்து பெண்டிரின் நகைப்புக்கும் புறக்கணிப்புக்கும் இடமாகும் நிலைமை.

பப்ப அப்பர் மூத்த
வாறு பாழ்ப்பது சீத்திரளை
ஒப்ப, ஐக்கள் போத
வுந்த 'வுன்தமர் காண்மின்' என்று
செப்பு நேர்மென் கொங்கை
நல்லார் தாம்சிரி யாதமுன்னம்

என்பது போன்றவற்றால் விரிவாக விளக்கப்படுகிறது. இளமைப் பருவம் நிலையில்லாதது என்பதை மறந்து, உடல் அழகையும் வலிமையையும் கொண்டு உலக ஆசையில் ஈடுபட்டு அழிந்துபோகும் மக்களுக்கு அது நிலையற்றது என்பதையும் உடலில் வலுவிருக்கும்போதே அதைக் கொண்டு பரம்பொருளின் அருளைப்பெற முயற்சி செய்ய வேண்டும் என்பதையும் திருமங்கையாழ்வார் தெள்ளிதின் உணர்த்தியுள்ளமை அறிகிறோம்.

## பிறவிச் சுமை:

பிறவி என்பது மீண்டும் தொடர்ந்து வருவது. பிறவி என்னும் பெருங் கடலைக் கடப்பதற்கு இறைவன் திருவடிகளைச் சேரவேண்டும் என்று கூறுகிறார் வள்ளுவர்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேராதார் [11]

என்பது அவர் கூற்று. பழங்காலத்திலிருந்தே மக்கள் பிறவியில் நம்பிக்கை உடையவராய் இருந்தனர் என்பதும் பிறவியைப் போக்குபவன் இறைவன் என்னும் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதும் அனைவரும் அறிந்த ஒன்றே. இடைக் காலத்தில் பல்வேறு சமயங்கள் புகுந்தபோது அவ்வச் சமயத்துக்கு ஏற்றாற்போல் மக்கள் தம் கொள்கைகளையும் நம்பிக்கைகளையும் மாற்றிக் கொண்டனர். அந்தக் கால கட்டத்தில் வாழ்ந்த திருமங்கையாழ்வார்,

பிறவாமை யெனைப்பணி - எந்தை பிரானே

யானுல்கில் பிறப்பேன் ஆகஎண்ணேன் பிறவாமை
பெற்றது நின்திறத்தேன் ஆதன்மையால்

மன்னா இம்மனிசப் பிறவியை நீக்கி
தன்னாக்கித் தன்னின் அருள்செய்யும் தலைவன்

எனப் பாடியிருப்பதை நோக்க, மனிதப் பிறவி நிலையில்லாதது; பிறவியை நீக்குபவன் இறைவன் ஒருவனே என்னும் கொள்கைகளை உடையவராயிருந்தார் என்பது அறியப்படுகிறது. 'மனிசப் பிறவியை நீக்கி' என்று அவர் கூறுவதனின்றும் பிறவி பல உண்டு என்பது பெறப்படுகிறது.

பிறவிச் சுமை பற்றியும் பிறவியின் விளைவு பற்றியும் பிறவியின் காரணம் பற்றியும் பிறவித்துன்பம் பற்றியும் பிறவாமை வேண்டியும் பதினெட்டுப் பாடல்களில் விளக்கியுள்ளார். பிறவாமை வே ண்டும் என்றும் ஒருவேளை பிறந்து விட்டால் இறைவனை மறக்காமல் இருக்க வேண்டும்[12] என்றும் வேண்டிக் கொள்ளும் காரைக்காலம்மையாரின் வேண்டுதல் இங்கு ஒப்பிட்டு நோக்குதற் குரியது. பிறவிநோய் அறுப்பவன் இறைவனே என்பதும் அவனை நினைந்து நினைந்து பிறவாமையை அடையலாம் என்பதும் ஏழு பாடல்களில் குறிப்பிடப்படுகிறது. பிறவியைக் குறிக்கும்போது உருவார் பிறவி, தூங்கார் பிறவி, எவ்வநோய், இடும்பைக்குழி, தோற்றக்குழி என்னும் தொடர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

உடலில் இணைந்துள்ள ஐம்பொறிகளின் வேட்கையினால் உயிர் தவிக்கின்றது. ஆசையும் பாசமும் உயிரை எங்கெங்கோ இழுத்துச் செல்கின்றன. உடலோடு ஒன்றியிருக்கும் உயிர் தனது புனிதத் தன்மையை மறந்து புலன் இன்பங்களை நாடுகின்றது. சிற்றின்பத்தில் ஈடுபடுகின்றது. இவ்வாறு உயிர் புரியும் செயல்களின் பலன் வினைப் பயன்களாகச் சேருகின்றன. அந்த வினைப் பயன்களின் விளைவால் மீண்டும் பிறவி ஏற்படுகின்றது. நன்மை செய்வதால் நல்வினைப் பயனும் தீமை செய்வதால் தீவினைப் பயனும் வந்தடைகின்றன. வினைப் பயன்கள் வலிமை வாய்ந்தனவாகவும் விடாது உயிர்களைத் தொடர்வனவாகவும் இருக்கின்றமையால் 'வல்வினை' எனப்படுகிறது. இவ்வினை போக்கும் சக்தி இறைவன் ஒருவனுக்கே உண்டு. அதனால் இறைவன் வினை தீர்க்கும் மருந்து என்னும் கருத்துக்களை உள்ளடக்கி

பணிவார் வினைகள் நாசமது செய்திடும்

என்றும்

வினை தீர்த்த அம்மான்

என்றும் சுட்டுகின்றார் ஆழ்வார். மேலும் மாயமான பற்றுக்களை அறுத்தால்தான் பற்றுக்களால் விளையும் பிறவி அகலும்; இறைமை இன்பத்துக்கு ஈடாக வேறு எந்த

இன்பமும் இல்லை; புலன் இன்பங்கள் அனைத்தும் புன்மையானவை; நிலையில்லாதவை; நிலைத்தலில்லாப் பொருள்கள் மீது பற்று அற்ற பொழுது தான் பிறவித் துன்பம் அறுபடும்; அதற்குரிய வேதனை தரும் புலனுகர்ச்சிகளை அகற்றுதற்கு இறைவன் துணை வேண்டும்; அதற்கு இறைவன் அடியை அடைய வேண்டும் என்பதையும் கூறுகிறார்.

திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி இறுதிப் பதிகத்தில் பிறவித் துன்பம் மிகக் கொடியது என்பதையும் அது தம்மால் ஒழிக்கவொண்ணாதபடி உள்ளது என்பதையும் அது மாறி மாறி வந்து ஒருவரை அலைக்கழிக்கக் கூடியது என்பதையும் இறைவனின் திருவடிகளை அடைந்தே பிறவியைப் போக்கிக் கொள்ளமுடியும் என்பதையும் நீள நினைந்தவராய்,

ஆற்றங்கரை வாழ் மரம் போலஞ்சுகிறேன்

காற்றத் திடைப்பட்ட கலவர் மனம்போல்
ஆற்றத் துளங்கா நிற்பன்

பாம்போ டொருகூ ரையிலே பயின்றாற்போல்
தாங்கா துள்ளம் தள்ளும்

இருபாடெரி கொள்ளியி னுள்ளெறும்பே போல்
உருகா நிற்கும் என்னுள்ளம்

வெள்ளத் திடைப்பட்ட நரியினம் போல
உள்ளம் துளங்கா நிற்பன்

இடையன் எறிந்த மரமே யொத்து

வேம்பின்புழு வேம்பன்றி யுண்ணாது அடியேன்
நான்பின்னுமுன் சேவடியன்றி நயவேன்

எனப் பலவாறு புலம்பி அவன் திருவடிகளில் சரணம் புகுவதன்மூலமாக பரமான்மா கைவிடுதலே சீவான்மாவின் பிறவிக்குக் காரணமாகும் என்பதையும் பரமான்மா சீவான்மாவைக் கைவிடாமலிருத்தல் வேண்டுமானால் உலகியல் ஆசையைத் துறந்து அறத்தைச் செய்து இறைவன் திருவடியை இடைவிடாது போற்றித் துதிக்க வேண்டும் என்பதையும் உணர்த்தி நிற்கிறார். பிறவிக்கு அஞ்சியவரான அவருடைய 'ஆற்றங்கரை வாழ் மரம் போலஞ்சுகிறேன்' என்னும் கூற்றையொட்டியே

கார் கண்ணியர் ஐம்புலன் ஆற்றங் கரைமரமாய்
வேர்உற்று வேனை[13]

என்னும் மணிவாசகர் கூற்றும் அமைந்துள்ளமை கருதத் தக்கது.

பெண்ணாசை:

தொன்று தொட்டு இன்றுவரை மனிதனைப் பிடித்து ஆட்டி வரும் ஆசைகள் மூன்று. அவை பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை என்பனவாம். இவ்வாசைகள் பிறப்பதற்கான காரணத்தை ஆராய்ந்து முடிவு சொன்னவரோ, எதைவிட எது கொடியது, எது துன்பம் தருவது என்று கூறியவரோ இல்லை. எனினும் எண்ணிப் பார்க்குமிடத்து மண், பொன் ஆகிய இரண்டும் பெண்ணாசைக்குப் பின்னரே வைத்து எண்ணத் தக்கவை என்பது பெறப்படும். பெண்ணாசையால் மயங்கும் நிலைகாரணமாக ஏற்படும் துன்பங்களும் அவ்வாறு மயங்கி நிற்பது தவறு என்பதும் அதைத் தவிர்க்க வல்லவன் இறைவனே என்பது -மாகிய கருத்துக்கள் பத்தொன்பது பாடல்களில் இடம் பெறுகின்றன. பெண்களைக் குறிக்கும் அடைமொழிச் சொற்களாக ஐம்பத்தேழு இடம் பெறுகின்றன. மானிடப் பெண்டிரைக் குறிப்பனவும் இறைவியைக் குறிப்பனவுமாக அமைவனவே அவை.

எவராலும் எவ்விதத் துன்பமும் நேரக்கூடாது; இன்பமே பெருக வேண்டும்; தாம் மட்டும் நலமாக வாழ வேண்டும் என்னும் எண்ணமே மனிதரிடம் மேலோங்கி நிற்கிறது என்பதை எண்ணிப்பார்த்து அதை விட்டுவிட்டு அறச் செயல்களைச் செய்து வாழும் நிலைக்கு ஒருவர் தம்மை ஆக்கிக் கொள்ள வேண்டும் என்பதும் அதற்கு இறையருள் ஒன்றே துணையாவது என்பதும் புற அழகைப் பார்த்து அனுபவித்தவண்ணம் காலத்தை வீணாக்குதல் நன்றன்று என்பதுமான கருத்துக்கள் விளக்கப்படுகின்றன. அன்றியும் 'ஆவியே, அமுதே' என்று இறைவனிடத்தில் சொல்ல வேண்டிய உயர்வுரைகளைப் பெண்களிடம் சொல்லுவதும் அவர்களால் ஏற்படக்கூடிய இன்பம் ஒன்றையே நினைத்து அதில் ஈடுபடுவதும் தவறு என்பதைச் சுட்டிக் காட்டி இறையருள் ஒன்றே பெறுவதற்கு உரியது என்பதை விளக்குமுகத்தான்

சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமா ருருவமே மருவி

என்றும் கூறப்படுகிறது. பெண்ணின்பத்தில் மயங்கி நிற்பதால் அறச் செயல்களையெல்லாம் மறந்து நரகத்தை அடையக்கூடிய தீய செயல்களைச் செய்யத் தூண்டும்; பல்வேறு வகைகளில் பாவத்தைப் பெருக்கும்; வேதனை தரக் கூடிய தீவினையை உண்டாக்கும்; பிறர் மனைவியை விரும்பும் தவறான செயல் காமுகர்களை நரகத்தில் சேர்த்து காய்ச்சிய எண்ணெய்யில் முழுக்காட்டிய பாவையைத் தழுவும்படிச் செய்து விடும் என்னும் உலகியல் சிந்தனைகள் முறையே முதல் பத்து ஒன்பதாம் திருமொழி இரண்டாவது பாடல், மூன்றாம் பத்து

இரண்டாம் திருமொழி ஒன்பதாவது பாடல், ஆறாம் பத்து முதல் திருமொழி எட்டாவது பாடல், முதல்பத்து ஆறாம் திருமொழி நான்காவது பாடல் ஆகியவற்றில் விளக்கப்பட்டுள்ளன.

### புலனடக்கம்:

பக்தி இலக்கியம் பாடுவோர் புலனடக்கத்தை வற்புறுத்திக் கூறுவர். "உயிர் உடம்போடு கூடி வாழ்ந்து வரும் வாழ்க்கையில் அதை நன்னெறியில் செல்லவிடாது தீய நெறியில் செலுத்துதற்கு ஐம்புலன்கள் காரணமாக அமைகின்றன. அவ்வைம்புலனும் தத்தம் வழியில் உயிரைச் செலுத்த முயலும் முயற்சியை மாற்றி அவ்வைம்புலன்களையும் தன் வழிப்படுத்த உயிர் முற்பட்டு அதில் வெற்றி பெறவும் வேண்டும். இதுவே புலனடக்கம் எனப்படும்"[14] என்பதே அது. திருமங்கையாழ்வார், புலன்கள் தம்மை மிகவும் துன்புறுத்தியதாகவும் அவற்றை அடக்குவதற்குக் தாம் முயற்சிகள் பல செய்ததாகவும் வருந்திப் பாடியுள்ளார். புலன்வழிச் செல்லுதலாகிய உலக மக்களின் குறைபாட்டைத் தம் உள்ளத்தால் உணர்ந்து அவர்களுக்காகவும் வருந்தித் தம் மேல் ஏற்றி வைத்துப் பத்துப்பாடல்கள் பாடியுள்ளார். பிறர்நிலையைத் தம்மேல் ஏற்றி வைத்துப் பாடும் இத்தகு தன்மை திருநாவுக்கரசரின் தேவாரத்திலும் மாணிக்க வாசகரின் திருவாசகத்திலும் காணக்கிடக்கிறது.[15] புலனடக்கத்தை வற்புறுத்தும் வண்ணம் புலன்கள் விரும்பியவாறு செல்வதையும் அவற்றை அடக்கி முழுமையாக இறைவனிடம் வேண்ட அருள் பெறலாம் என்பதையும் உலகத்தவர்க்குப் புலப்படுத்துகிறார்.

மனம் அறிவை விட்டு விலகிச் சென்று புலன்களைச் சாரும் என்னும் உலக வழக்கு

ஏவினார் கலியார் நலிகவென் றென்மேல்
எங்ஙனே வாழுமாறு ஐவர்
கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன்

என்னும் பாடலில் கூறப்படுகிறது. இறை வாழ்வின் உயர்வும் சிறப்பும் ஆகியவை அறிவுபூர்வமாக உணரப்பட்டும் அவற்றை அடைவதற்கு மனம் பக்குவமடையாமலிருத்தல் கண்டு வருந்திப் புலம்புவதும் விளக்கப்படுகிறது. புலன்களை அடக்கமுடியாத நிலையில் கண்டவாறு திரிய நேரிடும் என்பதைக் குறிப்பிடுமிடத்துக் காணலாகும்.

கல்லா வைம்புலன்க ளவைகண் டவாறு செய்யகில்லேன்

என்னும் அடி புலனடக்கத்துடன் வாழும் அருமையையும் அவ்வாறு வாழ்க்கையில் வாழ முடியாத எளிமையையும் சுட்டிக் காட்டுகிறது. புலன்கள் மனத்தைக் கட்டுப் பாடின்றிச் செலுத்துவதால் அவை 'கல்லாவைம்புலன்கள்' என்று குறிப்பிடப் படுவதுடன் ஒழுங்குபடுத்தப் பெறாத - கட்டுப்பாடில்லாத ஐம்புலன்கள் என்னும் பொருளையும் அது தருகிறது. புலன்களின் வழிச் செல்லாது மனத்தை ஒருமுகப் படுத்துவோர் தான் இறையருளைப் பெறமுடியும் என்பதும் ஐம்புலன்களின் தாக்குதலால் அனுபவிக்கும் நரக வேதனையை வருந்திக் கூறி இறைவனிடம் சரணடைவதே அதற்குரிய ஒரே வழி என்பதும் குறிப்பிடப்படுகிறது.

இறைவனுடைய அருளைப் பெற வேண்டும் என்பதற்காக மக்கள் விரதங்கள் காத்து, நோன்பு இருக்கிறார்கள். உடலை வருத்தி யோகப் பயிற்சி செய்கிறார்கள். துறவுபூண்டு உடலைத் துன்புறுத்தி இந்திரியங்களை ஒடுக்கப் பார்க்கிறார்கள். ஆனால் அன்பு ஒன்றினால் தான் இறைவனை அடையமுடியும் என்று அவர்களுககு அறிவுறுத்துவதாகப் பாடல்கள் உள்ளன.

ஊன்வாட உண்ணா துயிர்காவ லிட்டே
உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து
தாம்வாட வாடத் தவம்செய்ய வேண்டா

காயோடு நீடு கனியுண்டு வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து
தீயோடு நின்று தவஞ்செய்ய வேண்டா
திருமார்ப னைச்சிந்தை யுள்வைத்து மென்பீர்

என்னும் பாடல்கள் அதற்குச் சான்றாகும். பக்தியுடன் மனம் உருகாமல் உடலை வருத்தி எத்தனை தவங்கள் இருந்தும் பயனில்லை , மனமுருக ஒருமையுணர்வுடன் இறைவனை வழிபட்டால் அவனருளைப் பெறலாம் என்பது விளக்கப்படுகிறது.

## மெய்ப்பொருள் சிந்தனை

மாறுபடுவதும் அழிவதுமாகிய சராசரி மனிதனின் நிலையைத் தெள்ளிதின் விளக்கிய ஆசிரியர் மாறுபாடற்றதும் அழிவற்றதுமான இறைத் தன்மையை அனைவரும் உளங்கொள்ளுமாறு தம் பாடல்கள் வழி புலப்படுத்துகிறார். அவருடைய புலப்படுத்து நெறி வைணவ சமய மெய்ப் பொருள் கோட்பாடுகளைத் தன்னகத்துக் கொண்டு திகழ்கிறது. வைணவ சமயத்தின் முழுமுதற் பொருளான 'விட்டுணு' தமிழில் 'திருமால்' என்றும் 'மாயோன்' என்றும் வழங்கப்படுகின்றான். 'விட்டுணு' என்னும் சொல்லுக்கு

'எங்கும் நிறைந்திருப்பவன்' என்பது பொருளாகும். பரந்து விரிந்துள்ள பொருளைக் கண்ணுக்கெட்டிய தூரம் வரை உற்று நோக்குமிடத்து அது நீல நிறமாகத் தெரியும். நிறமில்லாத நீர் கடலாக விரியுமிடத்து நீல நிறமுடையதாகக் தோன்றும். எங்கும் பரந்து விரிந்திருப்பதற்குத் தோற்றத் தளவில் நீல நிறம் அமைவது இயல்பாகும். எனவே நீல நிறமுடைய இறைவனின் திருவுருவம் இறைவன் எங்கும் எதிலும் நிறைந்தவன் என்னும் உண்மையை உணர்த்துகின்றது. இத்தகைய தன்மையுடையவனே 'நாராயணன்' என்றும் அழைக்கப்படுகின்றான்.

## எட்டெழுத்து மந்திரம்:

'நாராயணன்' என்னும் சொல்லே 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மந்திரத்துக்கு அடிப்படையாகும். இத்திரு மந்திரமாகிய திருவெட்டெழுத்தினை வேத மந்திரமாக வைணவம் கொள்ளுகின்றது. பெரிய திருமொழி திருவெட்டெழுத்தினை 'வாயெடுத்த மந்திரம்' என்று குறிப்பிடுவதிலிருந்தும் 'இருக்கினில் இன்னிசை' என்னும் தொடர் மூலம் வேதங்களைத் தொடர்புறுத்திக் குறிப்பிடுவதிலிருந்தும் இதன் சிறப்பு புலப்படுகின்றது. ''ஓம் என்னும் பிரணவ மந்திரம் அ+உ+ம் என்று பிரிக்கப்பெறும். 'அ' என்பது நாராயணனையும் 'உ' திருமகளையும் 'ம' உயிர் வகைகளையும் குறிக்கும். உயிர்களையும் பரம்பொருளாம் இறைவனையும் இணைத்து வைக்கும் இணைப்புப் பாலமாகத் திருமகள் விளங்குகிறாள். 'நம' என்னும் சொல்லை ந +ம என்று இரண்டாகப் பிரிக்கலாம். 'ந' என்பது வடமொழியில் 'எனக்கு உரியவன்' என்றும் 'ம' என்பது 'அல்லன்' என்றும் பொருள்படுகின்றன.''[16] ''வைணவத்தின் மூல மந்திரமாவது எட்டெழுத்துக்களைக் கொண்ட 'ஓம் நமோ நாராயணாய' என்பதாகும். இதன் பொருள் பரம்பொருளாகிய நாராயணனை வணங்குகிறேன் என்பதாகும்'' [17] என்பன எட்டெழுத்து மந்திரத்திற்குரிய விளக்கங்களைக் கூறுகின்றன.

## நாராயண நாமத்தின் ஏற்றம் :

இறைவனுக்கு ஆயிரம் திருப்பெயர்கள் கூறினும் 'நாராயணன்' என்னும் பெயரே பெயர் என்னும் நிலையிலும் மந்திரம் என்னும் நிலையிலும் சிறப்புடையதாகும் என்பதை அறிகிறோம். நாராயண நாமத்தின் சிறப்பையும் அதைச் சொல்லுவதால் வரும் பயனையும் குறிப்பிட்டு தாம் கண்டு கொண்டதாக இருபத்தொரு பாடல்களில் கூறுகிறார். நாராயணன் என்னும் திருப்பெயரே இம்மை நலனையும் மறுமை நலனையும் அளிக்கவல்லது என்று வைணவர்கள் கருதுகின்றனர்.

இதை ஆழ்வார்,

குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்

என்னும் பாடலில் விளக்குகிறார்.

## இறைவனின் வேறு திருநாமங்கள் :

யாவையுமாய் யாங்கணுமாய் நிறைந்து நிற்கும் இறைவன் உருவமற்றவன். குறிப்பிட்ட எப்பெயரும் இல்லாதவன் என்றாலும் ஆயிரம் திருநாமங்கள் உடையவனாக அன்பர்களால் அழைக்கப்பெறுகிறான். அவர்களெல்லாம் உளம் நெகிழ்ந்து பாடிப் பரவசமடைந்த நிலையில் அப்பெயர்கள் வந்தனவேயன்றி அவை மட்டும் அவன் பெயர்கள் என்பதில்லை. இறைவனை நோக்கி ஆழ்வார் அழைத்த பெயர்களுள் சந்தோகன், பௌழியன், தைத்திரியன், சாமவேதி என்பன சிலவாம்.[18]

| | | |
|---|---|---|
| சந்தோகன் | - | சாந்தோக்கிய உபநிடதத்தை அறிந்தவன் |
| பௌழியன் | - | பிருக தாரண்யக உபநிடதத்தினால் அறியப்படுபவன் |
| தைத்திரியன் | - | தைத்திரிய உபநிடதத்தால் அறியப்படுபவன் |
| சாமவேதி | - | சாமவேதத்தினால் அறியப்படுபவன் |

இவ்வாறு குறிப்பிட்ட சில பெயர்களால் அவனை அழைத்தது மட்டுமன்றி அவன் ஆயிரம் பெயருடையான் என்றும் தம் பாடல்களில் குறிப்பிடுகிறார்.

## திருமாலின் முதன்மைத் தன்மை:

படைப்புக் கடவுளான பிரமனைத் தன்னுடைய உந்திக் கமலத்தினின்றும் தோற்றுவித்தவன். பிரமனும் சிவனும் இந்திரனும் முறையினின்று வழுவாது துதிக்கும்படியான பெருமை வாய்ந்தவன். வானுலகிலுள்ள தேவர்கள் அனைவரும் வந்து வணங்கப்பெறும் தன்மையுடையவன். இந்திரன், சந்திரன், கதிரவன், பிரமன் முதலிய தேவர்களும் சநகர், சநாதனர் முதலிய முனிவர்களும் வந்து திரண்டு வேண்டிக் கொள்ள, அவர்களுடைய அதிகாரங்கள் நடப்பதற்காக அருள் கூறுபவன். பிரமனுக்கு அந்தரியாமியாய் நின்று படைத்தல் தொழில் செய்தும் தானான தன்மையில் நின்று காத்தல் தொழில் செய்தும் சிவனுக்கு அந்தரியாமியாய் நின்று அழித்தலை நடத்தியும் தலைமையாகி நிற்பவன் என இவ்வாறு கூறப்படும் சிறப்புக்களெல்லாம் திருமாலின் முதன்மைத் தன்மையைத் தெரிவிக்கின்றன.

### சார்ந்தாரைக் காக்கும் பண்பு:

சிவபெருமானுக்கு ஏற்பட்ட சாபத்தைப் போக்கி அவனைக் காத்தருளிய பண்பும் சுமுகன் என்ற நாககுமாரனைக் காத்தருளியமையும் மாதவத்தோனின் அரும்பெரும் மைந்தனை மீட்டுக் கொடுத்தமையும் மார்க்கண்டேயனைக் காப்பாற்றியமையும் அந்தணனுக்கு அருளியமையும் உடையவன். வேண்டியவர்க்கு வேண்டியவாறு அளிக்கும் தன்மையும் மனத்தால் நினைப்பதற்கும் எட்டாதவனாகிலும் தன்னையே நாளும் வணங்கித் தொழுகின்ற அணுக்கத் தொண்டர்களுக்கு எளியனாயிருந்து அருளுகின்ற அருமையும் உடையவன். அத்தகைய தொண்டர்களுக்குரிய பண்புகள் ஏனைய உயிர்களிடத்-திருப்பினும் அவை துயருறுங்கால் துயர் துடைக்கும் தண்ணளியாளன் என்பதை எடுத்துக் காட்டுகின்ற வகையில் இறைவனுக்குப் படைப்பதற்காக வேண்டித் தாமரை மலரைப் பறிப்பதற்காகப் பொய்கையொன்றில் இறங்கிய கஜேந்திரன் என்னும் யானையின் காலை அங்கு வாழ்ந்த முதலையொன்று கவ்விப் பிடித்து இழுக்க, யானையும் ஆதிமூலமே என்று அழைத்த மாத்திரத்தில் சக்கரப்படையை அனுப்பி முதலையைக் கொன்று யானையைக் காத்த பண்பு எட்டுப் பாடல்களில் குறிப்பிடப்படுகிறது.

இறைவன் உயிர்களுக்குத் தாயும் தந்தையுமாய் இருந்து அவற்றுக்கு உற்ற குறையை தானே அறிந்து வலிய வந்து அவற்றைப் போக்கும் கருணையும் உடையவனாய் விளங்குகின்றான். அணுக்கத் தொண்டர்களாய் நின்று ஏத்துகின்றவர்களுக்கு மட்டுமன்றி அவர்களோடு தொடர்புடையவர்களுக்கும் வீடுபேறு அளிக்கும் தன்மையாளன் என்றெல்லாம் அவனுடைய கருணைத்திறம் பேசப்படுகிறது. உயர்ந்தவர் - தாழ்ந்தவர், நல்லவர் - கெட்டவர் என்னும் வேற்றுமையின்றி எவரிடத்திலும் எத்தகைய பலனையும் எதிர்பார்க்காமல் காத்தருளும் கருணை உள்ளத்துடன் விளங்குகின்றான் என்னும் கருத்தும் இடம் பெறுகிறது. இறைவனை அறிதற்கரியன் என அருளாளர்கள் குறிக்குமிடத்-தெல்லாம் அவன் எளிமையையும் புலப்படுத்திக் கூறுவர். இதனையொட்டியே ஆழ்வாரும் மனம் கசிந்துருகித் தொழுவார்க்கு எளியனாய், இனியனாய் வந்துதவுகின்றவன் என்றும் வழிபடுகின்றவருடைய நெஞ்சம் உருகினால் இறைவனைக் காண முடியும் என்றும் விளக்குகிறார்.

### இறைஉரு :

இறைவன் உலகம் முழுவதுமாகி ஒவ்வொரு பொருளினின்றும்

வேறாகவும் ஒவ்வொரு பொருளினுள்ளும் நிற்கும் திறத்தை அப்பெருமான் எண்வகை வடிவில் நிற்குமாற்றால் அடியவர்கள் விளக்குவர். இறைவனின் இத்தகைய வடிவம்,

பாரு நீரெரி காற்றி னோடா
காச முமிவை யாயினான்

அம்ப ரமனல் கால்நி லம்சல
மாகி நின்றஅ மரர்கோன்

என்பது போன்று பதினாறு இடங்களில் பேசப்படுகிறது. அவன் எண்வகை வடிவுடன் விளங்குவதோடு ஐம்பொறிகளாகவும் அவற்றால் உணரப்பெறும் சுவை களாகவும் விளங்குபவன். எண்வகை வடிவங்களுள் ஞாயிறு, திங்கள், நெருப்பு என்ற மூன்றும் ஒளி மண்டிலங்களாகும். இம்மூன்றும் புறவிருளை நீக்கி, உலகத்திலுள்ள பொருள்களைக் காண்பதற்குத் துணை செய்தல்போல, எல்லாமே தானாய் விளங்கும் இறைவன் உயிர்களின் அறியாமையாகிய அகவிருளைப் போக்கி, மாயையின் நீங்கிய தன்னியல்பை அவ்வுயிர்கள் உணர்ந்து மகிழ்ச்சியடைவதற்குத் துணை செய்தற் பொருட்டு எண்பொருளும் தானாய் நிற்போன் என்பதோடன்றி அவன் இல்லாத இடமேயில்லை என்பதைக் காட்டு முகத்தான் எல்லாப் பொருள்களும் தானேயாகி நிற்கின்ற தன்மையும் உயர்திணை, அஃறிணையாகிய எல்லாப் பொருள்களுள்ளும் கலந்து நின்று அவற்றின் துன்பங்கள் தன்னைத் தொடராதபடி இருக்கின்ற தன்மையும் புலப்படுத்தப் படுகிறது. உலகம் முழுவதும் இறைவன் தானாகி அனைத்திலும் ஊடுருவி நிற்கும் பெருமை பரிபாடல், தேவாரம், திருவாசகம், திருமந்திரம், தாயுமானவர் பாடல் ஆகியவற்றிலும் பேசப்பட்டுள்ள பான்மை இங்கு எண்ணுதற்குரியது [19].

ஆதியந்தமில்லா இறைத்தன்மையாவது இப்பரந்த உலகில் நாம் காணும் பருப்பொருள்களுக்கெல்லாம் மூலப்பொருளாகி நிற்கும் பாங்காகும் . அது

திடவிசும் பெரிநீர் திங்களும் சுடரும்
பெருநிலத் துயிர்களும் மற்றும்
படர்பொருள் களுமாய் நின்றவன்

என்றவாறு காட்டப்படுகிறது. ஏனைய நான்கு பூதங்களுக்கும் முன் தோன்றியது விசும்பு. எல்லாம் அழிந்த பின்னும் எஞ்சி நின்று இறுதியில் அழிவதும் விசும்பே. ஆகவே அது மட்டும் 'திட'என்னும் அடைமொழி பெற்றுள்ளது. பருப்பொருள் களுக்கெல்லாம் மூலப்பொருளாக நிற்கும் தன்மை மணிவாசகராலும் பேசப்பெறுகிறது.[20]

சொல்லுவன் சொற்பொருள் தானவை யாய்சுவை
யூறொலி நாற்றமும் தோற்றமுமாய்

என்று இறைவனின் வியாபகத் தன்மை சிறப்பிக்கப்படுகிறது.

'வன்சொல்' என்பது என்றுமழியாமல் வலிதாயிருக்கக்கூடிய ஒலி. அது தான் வேதம்,பிரணவப்பொருள் என்று நினைத்துப் பார்க்குமிடத்து வேதமே தானாகி, பிரணவமே தன்னுட்பொருளாகி அந்தரியாமியாகியுள்ள இறைவனின் தன்மை புலப்படுகின்றது. இறைவன் அனைத்துப் பொருள்களிலும் கலந்து விட்டமையோடு அப்பொருள்களையே தன் உருவமாகக் கொண்டிருக்கிறான். கடல்நீர் அரையிலுடுக்கும் ஆடையாகவும், பூமிப்பரப்பு திருவடியாகவும், விண்வெளி திருமேனியாகவும், திசைகளெட்டும் திருத்தோளாகவும், அண்டம் முழுவதும் திருமுடியாகவும் அமைந்து உலகமே இறைவனின் உருவமாக இருக்கின்றது[21]. உலகத்தில் நிலைபெற்றுள்ள அனைத்துப் பொருள்களினுள்ளும் அந்தரியாமியாய் நின்று, அவ்வனைத்துப்பொருள்களும் தானேயாகி நிற்கும் இறைவனின் உருவம் சங்க இலக்கியமாகிய நற்றிணையிலும் காட்டப் பெற்றிருப்பது ஒப்பிட்டு நோக்குதற்குரியது[22].

## வழிபாட்டு முறை :

இறைவனை வழிபடுவதை வைணவர்கள் 'திருவா ராதனம்' என்பர். வழி பாட்டின்போது உருவத்தின் வழி பரம்பொருளோடு தொடர்பு கொள்ள முடிகிறது. இதை ''தூய்மையான பண்பு நலன்களின் வடிவமாகத் திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் தெய்வத் திருமேனிகளைத் திருமூலாகக் கண்டு வழிபடுதலை வைணவர்கள் திருவா ராதனம் என்பர். இறைவன் நமக்களித்த பொறிபுலன்களைக் கொண்டு அவனோடு தொடர்பு கொள்ளுதலை ஆராதனம் எனலாம். கண்கள் அவன் பேரழகில் ஈடுபட, காதுகள் அவன் புகழைக் கேட்க, வாய் அவன் புகழ்பாட, கைகள் அவனுக்குத் திருத்தொண்டு செய்ய, மனம், உயிர் அவனிடம் ஒடுங்குவதையே வழிபாடு என்கின்றனர்'' [23] என்னும் கூற்று விளக்குகிறது. இத்தகைய வழிபாட்டு முறை பல பாடல்களில் சுட்டிக் காட்டப் பெறுகின்றது. 1. எட்டெழுத்து மந்திரமாகிய நாராயண நாமத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு வழிபடுதல். 2. குளத்தில் நீராடி அன்றலர்ந்த எட்டு மலர் களைத் தூவி ஆயிரம் நாமங்களைச் சொல்லி அடிபணிதல். 3. பாமாலைகள் பாடிப்பன்மலர் கொண்டு இறைவன் பாதமே பரவித் தொழுதல். 4. நீராடி, இறைநாமம் ஓதி, ஒளிபொருந்திய தூய்மையான பாதங்களில் உச்சி படும்படியாக விழுந்து நாள்தோறும் பணிதல் 5. தூநீர் கொண்டு நீராட்டி, நறுமணப் புகையூட்டி,

வண்ண மலர்தூவி, நாமங்கள் கூறி வழிபடுதல். 6. திரட்சியாகக் கட்டிய அன்றலர்ந்த மலர்களைக் கொண்டு, இறைவன் இருக்கும் கோயில் சென்று பணிதல் ஆகியனவே அவை. இவ்வழிபாட்டு முறைகளுள் எட்டு மலர்களைத் தூவி வழிபடுதலை,

கந்தமாமலர் எட்டுமிட்டு நின்காமர்
சேவடி கைதொழு தெழும்

என்று குறிப்பிடுகின்றார் ஆழ்வார். உயிர்களுக்குத் துன்பம் தராமலிருக்கச் செய்வது; மெய், வாய், கண், மூக்கு, செவி இவையனைத்தையும் தம்விருப்பப்படி செல்லவிடாமல் அடக்கியாண்டு இறைவன் பாதங்களில் பணிய வைப்பது; எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொள்ளச் செய்வது; தமக்கு வரும் இன்னல்களை யெல்லாம் பொறுத்துப் பிறர்க்குத் தீங்கு செய்யாமல் இருக்க வைப்பது; ஞானமாம் அறிவைக் கொண்டு இறைவனை நாட வைப்பது; இறையன்புடன் கூடிய தவத்தைச் செய்ய வைப்பது; இறையருளை எப்போதும் சிந்தித்து இன்புறச் செய்வது; உண்மையே பேச வைப்பது ஆகிய தன்மைகளை முறையே எட்டு மலர்களை இட்டு வழிபடும் வழிபாடு பெற வைக்கிறது. [24]

வழிபடும்போது மனம், மொழி, மெய் ஒருமித்து நிற்க உள்ளம் உருகி வழிபடவேண்டும். அல்லும் பகலும் நாராயண நாமத்தையே பேச வேண்டும். இறைவனை நினைத்துக் கண்களில் அருவி நீர் பாய வேண்டும். பக்தியால் இறைவனை நோக்கித் தழுதழுத்த கண்டத்தன் ஆதல் வேண்டும். இறைவனுடைய பெருமையையே எப்பொழுதும் கேட்க வேண்டும். இறைவனின் திருவடியைத் தலையில் வைக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. இறைவனின் பாதங்களை அடையவேண்டும் என்று கூறுமுகத்தான் அவன் சேவடியைக் குறிப்பதற்கு தாள், திருவடி, அடி, இணையடி, அடியிணை, குரைகழல், பொன்னடி, மலரடி, தளிரடி, நீள்கழல் ஆகிய தொடர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

## தத்துவத்திரயம்:

ஆன்மா வீடு பேற்றினை அடையவேண்டுமானால் தத்துவத்திரய ஞானத்தைப் பெற வேண்டும் என்பது வைணவர் கொள்கை. தத்துவத்திரயமாவது சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் மூன்று தத்துவங்கள். சித்து எனப்படும் சீவான்மா, ஈசுவரன் எனப்படும் பரமான்மாவுக்கு எப்பொழுதும் அடிமையாகவும் பரமான்மா சீவான்மாவுக்குத் தலைவனாகவும் இருப்பதாகக் கருதுவதும் வைணவ தத்துவமாகும். சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய மூன்றும் அழிவில்லாதவை; இவை ஒன்றோடு ஒன்று இயைந்து நிற்கின்றன; அன்றியும் சித்தும் அசித்தும்

இறைவனுக்கு உடலாக அமைந்திருப்பன என்று முப்பொருள்களுக்குமுள்ள உறவை வைணவ தத்துவம் எடுத்துக் கூறும். இதை சரீர - சரீரி பாவனை அல்லது உடல்-உயிர் உறவு என்பர் சான்றோர். சித்து, அசித்து ஆகிய இரண்டிலும் ஈசுவரன் நிறைந்திருக்கின்ற தத்துவம்,

யாவருமாய் யாவையுமாய் எழில்வேதப் பொருள்களுமாய்
மூவருமாய் முதலாய மூர்த்தி

என்றும்

திடவிசும்பு எரிநீர் திங்களும் சுடரும்
செழுநிலத்து உயிர்களும் மற்றும்
படர்பொருள் களுமாய் நின்றவன்

என்றும் சுட்டிக் காட்டப்படுகிறது. இதே தன்மையில் நம்மாழ்வார் கூறுவதும் [25] இங்கு ஒப்பிட்டு நோக்குதற்குரியது.

### இரு நெறிகள்:

வைணவ சமயத்தில் சித்தோபாயம், சாத்தியோ பாயம் என்ற இருநெறிகள் பேசப்பெறுகின்றன. சித்தோபாயம் என்பது நம்மால் செய்யப்பெற வேண்டிய -தாயன்றி முன்பேயுள்ள நெறி. சாத்தியோபாயம் என்பது, நம்மால் மேற்கொள்ளப் பெறும் உபாயமாகும்.[26] திருமங்கையாழ்வார் நாராயணனை சித்தோபாய நெறியில் வழிபடுவதை

வேங்கடத்து அரியை பரிகீறியை
வெண்ணெய் உண்டு உரலினிடை ஆப்புண்ட
தீங்கரும்பினை தேனை நன்பாலினை
அன்றிஎன் மனம்சிந்தை செய்யாதே.

என்னும் பாடலின் வழி அறிய முடிகிறது. நாயக- நாயகி பாவனையில் வரும் ஒன்பதாம் பத்து ஐந்தாம் திருமொழியாக அமைந்துள்ள நாயகி பாடல்களில் சித்தோபாயம் பொருந்தியிருப்பதைக் காணலாம்.

நாயகனாகிய இறைவன் சித்தோபாய நெறிக்கு உரியவனாதலால் அவனைத் தாமதித்து அனுபவிக்காது உடனே பெற வேண்டுமென்ற எண்ணத்தில்,

தவள இளம்பிறை துள்ளுமுந்நீர்த்
தண்மலர்த் தென்றலோ டன்றில் ஒன்றித்
துவள என் நெஞ்சகம் சோரஈரும்
சூழ்பனி நான்துயி லாதிருப்பேன்

இவளும் ஓர் பெண்கொடி யென்றிரங்கார்
என்னலம் ஐந்துமுன் கொண்டுபோன
குவளை மலர்நிற வண்ணர்மன்னு
குறுங்குடிக் கேயென்னை யுய்த்திடுமின்

என்று நாயகன் இருக்கும் இடத்திற்குத் தன்னைக் கொண்டு உய்க்குமாறு தாயையும் தோழியையும் பரகாலநாயகி வேண்டுவதை ஒன்பதாம் பத்தின் ஐந்தாம் திருமொழியிலுள்ள பத்துப் பாடல்களில் காணமுடிகிறது.

## சாத்தியோபாய நெறி:

பக்திநெறி, பிரபத்தி நெறி, சரணாகதி, பரசமர்ப்பணம் என்ற பெயர்களால் வழங்கப் பெறும் சரணாகதி தத்துவம் ஐந்து விதமாக வகைப்படுத்தப்படுகிறது. இறைவன் விருப்பம் எதுவோ அதனையே தன்னுடைய விருப்பமாகக் கொள்ளுதல், இறைவனுக்கு விருப்பமற்றவைகளைத் தாமும் விரும்பாமல் விலக்குதல், இறைவன் மட்டுமே உறுதியான - உண்மையான பாதுகாப்பு என்று அழுத்தமான நம்பிக்கை கொள்ளுதல், இறைவனுடைய பாதுகாப்பினை வேண்டி நிற்பதையே நித்தியக் கடமையாகக் கொள்ளுதல், தனது வாழ்க்கையை முழுமையாக இறைவனுக்கு அர்ப்பணித்தல், அனைத்தும் இறைவன் செயலேயன்றி தன் செயல் எதுவுமே இல்லை என முற்றிலுமாக நம்பியிருத்தல்[27] என்பனவே அவை.

## ஆழ்வாரின் சரணாகதி:

திருமங்கையாழ்வார் பாடல்களில் இறுதியில் அமைந்துள்ள சொற்கள் அவருடைய பக்தியின் பெருக்கை உணர்த்தி நிற்கின்றன. நாராயண மந்திரத்தைக் கூறும் இறுதித் தொடர்கள் முதல் பத்தின் முதல் திருமொழியிலும் திருக் கண்ணபுரத் திருமொழியிலும் அமைந்துள்ளன. திருத்தலத்தின் பெயரைச் சொல்லி முடியும் பதிகங்களாக வதரி, நைமிசாரணியம், சிங்கவேள் குன்றம், எவ்வுள், திருநீர்மலை , இடவெந்தை, அட்டபுயகரம், பரமேச்சுர விண்ணகரம், திருவயிந்திரபுரம், திருத்தேவனார் தொகை, திருத்தெற்றியம்பலம், திருமணிக்கூடம், காவளம்பாடி, பார்த்தன் பள்ளி, இந்தளூர், திருவெள்ளியங்குடி, புள்ளம்பூதங்குடி, கூடலூர், திருவெள்ளறை, திருவரங்கம், நந்திபுர விண்ணகரம், திருவிண்ணகர், திருநறையூர், திருவழுந்தூர், திருக்கண்ணமங்கை திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருப்புல்லாணி, திருக்குறுங்குடி, வல்லவாழ், திருமாலிருஞ் சோலை, திருக்கோட்டியூர் பற்றிய பதிகங்கள் உள்ளன.

'சென்றடை நெஞ்சே' என்று கூறும் பதிகங்கள் திருச்சாளக்கிராமம் திருவேங்கடம், திருக்கடல்மல்லை, மணிமாடக்கோயில், வைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், திருநறையூர், திருமாலிருஞ்சோலை முதலான தலங்களுக்கு அமைந்துள்ளன. 'சேர்மின்கள்' என்னும் தொடர்கொண்டு முடியும் திருமொழிகள் திருச்சித்ரகூடம், திருநறையூர் என்னும் தலங்களுக்கு அமைந்துள்ளன. 'என்னை உய்த்திடுமின்' என்று முடியும் பாடல்கள் திருக்குறுங் -குடிக்கு மட்டுமே அமைந்துள்ளன. இவ்வாறு, இறைவன் இருந்து விளங்கும் திருத் தலங்களில் ஈடுபட்டுத் தம் பத்திப் பெருக்கினைப் புலப்படுத்துகின்றார். நைமிசாரணியம், திருவேங்கடம், காவளம்பாடி, திருவரங்கம், திருவிண்ணகர் ஆகிய தலங்களில் உறையும் இறைவனிடம் சரணாகதி அடைவதை முறையே முதல் பத்து ஆறாம் திருமொழி; ஒன்பதாம் திருமொழி;நான்காம் பத்து ஆறாம் திரு மொழி; ஐந்தாம் பத்து எட்டாம் திருமொழி; ஆறாம் பத்து இரண்டாம் திருமொழி ஆகிய ஐந்து திருமொழிகளில் காணலாம்.

திருக்கண்ணபுரத்து இறைவனிடம் சரணடைவதை எட்டாம் பத்து ஒன்பதாம் திருமொழியின் ஒன்று, இரண்டு, நான்கு ஆகிய பாடல்களில் காணமுடிகிறது.

நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும்
நீதியல் லாதன செய்தும்
துஞ்சினார் செல்லும் தொன்னெறி கேட்டே
துளங்கினேன் விளங்கனி முனிந்தாய்
வஞ்சனேன் அடியேன் நெஞ்சினிற் பிரியா
வானவா! தானவர்க் கென்றும்
நஞ்சனே! வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசா ரணியத்துள் எந்தாய்

என்னும் பாடல் உட்பட அமைந்துள்ள ஒன்பது பாடல்களில் இறைவன் மட்டுமே உறுதியான - உண்மையான பாதுகாப்பு என்று அழுத்தமான நம்பிக்கை கொள்ளும் சரணாகதி தத்துவம் அமைந்துள்ளது.

குலந்தான் எத்தனையும் பிறந்தேயிறந் தெய்த்தொழிந்தேன்
நலந்தான் ஒன்றுமிலேன் நல்லதோரறஞ் செய்துமிலேன்
நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார்திரு வேங்கடவா
அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே

என்னும் பாடல் அமைந்துள்ள முதல்பத்து ஒன்பதாம் திருமொழியில்

இறைவனுடைய பாதுகாப்பினை வேண்டி நிற்பதையே நித்தியக் கடமையாகக் கொள்ளும் சரணாகதி தத்துவம் பொருந்தியுள்ளதைக் காணமுடிகிறது.

நான்காம் பத்தின் ஆறாம் திருமொழிப் பாடல்கள், 'தனது வாழ்க்கையை முழுமையாக இறைவனுக்கு அர்ப்பணிக்கும்' சரணாகதி தத்துவத்தைக் கொண்டு விளங்குகின்றன.

உருத்தெழு வாலி மார்பில்
ஒருகணை யுருவ வோட்டி
கருத்துடைத் தம்பிக் கின்பக்
கதிர்முடி யரச ளித்தாய்
பருத்தெழு பலவும் மாவும்
பழம் விழுந் தொழுகும் நாங்கைக்
கருத்தனே ! காவ ளந்தண்
பாடியாய் களைகண் நீயே

என்னும் பாடல் 'களைகண் நீயே' என்று அர்ப்பணிப்பதைக் காட்டுகிறது.

ஐந்தாம்பத்தின் எட்டாம் திருமொழி 'அனைத்தும் இறைவன் செயலேயன்றித் தன் செயல் எதுவுமே இல்லை' என முற்றிலுமாக நம்பியிருக்கும் தத்துவத்தைக் கொண்டுள்ளது.

மன்னு நான்மறை மாமுனி பெற்ற
மைந்த னைமதி யாதவெங் கூற்றந்
தன்னை யஞ்சியநின் சரணெனச் சரணாய்த்
தகவில் காலனை யுகமுனிந் தொழியா
பின்னை யென்றும்நின் திருவடி பிரியா
வண்ண மெண்ணிய பேரருள் எனக்கும்
அன்ன தாகுமென் றடியிணை யடைந்தேன்
அணிபொ ழில்திரு வரங்கத் தம்மானே

என்னும் பாடலில் பிறர்க்கு அருள்செய்யும் இறைவன் தமக்கும் அருள வேண்டும் என்று கூறுமுகத்தான் அனைத்தும் இறைவன் செயலே என்று முழுவதுமாக நம்பியிருக்கும் சரணாகதி தத்துவத்தைக் காணமுடிகிறது.

இறைவனுக்கு விருப்பமற்றவைகளைத் தாமும் விரும்பாமல் விலக்குதல் என்னும் சரணாகதித் தத்துவம் ஆறாம் பத்து இரண்டாம் திருமொழியில் பொருத்தமுற அமைந்துள்ளது.

இறைவனுடைய பாதுகாப்பினை வேண்டி நிற்பதையே நித்தியக் கடமையாகக் கொள்ளும் சரணாகதி தத்துவம் பொருந்தியுள்ளதைக் காணமுடிகிறது.

நான்காம் பத்தின் ஆறாம் திருமொழிப் பாடல்கள், 'தனது வாழ்க்கையை முழுமையாக இறைவனுக்கு அர்ப்பணிக்கும்' சரணாகதி தத்துவத்தைக் கொண்டு விளங்குகின்றன.

உருத்தெழு வாலி மார்பில்
ஒருகணை யுருவ வோட்டி
கருத்துடைத் தம்பிக் கின்பக்
கதிர்முடி யரச ளித்தாய்
பருத்தெழு பலவும் மாவும்
பழம் விழுந் தொழுகும் நாங்கைக்
கருத்தனே ! காவ ளந்தண்
பாடியாய் களைகண் நீயே

என்னும் பாடல் 'களைகண் நீயே' என்று அர்ப்பணிப்பதைக் காட்டுகிறது.

ஐந்தாம்பத்தின் எட்டாம் திருமொழி 'அனைத்தும் இறைவன் செயலேயன்றித் தன் செயல் எதுவுமே இல்லை' என முற்றிலுமாக நம்பியிருக்கும் தத்துவத்தைக் கொண்டுள்ளது.

மன்னு நான்மறை மாமுனி பெற்ற
மைந்த னைமதி யாதவெங் கூற்றந்
தன்னை யஞ்சியநின் சரணெனச் சரணாய்த்
தகவில் காலனை யுகமுனிந் தொழியா
பின்னை யென்றும்நின் திருவடி பிரியா
வண்ண மெண்ணிய பேரருள் எனக்கும்
அன்ன தாகுமென் றடியிணை யடைந்தேன்
அணிபொ ழில்திரு வரங்கத் தம்மானே

என்னும் பாடலில் பிறர்க்கு அருள்செய்யும் இறைவன் தமக்கும் அருள வேண்டும் என்று கூறுமுகத்தான் அனைத்தும் இறைவன் செயலே என்று முழுவதுமாக நம்பியிருக்கும் சரணாகதி தத்துவத்தைக் காணமுடிகிறது.

இறைவனுக்கு விருப்பமற்றவைகளைத் தாமும் விரும்பாமல் விலக்குதல் என்னும் சரணாகதித் தத்துவம் ஆறாம் பத்து இரண்டாம் திருமொழியில் பொருத்தமுற அமைந்துள்ளது.

'சந்தியாவந்தனம்' ஆகும். வேள்வி என்பது வேள்வி செய்தலையும், சடங்கு என்பது மந்திரம் ஓதலையும் குறிப்பதைக் காணலாம். அந்தணர் தம் பழக்க வழக்கங்களும் இங்குப் புலப்படுத்தப்பட்டுள்ளன. அந்தணர் சந்தியாவந்தனம் செய்யும் பழக்கத்தையும் செயல் முறையையும் காட்டுமுகமாக,

உருக்குறு நறுநெய் கொண் டாரழலில்
இருக்குறும் அந்தணர் சந்தியின் வாய்
பெருக்கமொ டமரர்கள் அமர நல்கும்
இருக்கினில் இன்னிசை யானவனே

என்று அமைந்துள்ள பாடலில் அட்டாங்க யோகத்தில் ஈடுபடுதல், விரதம் எடுத்தல், வேள்வி செய்தல், மந்திரம் ஓதல் ஆகிய கருமயோக நெறி இடம் பெறக் காண்கிறோம். நறுமண நெய்யை அழலில் ஊற்றி வழிபட்ட நெறியும் இருக்கு வேதத்தின் சிறப்பும் காட்டப்படுகிறது.

தூ யநான் மறையாளர் சோமுச் செய்ய

என்னும் அடியில் சோமயாகம் செய்யும் நெறி குறிப்பிடப்பட்டுள்ளது.

யோகத்தின் முதிர்ந்த நிலை எனப்படும் ஞானயோகம் இறைவனை இடையறாது சிந்தித்தலாகும். ஞானம் கைவரப் பெற்றவர்களே அடியார்கள் எனப்படுகின்றனர். இடையறாத சிந்தனையாகிய ஞானயோகத்தால் விளையும் அனுபவத்தை அன்பு வடிவமாக்குதல் பக்தியோகமாகும். இறைவனைச் சரணம் புகுவதே பிரபத்தி எனப்படும். சரணாகதி என்பதும் இதுவேயாகும். காமம், பகை, பயம் முதலிய உணர்ச்சிகளை அடக்கி சிந்தையை இறைவனிடம் திருப்புவது பிரபத்தி[30]. பெரிய திருமொழிப் பாடல்களில் இந்நெறி காணப்படுகிறது. ஆசாரியனின் பெருங்கருணைத் திறத்தில் தான் ஒடுங்கி அவனையே புகலாகக் கொண்டிருந்தல் ஆசாரிய அபிமானம் எனப்படும்.இறைவனை நாளும் வழிபடும் அடியவரை ஒருவர் பணிவது பற்றிக் கூறுவது அது. ஆசாரிய அபிமானம் என்னும் நெறி இரண்டாம் பத்தின் ஆறாம் திருமொழியிலுள்ள எட்டுப் பாடல்களில் காட்டப்படுகிறது.

கச்சிக் கிடந்தவனூர்
கடல்மல்லைத் தலசயனம்
நச்சித் தொழுவாரை
நச்சென்றன் நன்னெஞ்சே

என்பது அவற்றுள் ஒன்று.

வைணவ சமயக் கருத்துப்படி "வீடு" என்பது ஒரு தனி உலகமாகும். நம்மாழ்வார் 'நலம் அந்தமில்லதோர் நாடு' [31] என்று குறிப்பிடுகிறார். உடலை விட்டுப் பிரியும் ஆன்மா கதிரவன் மண்டலத்தைப் பிளந்து கொண்டு அவ்வழியே சென்று பரமபதத்தை அடையும் என்றும் அவ்விடத்தை விட்டு ஒருநாளும் திரும்பி வருவதில்லை என்றும் அதுவே வைகுந்தம் என்றும் திருமங்கையாழ்வார் கூறுகின்றார்.

தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா அமுதம் அங்குஎய்தி - அதனின்றும்
வாராது ஒழிவது ஒன்று உண்டே [32]

என்று சிறிய திருமடலிலும்

மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்
அன்னதோர் இல்லியின் ஊடுபோய் - வீடென்னும்
தொல்நெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள் [33]

என்று பெரிய திருமடலிலும் கூறுவதைக் காணுகின்றோம். "ஆன்மா வீட்டுலகம் செல்லும் நெறியை வைணவ சமயம் 'அர்ச்சிராதி மார்க்கம்' என்று குறிப்பிடும்" [34] என்று கூறுவர்.

வீட்டுலகம் செல்வதற்கான வழிப்படிகளுள் முதற்படி, 'விவேகம்' என்பதாகும். சீவான்மா தான் அடிமை என்பதையும் இறைவன் ஆண்டான் என்பதையும் இறைவனுடைய இன்பத்திற்காகவே தான் நிலை பெற்றிருப்பதையும் உணர்கின்றது. இதுவே விவேகம் என்பதாகும். சீவர்கள் தம் வாணாளை வீணாகக் கழித்தமைக்கு வருந்துதல் இரண்டாவது படியாகும். மூன்றாவது படி உலக வாழ்க்கையிலுள்ள ஆசையை அறுத்தலாகும். நான்காவது படி சீவர்கள் வினைப்பயனுக்கு அஞ்சுதலாகும். ஐந்தாவது படி வீடு பேற்றினை அருள்வதற்குக் காரணமான நெறிகளைக் கடைப்பிடித்தலாகும். ஆறாவது படி உடலினின்றும் ஆன்மா வெளியேறுவதை விளக்குவது. ஏழாவது படி சீவான்மா அர்ச்சிராதி மார்க்கத்தில் செல்லுவதை விளக்குவதாகும். எட்டாவது படி சீவர்கள் வைகுந்தத்தை அடைவதாக விளக்குவது. ஒன்பதாவது படி வைகுந்தத்தில் சீவர்கள் பெருமானைக் கண்ணாரக் கண்டு களித்து அனுபவித்து அந்த ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிக் கிடத்தலைக் கூறுவது. [35] திருமங்கையாழ்வார் இதுகாறும் உலக வாழ்க்கையில் உழன்றமையை நினைத்து வெறுத்துக் கழிந்த நிலைமைக்கு வருந்துவதாக,

பாவியேன் உணரா தெத்தனை பகலும்
பழுதுபோ யொழிந்தன நாள்கள்

என்றும்

மறந்தேன் உன்னை முன்னம் மறந்த
மதிஇல் மனத்தால்
இறந்தேன் எத்தனையும் அதனால்
இடும்பைக் குழியில்
இறந்தே எய்த்து ஒழிந்தேன்

என்றும் கூறியுள்ள பாடல்கள் சான்றாகின்றன. இவற்றின் வாயிலாக, சான்றோர் கருத்துப்படி வானேறும் வழிப்படிகளுள் இரண்டாவது படியை ஆழ்வார் விளக்கியிருப்பதை அறிகிறோம்.

நிலவுலகம் முடிவுறும் பிரளய காலத்திற்குப் பிறகு அழியாமல் நிற்பது பரம பதம் ஒன்றேயாகும். இந்த உண்மையை உணர்ந்தே சான்றோர்கள் இவ்வுலக இன்பத்தை வெறுத்தொதுக்குவர். அதன் மேலுள்ள ஆசையை அடியோடு களைவதற்கு முற்படுவர். சம்சார வாழ்க்கையில் வெறுப்புக்கொள்வர். திருமங்கை யாழ்வாரும் ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாக,

வேண்டேன் மனைவாழ்க்கையை
விண்ணகர் மேயவனே

என்று மனம் வெறுத்துக் கூறுவதைக் காணுமிடத்து ஆழ்வார் பரமபதத்தை அடைவதற்கு உதவும் மூன்றாவது படியை விளக்கியிருப்பதைக் காணமுடிகிறது.

மானேய் நோக்கியர் தம்வயிற்
றுக்குழி யிலுழைக்கும்
ஊனேய் ஆக்கை.......

என்று கருக்குழியில் வதிதலைத் துன்பமாகக் கருதும் ஆழ்வார்,

தேவா நின்னடைந் தேன்திரு
விண்ணகர் மேயவனே

என்று இறைவனுடைய திருவடிகளில் சரணாகதியை மேற்கொள்கிறார். இது வீடு பேற்றினை அருள்வதற்குக் காரணமான நெறியாகிய ஐந்தாவது படியை விளக்குவதாக அமைந்துள்ளது.

உலக வாழ்க்கையில் உழன்றமையை நினைத்து அதற்காக வருந்துவதும் உலக இன்பத்தை வெறுத்தொதுக்குவதும் உலகப் பற்றை அடியோடு களைவதற்காக அப்பற்றுக்கு ஆதாரமாக இருக்கும் தாய், தந்தை, தாரம், கிளை, மக்கள் மீது கொண்டுள்ள உறவை அடியோடு களைவதற்கு முற்படுவதும் இறைவனுடைய திருவடிகளில் சரணாகதியை மேற்கொள்வதுமாகிய செயல்கள் இறையருளைப் பெறுவதற்குரிய உபாயங்களாக அமைந்து வீடுபேற்றை அடைவதற்குச் செய்யும் செயல்களாக இருப்பதால் அவை வானேறும் வழிப்படிகளாகக் கருதப்படுகின்றன.

## உறவாயிருந்து காப்போன்:

திருமங்கையாழ்வார் நாராயணன் என்னும் திருநாமத்தின் உயர்வைக் கூறுமிடத்து நாராயணன் தனக்கு எல்லாவித உறவு முறையாயும், தன்னை ஆள்பவனாயும் தன்னுடைய வாழ்நாளாயும் இருக்கின்றான் என்னும் பொருள்பட,

எம்பிரான் எந்தை என்னுடைய சுற்றம்
எனக்கரசு என்னுடைய வாழ்நாள்

என்று கூறுவதால் இறைவனே ஆன்மாக்களுக்கு எல்லாவித உறவுமாய் இருக்கின்றான் என்பது புலனாகின்றது. இத்தகைய கருத்தையே நம்மாழ்வாரும்[36] கூறுகிறார்.

ஒவ்வொரு யுகத்தின் முடிவிலும் உலகம் முழுவதும் அழியும்பொழுது அதனை உண்டு தான் மட்டும் அழியாது ஆலிலையில் துயில் கொண்டிருப்பான் திருமால் என்பது வைணவரது நம்பிக்கை. உலகனைத்தையும் விழுங்கித் தன் வயிற்றில் அடக்கிப் பாதுகாக்கும் ஒப்பற்ற முழு முதலாக நிற்பவன் இறைவன் என்பது

அண்டமுமிவ் வலைகடலு
மவனிகளு மெல்லாம்
அமுதுசெய்த திருவயிற்றன்

ஞாலமுற்று முண்டுமிழ்ந்த
நாதனென்றும் ........

உலகுண் டவொரு வாதிரு மார்பா

என்பன போன்று இருபத்தேழு பாடல்களில் குறிப்பிடப்படுகின்றது. உலகனைத்தும் உண்ட வயிற்றினனாய்த் தான் மட்டும் தன்னந் தனியாய்ப்

பாலகனாய் ஆடிக்கொண்டிருக்கும் ஆலிலையில் படுத்துத் துயில்கொள்வான் என்னும் நம்பிக்கை,

பாலகனாய் ஆலிலையில் பள்ளியின்பம் ஏய்ந்தானை

வையமுண் டாலிலை மேவுமாயன்

எண்டிசை யுமெறி நீர்க்க டலும்
ஏழுல குமுட னேவிழுங்கி
மண்டியோ ராலிலைப் பள்ளி கொள்ளும்

என்பன போன்ற பதினான்கு பாடல்களில் வெளிப்படக்காணலாம்.

## பாஞ்சராத்திர வழிபாட்டு மரபு :

பாஞ்சராத்திர வழிபாட்டு மரபு பாஞ்சராத்திர இலக்கியங்களில் காணப்படுவதாகும். இவ்விலக்கியங்கள் விட்டுணுவின் ஒப்பற்ற தலைமைத் தன்மையைக் கூறுவதுடன் அவனுக்கு மட்டுமே பக்தி செலுத்த வேண்டும் என்று உறுதியுடன் கூறுகின்றன. ''பாஞ்சராத்திர வழிபாட்டு மரபின்படி இறைவனை வழிபடுவது மானசம், ஓமம், விக்கிரகாராதனம் என்று மூன்று விதமாக நடைபெறும்''[37] என்று கூறுவர். மானசம் என்பது மனதால் வேண்டியும் ஓமம் என்பது வேள்வி செய்து வேண்டியும் நடைபெறுவது. விக்கிரகாராதனம் என்பது ஆத்மார்த்தம் என்றும் பரமார்த்தம் என்றும் இருபிரிவினையுடையது. இவ்விரண்டும் முறையே வீட்டிலும் கோயில்களிலுமாக ஆண்டவனை வழிபடுவது.

திருமங்கையாழ்வார் தலங்கள் தோறும் சென்று திருக்கோயில்களில் அமர்ந்திருக்கும் அர்ச்சாவதாரப்பெருமானிடம் வேண்டிப் பாடி வழிபடுவது விக்கிரகாராதன வழிபாட்டு மரபின் பரமார்த்தப் பிரிவினைச் சார்ந்ததாக அமைந்துள்ளது.

மந்தாரம் நின்று மணமல்கும் நாங்கூர்
மணிமாடக் கோயில் வணங்கென் மனனே

மைவண்ணம் கருமுகில்போல் திகழ்வண்ண மரகதத்தின்
அவ்வண்ண வண்ணனையான் கண்டதுதென் னரங்கத்தே

திண்ணமா மதிள்கள் சூழ்ந்த
தென்திருப் பேரூர் வேலை
வண்ணனார் நாமம் நாளும்
வாய்மொழிந் துய்ந்த வாறே

என்னும் சில பாடல்கள் பாஞ்சராத்திர வழிபாட்டு மரபின்படி திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருமேனிகளை வழிபட்டமையை உணர்த்தி நிற்கின்றன.

வைணவ சமயத்திற்கு முன் பௌத்தம், சமணம் போன்ற சமயங்கள் போலிச் சமயமாகக் கருதப்படும்; அவற்றின் கொள்கைகள் பொய்யானவை என்னும் கருத்துக்களைக் குறிப்பிடுவதாக பெரிய திருமொழி அமைந்துள்ளது. பிற சமய வெறுப்பைப் புகலும் பாடல்களாக இரண்டாம் பத்தின் முதல் திருமொழியில் ஐந்து, ஆறு, ஏழு, நான்காம் திருமொழியில் எட்டு; ஆறாம் திருமொழியில் ஐந்து; ஐந்தாம் பத்தின் ஆறாம் திருமொழியில் எட்டு; ஒன்பதாம் பத்தின் ஏழாம் திருமொழியில் ஒன்பது; எட்டாம் திருமொழியில் ஒன்பது ஆகிய எட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. புலனடக்கத்திற்கு இறைவனை வழிபட்டு அவன் அருளைப் பெறுவதே சிறந்த வழி என்று கூறுவதாலும் இறைவனின் ஐந்து வகையான நிலைகளை விளக்குவதாலும் பாஞ்சராத்திரக் கொள்கைக்கேற்ப ஆழ்வாரின் பாடல்கள் விளங்குகின்றன.

திருமங்கையாழ்வாரின் பாடல்கள் பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமாநுசருக்கு வழிகாட்டியாய் அமைந்தன எனலாம். விசிட்டாத்துவைதம் எனப்படும் வைணவ மரபின் மெய்ப் பொருள் விளக்கங்களை முழுமையாக்கிய வரும் வைணவ வழிபாட்டு மரபைச் சிறந்த முறையில் பரப்பியவரும் இராமாநுசரேயாவார். ''விசிஷ்டாத்வைத சமயத்தை இராமாநுஜர் எங்கும் பரவச் செய்தவராதலால் இஃது 'இராமாநுஜ தரிசனம்' என்ற நாமத்தாலும் வழங்கப் பெறும்''[38] என்னும் கூற்று இதைத் தெளிவாக்கும். சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய மூன்று பொருள்களின் கூட்டமே உலகமாகும் என்று இராமநுசர் தெளிவிக்கும் மெய்ப்பொருள் உண்மை பெரியதிருமொழிப் பாடல்களில் திருமங்கையாழ்வாரால் குறிப்பிடப்பட்டுள்ள தத்துவத்தைப் பின்பற்றியதாக அமைந்துள்ளது எனலாம்.

## சான்றெண் விளக்கம்


1. இராமநாதபிள்ளை, பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ) — *பட்டினத்துப்பிள்ளையார் பாடல்கள், பொது . பா. 52*
2. திருநாவுக்கரசர் தேவாரம் — *திருநாகைக் காரோணம் பா. 1*
3. பெரியதிருமொழி — *1. 1: 5, 8; 1. 6: 3, 5; 1. 9: 1, 3, 7*
4. மே. நூ — *1. 6: 3, 4, 6, 7; 1. 9: 3, 5, 8; 6. 2; 2*

5. திருக்குறள் — *பா. 36*

6. திருவாசகம் — *திருச்சதகம் பா. 55*

7. தாயுமானவர் பாடல்கள் — *பாயப்புலி, பா. 1*

8. திருப்புகழ், திருச்செந்தூர் — *பா. 35*

9. நாலடியார் — *பா. 13.*

10. ந. சுப்புரெட்டியார் — *அறிவுக்கு விருந்து. ப. 61*

11. திருக்குறள் — *பா. 10*

12. திருத்தொண்டர் புராணம் — *காரைக்காலம்மையார் பா. 60*

13. திருவாசகம் — *நீத்தல் விண்ணப்பம். பா.3*

14. ந. சுப்புரெட்டியார் — முத்திநெறி, ப.136.

15. திருநாவுக்கரசர் — *தேவாரம், பா.316*
திருவாசகம் — *சிவபுராணம் 54 - 58*

16. ந. சுப்புரெட்டியார் — *திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும் ப.128*

17. பி. ஆர் நரசிம்மன் — *வைணவமரபும் மெய்ப்பொருளியலும் ப.52*

18. பெரியதிருமொழி — *5 . 5 : 9*

19. பரிபாடல், — *3 : 68*
திருஞானசம்பந்தர் தேவாரம் — *இலம்பையங்கோட்டூர் பா. 6*
சுந்தரர் தேவாரம் — *திருவெண்ணெய் நல்லூர் பா. 1*
திருவாசகம் — *திருச்சதகம் பா. 19*
திருமந்திரம் — *பா. 413.*
தாயுமானவர் பாடல் — *ஆனந்தமான பரம். பா.7*

20. திருவாசகம் — *போற்றித் திருவகவல் 137-141*

21. பெரியதிருமொழி — *6. 6 : 3*

22. நற்றிணை — *பா. 1*

23. பி. ஆர் நரசிம்மன் — *மு. நூ. ப. 55*

24. ஸ்ரீ லக்ஷ்மி நாராயணதாசன் — *திருவேங்கடமுடையானும் ஆழ்வார்களும், ப. 9*

25. திருவாய்மொழி 1. 1: 2, 6. 9 : 1
26. ந. சுப்புரெட்டியார் முத்திநெறி, ப. 87
27. திருமருகல் சிங்காரவேலனார் இந்துமதசாரம், ப. 4
28. பி. ஆர். நரசிம்மன் மு. நூ. ப. 113
29. ப. அருணாசலம், பக்தி இலக்கியம் ப. 145
30. மே. நூ. ப. 145
31. திருவாய் மொழி 2. 8 : 4
32. சிறிய திருமடல் 7, 8
33. பெரிய திருமடல் 16, 17
34. ஆர். இராமஸ்வாமி இராமாநுஜதாஸர் நாராயணனே பரம் பொருள் ப. 43
35. ந. சுப்புரெட்டியார் முத்திநெறி, ப. 136-140
36. திருவாய்மொழி 5 . 1 : 8
37. ந. சுப்புரெட்டியார் முத்திநெறி, ப. 390
38. ஆர். இராமஸ்வாமி இராமாநுஜதாஸர் ஸ்ரீ வைஷ்ணவம், ப.45


***

# 6. இறைவனின் ஐவகை நிலை

மும் மூர்த்திகளில் திருமாலைக் காத்தற் கடவுளாகக் கருதி வழிபட்டு வரும் வழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது. மக்களைக் காக்கும் பொறுப்புடைய மன்னரைக் காணுங்கால் திருமாலையே நேரிற் காண்பது போல் எண்ணி மகிழ்வர் குடிமக்கள் என்னும் செய்தி உயிர்களைக் காப்பதால் ஏற்படுகின்ற உள்ள நெகிழ்வைப் புலப்படுத்தப் போதுவதாகும். ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றனுள் காத்தலுக்கு என்றுமே தனிச்சிறப்பு உண்டு. அவ்வகையில் ஆதியும் அந்தமும் இல்லாத் தலைமைத் தன்மை வாய்ந்த பரம்பொருளாம் நாராயணன் காக்கின்ற மூர்த்தியாக ஐந்து நிலைகளில் நின்று உயிர்க்குலத்தை உய்விக்கிறான். அந்நிலைகளை பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அர்ச்சை என்பனவாக வைணவ மரபு குறிப்பிடுகிறது. [1]




இவ்வாறு காலத்திற்கும் இடத்திற்கும் மக்கள் மனநிலைக்கும் ஏற்றாற்போல் இறைவன் தன் வடிவங்களை மாற்றிக் கொள்வான் என்பது தெரிகிறது. இறைவனின் இந்த ஐவகை நிலைகளும் எத்தன்மையன என்பதைப் பலரும்

பல்வேறுவிதமாகக் கூறுவர். ''அடியார்கள், முனிவர்களின் அனுபவத்துக்குப் பரத்துவ நிலை என்றும் இந்திரன் முதலிய தேவர்களின் கூக்குரலைக் கேட்பதற்கு வியூகநிலை என்றும் அவ்வக் காலங்களில் வாழ்ந்திருப்பவர்களுக்காக விபவ நிலை என்றும் பிரகலாதன் போன்றவர்க்காக அந்தர்யாமி நிலை என்றும் நம் போல் -வார்க்காக அர்ச்சை நிலையாகிய விக்கிரகம் என்றும் கொள்ளலாம்''[2] என்பது அவற்றுள் ஒன்று. இவ்வைந்து நிலைகள் கடந்த வடிவ நிலை, வெளிப்பாட்டு வடிவ நிலை, தோன்றி வந்த வடிவ நிலை, உள்ளுறை வடிவ நிலை, படிம வடிவ நிலை எனவும் குறிப்பிடப்படும்.

***கடந்த வடிவம்:*** இறைவன் தூய்மையான ஒளியுடனான திருமேனியுடனும் அதற்குரிய படைக்கலங்கள், அணிகலன்களுடனும் அறிவு, ஆற்றல், கருணை, தலைமை, சீலம், எளிமை ஆகிய அறுவகைப் பண்புகளுடனும் அதே தூய்மையான ஒளிப்பொருளாலான வைகுந்தம், பரமபதம், திவ்ய விபூதி, மோட்ச உலகம் என்றெல்லாம் அழைக்கப்படும் உலகில் விளங்கும் நிலையே கடந்த வடிவ நிலை.

***வெளிப்பாட்டு வடிவம் :*** இறைவனின் வெளிப்பாடு உலகத் தொடர்பு பற்றியதாகும். வாசுதேவனிடத்திலிருந்து படைத்தல் தொழில் புரிய பிரத்தியும்னனும் அதிலிருந்து காத்தல் தொழில் புரிய அநிருத்தனும் அதிலிருந்து அழித்தல் தொழில் புரிய சங்கருடணனும் வெளிப்படும் நிலை.

***தோன்றி வந்த வடிவம்:*** இந்நிலையை அவதார நிலை எனவும் குறிப்பிடுவர். இறைவன் விண்ணுலகிலிருந்து கீழிறங்கி மண்ணுலகில் தோன்றி வடிவு கொள்ளும் நிலையே அவதாரம் அல்லது விபவம் எனப்படுகிறது. அவன் நிலவுலகில் தோன்றுவது பழவினைகளின் காரணத்தினாலன்று. தன் விருப்பத்தினாலேயாகும். இறைவனுடன் அவனுடைய அருளாகிய திருமகளும் அவனது படைக்கலங்களும் மணிமுடியும் ஊர்தியும் கூடவே வந்து தோன்றுகின்றன.

***உள்ளுறை வடிவம்:*** இறைவன் உலகிடத்தும் அதிலுள்ள உயிர்களிடத்தும் கலந்து இயங்கியும் இயக்கியும் இருக்கின்ற நிலையே உள்ளுறை வடிவம் எனப்படும்.

**படிம வடிவம் :** அனைவரும் எளிதில் வழிபடுவதற்குரிய வடிவம் இது. வழிபடும் அன்பருக்கு எளிதில் அருள் செய்வதன் பொருட்டுக் கோயில்களிலும் வீடுகளிலும் அவர்களின் விருப்பத்திற்கேற்ற வகையில் எழுந்தருளும்படிச் செய்துள்ள வடிவங்களில் இறைவன் தங்கியிருப்பது படிம வடிவ நிலையாகும். [3]

கடந்த வடிவ நிலையையும், உள்ளுறை வடிவ நிலையையும், பத்து தோன்றிவந்த வடிவநிலைகளையும், படிம வடிவங்களையும் விளக்கிக் காட்டும் பெரிய திருமொழிப் பாடல்கள் வெளிப்பாட்டு வடிவ நிலையாகிய வியூகநிலை பற்றிப் பொதுவாகக் கூறுகின்றனவேயன்றி, அவற்றின் நால்வகை வெளிப்பாட்டு வடிவ நிலைகளைப் பற்றியோ, பன்னிரு கிளை வடிவமாகப் பிரிவது பற்றியோ எவ்விடத்திலும் கூறவில்லை. 'நாராயணா' என்னும் பெயர் முதல் பத்தின் முதல் திருமொழியிலும் 'மாதவன்' என்னும் பெயர் மூன்றாம் பத்தின் ஏழாம் திருமொழி நான்கு, ஐந்து பாடல்களிலும் 'தாமோதரன்' என்னும் பெயர் பத்தாம் பத்தின் ஐந்தாம் திருமொழி மூன்றாம் பாடலிலும் இடம்பெறுகின்றது.

வெளிப்பாட்டு வடிவநிலை (வியூகம்)

| வாசுதேவன் | சங்கருடணன் | பிரத்தியும்னன் | அநிருத்தன் |
|---|---|---|---|
| கேசவன் நாராயணன் மாதவன் | கோவிந்தன் விஷ்ணு மதுசூதனன் | திரிவிக்கிரமன் வாமனன் ஸ்ரீதரன் | இருடீகேசன் பதுமநாபன் தாமோதரன் |

மேற்கூறிய பன்னிரு கிளை வெளிப்பாட்டு வடிவநிலை பற்றிய நேரடியான விளக்கம் பெரிய திருமொழியில் காணப்படவில்லை. ஆனால் அவற்றைப் புலப்படுத்தும் செய்திகள் இடம்பெறுகின்றன. இதையே 'பன்னிரு திருநாமப் பாட்டு' என்பதாகக் குறிப்பிடுகிறது திருவாய்மொழி.

இறைவனின் ஐந்து நிலைகளுக்கு நீரின் ஐந்து தன்மைகளை உவமையாகக் கூறுவர்.

**பரத்துவம் :** (வியாபகம்) எங்கும் நிறைந்திருந்து அருள் பாலித்தல். மழைநீர் போன்றது.

***வியூகம் :*** (அணிவகுத்தல்) அணிவகுத்து நின்று அருள் பாலித்தல், திருப்பாற் கடல் போன்றது.

***விபவம் :*** (மனித உருவில் காட்சியளித்தல்) உலகில் அவதாரமெடுத்து அருள் பாலித்தல். ஆற்றுநீர் போன்றது. ஓடிக்கொண்டேயிருத்தல்.

***அந்தரியாமித்துவம் :*** (அருவநிலை) மறைந்திருந்து அருள் பாலிக்கும் தன்மை. பூமிக்குள் மறைந்திருக்கும் நீரைப் போன்றது.

***அர்ச்சை :*** (சிலை உருவம்) கோயில்களில் கற்சிலைகளாக இருந்து அருள் பாலித்தல். அக்கோயில்களிலுள்ள குளத்து நீர் போன்றது[4]

என்பது அது.

### *பெரியதிருமொழியில் பரத்துவம் :*

ஆனந்தம் அளவிறந்து ஒப்பற்றதாயுள்ள பரமபதத்தில் அயர்வறும் அமரர்கள் என்று வழங்கப்பெறும் அனந்தன், கருடன், விஷ்வக்சேனர் முதலிய நித்திய சூரிகள் சூழ்ந்திருப்பர்; உலகத் தளையினின்றும் விடுபட்ட முத்தர் நிறைந் -திருப்பர்; பெரிய பிராட்டியும் பூமிப் பிராட்டியும் நீளாப்பிராட்டியும் தேவியராக அமர்ந்திருப்பர்; சுதரிசனம் என்ற திருவாழி, பாஞ்சசன்யம் என்ற திருச்சங்கு, சார்ங்கம் என்ற வில், நத்தகம் என்ற வாள், கௌமோதகி என்ற கதை ஆகிய ஐந்து ஆயுதங்களை உடையனாய் இறைவன் இருப்பான் என்று இறைவன் வீற்றிருக்கும் சிறப்பு பதினோரு பாடல்களில்[5] காட்டப்படுகிறது. இறைவனின் பரத்துவம் விளங்கும் இடம் விசும்பு, வானுலகம், அமரர் பெரு விசும்பு, திருநாடு என்று குறிப்பிடப்படுகிறது. ஆழியும் சங்கும் ஏந்தியவனாக இருக்கும் சிறப்பு.

நேமி யங்கை மாயன்
சங்கமி டத்தானைத் தழலாழி வலத்தானை
நெய்யா ராழியும் சங்கமு மேந்தும்

என்றாற் போன்று விளக்கப்பட்டுள்ளது.

### *வியூக நிலை:*

உலகில் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றை நடைபெறச் செய்வதற்காகவும் நிலவுலகத்திலுள்ளவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து வேண்டாதவற்றைப் போக்கி அருளுவதற்காகவும் வடிவெடுத்து பாற்கடலில் இருக்கும் நிலை, 'வியூக நிலை' எனப்படும். இவ்வியூக நிலை பத்தொன்பது பாடல்களில்[5] விளக்கப்படுகிறது.

உரந்தரு மெல்லணைப் பள்ளிகொண்டான்
ஒருகால்முன்னம் மாவுரு வாய்க்கடலுள்

தெண்திரை வருடப் பாற்கடல் துயின்ற

தெள்ளார் கடல்வாய் விடவாய
சினவாய் அரவில் துயிலமர்ந்து

என்னும் பாடல்கள் வியூக நிலையை விளக்கிக் காட்டுவனவற்றுள் சிலவாம். அரவணையில் துயில்வதும் பாற்கடலில் பள்ளி கொள்வதுமான வியூக நிலையில், உலகப் பாதுகாப்பில் சிந்தை செலுத்தி யோகத்தில் ஆழ்ந்து கிடப்பதும் கூறப்படுகிறது.

## விபவ நிலை:

இறைவன் மண்ணுலகில் வந்து தோன்றுவது 'விபவம்' எனப்படும். விபவம் என்பதற்கு அவதாரம் அல்லது இறங்கி வருதல் என்பது பொருள். உலகத்தை உய்விக்கும் பொருட்டு உயர்ந்த நிலையிலிருந்து இறங்கி வந்து அருள்புரிவது அவதாரம் எனப்படுகிறது. அறச்செயலைச் செய்தும் நாள்தோறும் இறைவனை வழிபட்டும் வருவோர் இறையருளைப் பெறாதபோது தாம் வாழ்வதில் பயனில்லை என்னும் முடிவுக்கு வரும்போது இறைவன் அவதாரம் செய்து அவருடைய துன்பத்தை நீக்குகின்றான் என்பதும் அவன் மண்ணுலகில் வந்து தோன்றுவதற்குக் காரணம் கொடியோரைத் தண்டிப்பதற்கே என்பதும் அறியக்கிடக்கிறது.

## நோக்கமும் வகையும்:

ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லாத இறைவன் பல திருநாமங்கள் பெற்றுப் பல்வேறு திருமேனிகளுடன் தோன்றி உலகத்தைக் காப்பதாகிய திருவவதார நோக்கத்தை கீதையில் கண்ணனே தெளிவாக எடுத்துக் கூறுகிறார் என்று குறிப்பிடுவர். எப்போதெல்லாம் அறத்திற்கு அழிவு நெருங்குகிறதோ அப்போதெல்லாம் அவதாரம் செய்வான் என்பது நம்பிக்கை. இதை கிருட்டிணனே அருச்சனனிடம் கூறியதாக கீதை குறிப்பிடும். திருமாலின் திருவவதாரங்கள் பத்து என்பதால் அவற்றை தசாவதாரம் என்பர். அவை மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனம், பரசுராமன், இராமன், பலராமன், கிருட்டிணன், கல்கி என்பனவாம். இவ் வரிசை முறைகள் பரிணாம வளர்ச்சி முறையில் அமைந்துள்ளனவென்பர்.[7]

புலன்கள் பொருந்த அறிவு உளதாம் நிலையை அடிப்படையாக வைத்து உயிரினங்களை

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே [8]

என்று ஓரறிவு முதல் ஆறறிவுடையனவாக வரிசைப்படுத்தும் தொல்காப்பியர் கடலில் வாழும் உயினங்களை

நந்தும் முரளும் ஈரறிவினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே[9]

என்று ஈரறிவுடையதாகக் குறிப்பிடுகிறார். அத்தகைய கடல் வாழ் உயிராகிய மீனிலிருந்து படிப்படியே வளர்ந்து பேரறிவுடைய கிருட்டிணாவதாரம் வரை திருமாலின் அவதாரங்கள் உள்ளன. இதை "உலகம் தோன்றிய காலத்திலிருந்து உயிரினங்கள் படிப்படியாகத் தான் பிறந்து வளர்ந்து வந்திருக்கின்றன என்னும் அறிவியல் உண்மையை இவ்வவதாரங்கள் மறைமுகமாக எடுத்துக் கூறும் ஏற்றத்தைக் கண்டு இறும்பூதெய்துகிறோம்"[10] என்று கூறுவர். உயிர்கள் படிப்படியே வளர்ந்த முறை

புல்லாகிப் பூடாய்ப் புழுவாகி மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்தி ளைத்தேன் [11]

என்று மாணிக்கவாசகரால் குறிப்பிடப்படுவதும் இங்கு எண்ணத்தக்கது. பத்து அவதாரங்களும் அவதாரங்களின் நோக்கமும் செயல்களும் பற்றிய செய்திகளும் பெரிய திருமொழியில் ஐநூற்று எண்பது பாடல்களில் இடம்பெறுகின்றன.

### கிருட்டிணாவதாரம் :

திருமாலின் அவதாரங்களுள் ஒன்பதாவது அவதாரமாக வைத்து எண்ணப் படுவது கிருட்டிணாவதாரம். துவாபரயுகத்தில் உலகில் மக்கள் தொகை பெருகியது. சூதும், வாதும் அதிகமாகியது. கம்சன், சிசுபாலன் முதலான கொடியவர்களும் அவர்கள் உறவினரும் பலருக்கும் தொல்லை கொடுத்து வந்தனர்.

அதனால் வருந்திய நிலமகள் பூபாரத்தைக் குறைக்குமாறு பிரமனிடம் சென்று முறையிட்டாள். பிரமனும் தேவர்களும் நிலமகளுடன் திருமாலிடம் சென்று முறையிட அவர்களுக்கு அருளுமுகத்தான் அவன் எடுத்து வந்த அவதாரமே கிருட்டிணாவதாரம். திருமாலின் அவதாரங்களுள் கிருட்டிணாவதாரமே பொலிவும், கற்பார்க்குச் சுவையும் உடையதாய், காதலும் வீரமும் கலந்ததாய் விளங்குகிறது. இவ்வவதாரத்தை, "மோட்சத்துக்கு உபாயமாகிய அமுதப் பெரு மழையை, உலகப் பற்றில் உழல்பவர்களின் தாபத்தைப் போக்கும் கார்மேகமாகப் பொழிந்த அவதாரம்"[12] என்று கூறுவர்.

திருமாலின் பத்து அவதாரங்களுள் கிருட்டிணவதாரத்தையே பெரிதும் பேசுகிறார் திருமங்கையாழ்வார். பிறந்த சில நாட்களிலேயே ஆரம்பித்த கிருட்டிணனுடைய வீரதீரச் செயல்கள் அவன் வளர்ந்து பெரியவனான நிலையிலும் தொடர்ந்து கொண்டேயிருந்தது. அதனால் அவ்வவதாரத்தில் ஆழ்வார் மிகுதியான ஈடுபாடு கொண்டார். அந்த ஈடுபாடு காரணமாக கிருட்டிணாவதாரச் சிறப்பையும் பெருமைகளையும் முந்நூற்று எழுபத்தொன்பது இடங்களில் பாடியுள்ளார். கிருட்டிணாவதாரத்தின் ஒவ்வொரு செயலும் ஓரிடத்தில் மட்டுமன்றிப் பல்வேறிடங்களில் பாடப்பெறுவதால் அவ்வவதாரச் செய்திகள் இடம் பெற்ற பாடல்கள் இருநூற்று எழுபத்து இரண்டாக அமைந்துள்ளமையைக் காண்கிறோம்.[13]

## எளிமைக் குணம் :

இறைவனின் எளிமைக் குணத்தை சௌலப்பிய குணம் என்று கூறுவர். யாவருக்கும் எளியவனாயிருக்கும் இருப்பே இக்குணமாகும். "கண்ணிற்குப்புலனா -காதிருக்கும் ஈசுவரன் தன் திவ்விய மங்கள விக்கிரகத்தை, சேதநன் தன் கண்களாலே கண்டு பற்றுதற்கேற்ப எளியனாயிருத்தலாகும் இத்திருக்குணம். இறைவன் தான் இருக்கும் பரமபதத்தை விட்டுச் சமுசாரிகளின் இடையில் வந்தவதரித்துத் தன்னை எளியனாக்குகின்றான். இந்நிலை சேதநன் எம் பெருமானை நேருக்கு நேரே கண்டு பற்றுமாறு செய்கின்றது. இங்ஙனம் செய்வன இராம கிருஷ்ணாதி அவதாரங்களும் அர்ச்சை வடிவ எம்பெருமான்களுமாகும்"[14] என்று கூறுவர் சான்றோர். பெரிய திருமொழியில் இறைவனின் எளிமைக் குணம் வெண்ணெய் திருடுதல், ஆயர்பாடியில் தீராத விளையாட்டுப் பிள்ளையாக வளர்தல், அருச்சுனனுக்குச் சாரதியாய் இருத்தல், பாண்டவருக்காக துரியோதனனிடம் தூது செல்லுதல் ஆயர்களுடன் குரவையாடுதல் ஆகிய செயல்களாக இடம்பெறுகிறது.

### சுவாமித்துவ குணம் :

எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாக இருப்பது சுவாமித்துவம் எனப்படும். ஆன்மாக்களின் உய்விற்காக அவற்றின் மாட்டு நீங்காத அருளோடு நின்று அவற்றை ஆட்கொள்ளுதல் இதன் சிறப்பாகும். இது "சேதநன் ஈசுவரனைக் கருதாமலும் நோக்காமலும் பாராமுகமாக இருக்கும் நிலையிலும் ஈசுவரன் இவனை விடாமல் நின்று இவனுடைய சொரூபத்தையே நோக்கிக் கொண்டு போவதற்குக் காரணமாயுள்ள ஒரு தொடர்பே சுவாமித்துவமாகும்"[15] என்பதால் உணரக் கிடக்கின்றது. அந்தணர் குழந்தையைப் பிழைக்கச் செய்தல், உருக்குமணிக்காகக் கற்பகமரம் கொண்டுவருதல், சயத்ரத வதத்தின் போது சூரியனை மறையச் செய்து மறுபடியும் தோன்றச் செய்தல், சாந்தீபினி முனிவரின் குழந்தையைக் காத்தல் ஆகிய செயல்களினால் சுவாமித்துவ குணம் புலப்படுத்தப்படுகிறது.

### சக்தியாகிய குணம்:

தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத இறைவன் ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் முதலிய மங்கள குணங்களையுடையவன் என்று குறிப்பிடுவர்.[16] "ஞானம் என்பது எல்லாவற்றையும் ஒரே காலத்தில் அறியக்கூடிய சர்வக்யத்துவம். சக்தி என்பது அகடிதகடனா சாமர்த்தியம் (வேறே யாராலும் செய்யக்கூடாத அரிய செயல்களை எளிதில் செய்து முடிக்கும் ஆற்றல்). பலமாவது, தாரண சாமர்த்தியம் (எல்லாவற்றையும் தரிக்கும் தன்மை) ஐசுவரியம் என்பது, உடையவன் என்பதற்கு ஏற்ற உரிமை. வீரியமாவது, உலகிற்கு முதற்காரணமாக இருக்கும் சொரூபத்திற்கு வேறுபாடில்லாதிருக்கும் மேன்மை. தேஜஸ் என்பது வேறு துணை வேண்டாமை"[17] என்று குணவேறுபாடுகள் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இறைவனிடம் இக்குணங்கள் ஆதல் அழிதலின்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். சிறு குழந்தையாய் இருக்கும் போதிலேயே கிருட்டிணன் பெற்றிருந்த சக்தியாகிய குணம் பூதனையை அழித்தல், மருத மரத்தைச் சாய்த்தல், சகடாசுரனைக் காலால் உதைத்து அழித்தல், கன்றினால் விளவெறிந்து அரக்கர்களைக் கொல்லுதல், தேனுகாசுரனை அழித்தல், காளிங்கனின் வலிமையை அடக்கி அதன் மீது நின்று ஆடுதல், கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து, ஆயர்களை மழையினின்று காத்தல், குருந்த மரம் ஒசித்தல், பகாசுரனை அழித்தல், பரிவாய் கீண்டல், வாணாசுரனைக் கொல்லுதல், பௌண்ட்ரகனின் செருக்கை அடக்கி அவனைக்கொல்லுதல் ஆகிய செயல்களில் காட்டப்பெறுகிறது. பெரியவனான நிலையில் நப்பின்னையைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு ஆனேறு அடர்த்தல், மல்லரை

அழித்தல், கம்சனின் பட்டத்து யானையாகிய குவலயாபீடத்தைக் கொல்லுதல், கம்சனை அழித்தல் ஆகியவற்றால் புலப்படுத்தப்படுகிறது.

## வெண்ணெய் திருடுதல் :

ஆயர்குலச் சிறுவனாக வளர்ந்தபோது வீடுகளில் வைத்திருந்த வெண்ணெயைத் திருடி உண்டசெயல் பிற செயல்களையெல்லாம்விட அதிகமாக நாற்பத்தாறு இடங்களில் பேசப்படுகிறது. புதிதாகக்கடைந்தெடுத்த வெண்ணெய் 'நவநீதம்' எனப்படும். அதில் கிருட்டிணனுக்கு விருப்பம் அதிகமாகையால் 'நவநீத கிருட்டிணன்' என்னும் பெயர் ஏற்பட்டது. ஆயர்பாடி வீடுகளிலெல்லாம் வெண்ணெய் திருடி, அதனைத் தான் மட்டும் உண்ணாது ஊர்க்குழந்தைகளும் உண்பதற்காகக் கொடுத்து மகிழ்ந்த கிருட்டிணனின் சௌலப்பிய குணம் ஆழ்வாரின் மனத்தைப் பெரிதும் ஈர்த்துவிட வெண்ணெய் திருடியுண்ட அவனது செயலை மிகுதியாகப் பேசுகிறார். படலைக் கதவாக வைத்து அடைத்த சிறிய குடில்களிலும் நுழைந்து வெண்ணெய் திருடி உண்டவன் என்பது,

படலடைத்த சிறுகுரம்பை நுழைந்து புக்குப்
பசுவெண்ணெய் பதமாரப் பண்ணை முற்றும்

என்னும் அடிகளால் புலப்படுத்தப்படுகிறது. இங்கு ஆயர்குடியிருப்பின் எளிய நிலை பேசப்படுவதோடு அவர்களோடு உறவாடி மகிழ்ந்த கிருட்டிணனின் எளிமைக்குணம் விளக்கப்படுகிறது. வெண்ணெய் திருடுவதும் திருடியதை உண்டு மகிழ்ந்து விரைவில் உறங்கி விடுவதுமான செயல்

மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரலிடை யாப்புண்டு
எத்திறம் உரலினோ டிணைந்திருந் தேங்கிய எளிவே [18]

என்று நம்மாழ்வாராலும்

திண்ணக் கலத்தில் திரையுறி மேல்வைத்த
வெண்ணெய் விழுங்கி விரைய உறங்கிடும் [19]

என்று பெரியாழ்வாராலும் பாடப்படுகின்றமை இங்கு எண்ணுதற்குரியது.

## அன்பர்க்கு ஆட்படுதல் :

வெண்ணெய் திருடி அதை உண்டவனின் குறும்புத் தனத்தைப் பொறுக் -கவியலாத யசோதை அவனைச் சிறிய தாம்பினால் சேர்த்துக் கட்டி உரலுடன் பிணைத்து விடும் செயல் இருபத்து இரண்டு இடங்களில் சுட்டப்படுகிறது.

தாம்புக் கயிற்றினால் கட்டப்படுவதால் 'தாமோதரன்' என்ற பெயரைப் பெற்றான். வெண்ணெய், தயிர் ஆகியவற்றை அளவுக்கு அதிகமாக உண்பதால் அவன் வயிற்றுக்கு ஏதாவது தீங்கு ஏற்பட்டுவிடுமோ என்று அஞ்சிய யசோதை கோபம் கொண்டு மத்தினால் புடைப்பது போல் பயமுறுத்த, நுண்சிறுத் தாம்பினால் அடிபடுவதற்கு இசைந்தது போல் காட்டி தன்னுடைய சௌலப்பியம், சௌசீல்யம் முதலிய குணங்களை வெளிப்படுத்துகிறான். ''சௌசீல்யம் என்பது, உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலக்கும்போது தன் உயர்வும் கலக்கப்படுபவனுடைய தாழ்வும் நெஞ்சில் சிறிதேனும் தோன்றாமல் புரையறக் கலக்கும் பண்பு. சௌலப்பியம் என்பது, யாவரும் தன்னைப் பற்றும்படி எளியனாயிருக்கும் இருப்பு''[20] என்பதாக விளக்கப்படுகிறது. யசோதை கிருட்டிணனின் குறும்புத் தனத்தைப் போக்குதற்குத் தாம்பினால் அடிப்பதுபோல் பயமுறுத்தியபோது இறைவனாகிய தன் உயர்வும் அன்பர்களின் தாழ்வும் நெஞ்சில் சிறிதேனும் தோன்றாமல் புரையறக் கலக்கும் பண்பினாலும் யாவரும் பற்றும்படி எளியவனாயிருக்கும் இயல்பினாலும் அடிபடுவதற்கு இசைவது போல் காட்டுகிறான். அடிக்கடி வெண்ணெய் திருடி உண்ணும்போது ஆய்ச்சியரிடம் குச்சியால் அடிவாங்கும் நிகழ்ச்சி

................ இன்றரீய்ச் சியரால்
அளைவெண்ணெ யுண்டாப் புண்டிருந் தவனே

என்னும் தொடரைப் போன்று எட்டுப் பாடல்களில் குறிப்பிடப்படுவதன்மூலம் இறைவனுடைய எளிமை, அருள், பரிவு ஆகிய குணங்கள் வெளிப்படுத்தப்படு கின்றன. குழந்தை கிருட்டிணன் வெண்ணெய் திருடி உண்ணும் நேரத்தில் அவனை வெருட்டுவதன் பொருட்டுக் கோலும் கையுமாக யசோதை வருமிடத்து, தான் வெண்ணெய் உண்ணாதது போல் காட்டிக் கொள்வதற்காக வாயைத் துடைத்துக் கொள்ளுகிறான். இத்தகைய சிறு பிள்ளைச் செயலை ஆழ்வார்,

தாயெடுத்த சிறுகோலுக் குளைந்தோடித் தயிருண்ட
வாய்துடைத்த மைந்தனுக்கு .....

என்னும் பாடலில் காட்டுகிறார்.

ஆயர்பாடியில் விளையாட்டுப் பிள்ளையாகத் திரிந்தமையும் குரவைக் கூத்து ஆடியதுமாகிய சௌலப்பிய குணம் முறையே இருபத்து நான்கு பாடல்களிலும் மூன்று பாடல்களிலும் பாராட்டப்பட்டுள்ளது. பத்தாம் பத்து ஏழாம் திருமொழியிலுள்ள

சந்த மலர்க்குழ லாள்தனி யேவிளை
யாடு மிடம்கு றுகி

பந்து பறித்துத் துகில்பற் றிக்கீறிப்
படிறன் படிறு செய்யும்

என்னும் பாடலில் இடம்பெற்றுள்ள 'படிறன்' என்னும் சொல் கிருட்டிணனின் குறும்புச் செயலைச் குறிப்பதாக உள்ளது. ஆயர்குலப் பெண்டிரின் துகிலைப் பற்றுதலும் சிற்றில் சிதைத்தலுமாகிய செயல் மூன்றாம் பத்து எட்டாம் திருமொழி எட்டாவது பாடலிலும் பத்தாம் பத்து ஏழாம் திருமொழியிலுள்ள ஐந்தாவது பாடலிலும் விளக்கப்படுகிறது.

## பாண்டவர்க்கு உதவியமை :

பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் பாரதப் போர் மூண்டபோது பாண்டவர்க்காக துரியோதனனிடம் தூது சென்றமை பன்னிரண்டு பாடல்களிலும் போரில் பாண்டவர்க்குத் துணையாக நின்றமை பதினான்கு பாடல்களிலும் பார்த்தனுக்குத் தேரோட்டும் சாரதியாய் அமர்ந்தமை பதினேழு பாடல்களிலும் விளக்கப்படுகின்றன.

பாரேறு பெரும்பாரந் தீரப் பண்டு
பாரதத்துத் தூ தியங்கி, பார்த்தன் செல்வத்
தேரேறு சாரதியா யெதிர்ந்தார் சேனை
செருக்களத்துத் திறலழியச் செற்றான்

என்பது போன்ற பாடல்கள் கிருட்டிணனின் பரிவுத் தன்மையைக் காட்டுவனவாய் உள்ளன. இதுபோன்றே பெரியாழ்வார் திருமொழியும், திருவாய்மொழியும் பாண்டவர்க்கு கிருட்டிணன் உதவிய தன்மையைப் புலப்படுத்துகின்றன. [21]

பாண்டவர்க்குத் தேவருலகத்தவனாக நின்று துணை செய்யாது அனைவரும் காணும் வண்ணம் பார்த்தசாரதியாய் நின்று துணை செய்த சௌலப்பிய குணத்தை

கறையார் நெடுவேல் மறமன்னர்
வீய விசயன் தேர்கடவி

என்பது போன்ற பாடல்கள் புலப்படுத்துகின்றன. பாண்டவருக்கு மிகவும் அன்பினனாகி துரியோதனனாதியரைப் பரிவாரங்களுடன் போரில் அழித்து, அதனால் குறைகளெல்லாம் கழித்து நிறை நிலைத்திருக்கச் செய்தவன் என்னும் கருத்து ,

வென்றிகொள் வாளமரில்
பாங்காகமுன் ஐவரொ டன்பளவிப்
பதிற்றைந் திரட் டிப்படை வேந்தர்பட
நீங்காச்செரு வில்நிறை காத்தவனுக்
கிடம்மாமலை யாவது நீர்மலையே

என்னும் பாடலால் விளக்கப்படுகிறது.

## வலிமைத் தன்மை:

பிறந்த சில நாட்களிலேயே பெண்வடிவில் பாலூட்ட வந்த அரக்கியாகிய பூதனையைக் கொன்றமை நாற்பத்தைந்து பாடல்களில் குறிப்பிடப்படுகிறது. அவளுடைய கொடூரத் தன்மை விளக்கப்படு முகத்தான் பேய்ச்சி, பேய், பேய்த்தாய், வஞ்சப்பேய், பகுவாய்க்கழுது, வன்பேய், வலவைப்பெண் என்பனவாகிய சொற்கள் இடம் பெறுகின்றன. கிருட்டிணனின் சக்தியாகிய குணத்தை விளக்கும் செயல்கள் பலவாக இருப்பினும் முலை கொடுத்துக் கொல்ல வந்த பேய்ச்சிக்குத் தப்பிப் பிழைத்தது மிகவும் அருமையாதலால் அவளைக் கொன்ற வீரச்செயலில் ஆழ்வார் அதிகமாக ஈடுபாடு தொண்டவர் என்பது தெரிகிறது. நல்லதும் இனிமையானதுமான பொருள்களில் மிக்க விருப்பம் கொண்டு அமைதியாகத் திருடி உண்பது போலவே, தீய சக்தியை ஒழிப்பதிலும் நிதானத்தையும் அமைதியையும் கடைப்பிடிப்பவன், அமைதியாகப் பாலருந்துவது போல் பாவனை செய்து நிதானமாகப் பூதனையின் உயிரைப் பறிப்பதையும் பாலருந்தும் பருவத்திலேயே கொடுமைத் தன்மையை வேரோடு அறுப்பதையும் அதன் வழியாக அதருமத்தை அழித்தொழிப்பதையும் காணமுடிகிறது. பூதனையைக் கொன்ற இச்செயலை

மாய்த்தல் எண்ணி வாய்முலை
தந்த மாயப் பேயுயிர்
மாய்த்த ஆய மாயனே [27]

என்று நம்மாழ்வாரும் பாராட்டிப் பேசுகின்றமை எண்ணத்தக்கது.

பிறந்தவுடனேயே குழந்தைக்குத் தன் தாயை மட்டும் மிக நன்றாக அறிந்து கொள்ள முடியும். 'தாயை வாசத்தால் அறியும் பிள்ளை' என்பது யாவரும் அறிந்ததே. தாயல்லாது பிற பெண்ணொருத்தி எடுத்துப் பாலூட்ட நினைக்கும் போது அவளிடம் முலையுண்ணும் குழந்தை தெய்வக் குழந்தையானதால் தன் தாயல்லள் என்பது நன்கு தெரிந்தும் கொடிய தன்மையுடைய அவளை ஏய்க்க வேண்டும் என்னும் எண்ணம் ஏற்படுகிறது. அதனால் அவள் மகிழும் வண்ணம்

முதலில் அவளிடம் சென்று மடியில் அமர்த்திய வரை அழாமல் அவள் மகிழும்படிச் செய்து பாலருந்துவது போல் மெள்ள மெள்ள அவள் உயிரைப் பறிக்கும் கிருட்டிணனின் செயல் ஆழ்வாரைக் கவர்ந்துள்ளது எனலாம். மானிடப் பெண்ணுரு எடுத்து வந்த அரக்கியின் மடியில் நல்ல மகன் போல் அமர்ந்து அவளது முலையை உண்டு அவள் உயிரையும் முடித்த கிருட்டிணக் குழந்தையைக் கண்ட தாய் யசோதை 'இனிமேல் இக்குழந்தையை மடியில் எடுத்துக்கொள்ளக்கூடாது; முலையுண்ணும் பாவனையில் உயிரை முடிக்கும் குழந்தை இது; இதன் இயல்புக்கு அஞ்ச வேண்டியுள்ளது' என்று கூறுமளவிற்குரிய வலிமை கிருட்டிணனிடம் இருந்தது.

### அசுரர்களை அழித்தல்:

கம்சனால் ஏவப்பட்ட திருணாவர்த்தன் என்ற அசுரன் சகடத்தில் ஒளிந்து கொள்ள அதையறிந்த கிருட்டிணன் அச்சகடாசுரனைக் காலால் உதைத்து அழித்த செயல் பதினொரு பாடல்களில் காட்டப்படுகிறது.

கள்ளக் குழவியாய் காலால் சகடத்தை
தள்ளி யுதைத்திட்டு

என்னும் பகுதி வஞ்சகர்களைத் தந்திரமாக அழிக்கும் செயலை விளக்குகிறது. சகடம் உதைத்த செயலை

கஞ்சன் புணர்ப்பினில் வந்த
கடிய சகட முதைத்து [23]

என்று பெரியாழ்வார் பாடியுள்ளதும் நோக்குதற்குரியது. மருத மரங்களில் குடி புகுந்திருந்த அசுரர்களை அழிக்கவும் சாபத்தால் அம்மரங்களாக நிற்கும் குபேரனின் மைந்தர்களைச் சாபத்தினின்றும் நீக்கவும் எண்ணம் கொண்டு செய்த செயல் காரணமாக 'மருதிற நடந்தான்' என்னும் தொடர் ஆளப்பட்டுள்ளது.அம் மரத்தைச் சாய்த்தமை பதினான்கு இடங்களில் சுட்டப்படுகிறது.

வாட மருதிடை போகி
மல்லரைக் கொன்றொக்க லித்திட்டு

என்று அது குறித்துப் பாடுமிடத்து அசுரர்கள் குடி புகுந்திருத்தலின் அம்மருத மரங்கள் பரத்துவத் தன்மையனான கிருட்டிணன் அருகில் வர வர, வாட்ட மடைந்தன என்பதைக் குறிப்பாகக் காட்டுவதற்காக 'வாட' என்னும் சொல் கையாளப்பட்டுள்ளது. எல்லாம்வல்ல பரம்பொருளாகவும் அந்தரியாமியாகவும் இருக்கும் அவன், வத்சாசுரன் என்பான் கன்று வடிவம் கொண்டிருந்ததையும்

கபித்தாசுரன் என்பான் விளா மரத்தில் ஒளிந்து கொண்டிருந்ததையும் அறிந்து அக்கன்றினாலேயே விளா மரத்தைச் சாய்த்த செயல் ஒன்பது பாடல்களில் விளக்கப்படுகிறது. கொல்லும் நோக்கில் கொக்கு வடிவத்தில் காத்திருந்த பகாசுரன் என்பானின் அலகுகளைப் பிடித்து விளையாடும் பாவனையில் அவன் வாயைக் கிழித்துக்கொன்ற செயல் எட்டுப் பாடல்களிலும் குருந்த மரமாகி நின்று கொல்ல நினைத்த அசுரனைக் கைகளால் முறித்த செயல் ஆறு பாடல்களிலும் வாணாசுரனை அழித்த செயல் நான்கு பாடல்களிலும் சுட்டப்படுகிறது. கழுதை வடிவம் கொண்டு வந்த தேனுகாசுரனைக் கொன்று அழித்த செயல் மூன்றாம் பத்து பத்தாம் திருமொழியிலுள்ள ஏழாவது பாடலிலும் ஒன்பதாம் பத்து எட்டாம் திருமொழியிலுள்ள ஏழாவது பாடலிலும் இடம் பெறுகிறது. குதிரை வடிவில் வந்த அசுரனின் வாயைக் கிழித்த செயல் இரண்டாம் பத்து பத்தாம் திருமொழி ஏழாவது பாடல், ஏழாம் பத்து மூன்றாம் திருமொழி ஐந்தாவது பாடல், பத்தாம் பத்து பத்தாம் திருமொழி மூன்றாவது பாடல் ஆகியவற்றில் விளக்கப்படுமுகத்தான் இறைவனின் வல்லமை சுட்டப்படுகிறது. மேலும் பௌண்ட்ரகனின் செருக்கை அடக்கி அவனைக் கொன்றமை இரண்டாம் பத்து நான்காம் திருமொழி ஏழாவது பாடலிலும் இரண்டாம் பத்து பத்தாம் திருமொழி நான்காவது பாடலிலும் உணர்த்தப்படுகிறது.

### காளிங்க நர்த்தனன்:

ஆயர்குலச் சிறுவர் மாடுகளை மேய்த்துச் செல்லும் பகுதியில் மடு ஒன்று இருந்தது. அந்த மடுவில் காளியன் எனப்படும் ஐந்து தலை நாகம் தன்னிடமுள்ள நஞ்சைக் கக்கி நீரையெல்லாம் நஞ்சாக்கிக் கொண்டிருந்தது. அதனால் அஞ்சிய ஆயர் குலத்தவரின் அச்சத்தைத் தன் சக்தியால் போக்கும் எண்ணத்துடன் கரையிலுள்ள கடம்ப மரத்தில் ஏறி மடுவில் குதித்து, காளியனின் தலையைப் பற்றி அதன் வலிமை அடங்குமாறு தலைமேல் ஏறிக் குதித்தான். குதித்த அக்காட்சி நடனமாடுவது போல இருந்ததால் 'காளிங்க நர்த்தனன்' என்ற பெயரைப் பெற்றான். நர்த்தனம் கண்டு நாககன்னியர் கதி கலங்கி மாங்கல்யப் பிச்சை தருமாறு அவனை வேண்டி நிற்க அவனும் காளியனைக் கொல்லாது கடலில் சென்று வாழுமாறு பணித்தான். இவ்வாறு அரவின் மீது நின்று ஆடிய செயல் பதினொரு பாடல்களில் விளக்கப்படுகிறது.

### குடக்கூத்தும் தகனமும்:

கிருட்டிணன் ஆடிய ஆடல்களுள் ஒன்று குடக்கூத்து. '' தலைமேல் வரிசையாகக் குடங்களை வைத்தும் தோள்களிலும் கைத்தலங்களிலும் கூடவே

குடங்கள் வைத்தும் ஒன்று கூடக் கீழே விழாவண்ணம் உடலை அசைத்து அழகுடன் ஆடுவது குடக்கூத்து எனப்படும்''[24] என்று அது பற்றிக் குறிப்பிடுவர். கிருட்டிணன் குடக்கூத்து ஆடிய செய்தி

ஆய்த்தாயர் தயிர்வெண்ணெ யமர்ந்த கோவை
அந்தணர்தம் அமுதத்தைக் குரவைமுன்னே
கோத்தானை குடமாடு கூத்தன் றன்னை

என்பது போன்று நான்கு பாடல்களில் குறிப்பிடப்படுகிறது. ''குடக்கூத்து என்பது பதினோராடலுள் ஒன்று. அஃது அநிருத்தனை வாணன் சிறை வைத்தபொழுது அவ்வாணனுடைய கோநகரவீதியில் சென்று கண்ணன் பஞ்சலோகங்களாலும் மண்ணாலும் செய்த குடங்கொண்டாடிய கூத்து''[25] என்னும் விளக்கத்தால் அநிருத்தனைச் சிறைமீட்பதன் பொருட்டுச் சென்றபோது கிருட்டிணன் ஆடிய ஆட்டம் என்பது அறியக் கிடக்கிறது. ஆனால் பெரிய திருமொழியில் வாணாசுரனை அழித்த செய்தியைக் குறிக்கும் பாடல்கள் கிருட்டிணன் குடக்கூத்து ஆடிய செய்தியைக் குறிப்பிடவில்லை. குடக்கூத்து ஆடியமையைக் குறிப்பிடும் பாடல்களும் வாணாசுரனை அழித்த செய்தியைச் சுட்டவில்லை.

அக்கினி தேவனின் பசியைத் தணித்தற்பொருட்டு காண்டவ வனத்தை அழித்ததாகக் கூறப்படும் செய்தி,

காண்டாவன மென்பதோர் காடமரர்க்
கரையனது கண்டவன் நிற்க முனே
மூண்டாரழ லுண்ணமு னிந்ததுவும்

கட்டேறு நீள்சோலைக் காண்டவத்தைத் தீமூட்டி
விட்டானை மெய்யம் அமர்ந்த பெருமானை

என்னும் பாடல்களில் விளக்கப்படுகிறது.

## கம்சனை அழித்தல்:

கம்சனின் குவலயா பீடம் என்னும் பட்டத்து யானையை அழித்தது பற்றிய செய்தி முப்பத்து மூன்று இடங்களிலும் மல்லர்களைக் கொன்றமை பற்றியது பதினான்கு இடங்களிலும் கம்சனை வதம் செய்தது பதின்மூன்று இடங்களிலும் பேசப்பெறுகின்றன. மல்லர்களுடன் எதிர்த்து நின்று அவர்களை அழித்தவன் என்று கூறுமிடத்து,

மல்லா! மல்லம ருள்மல்
லர்மாள மல்லடர்த்த
மல்லா மல்லலம் சீர்மதிள்
நீரிலங் கையழித்த வில்லா

என்று மற்போருக்குரிய தன்மைக்கேற்ப, ஒருவரையொருவர் திரும்பத் திரும்பக் குத்திக்கொள்வது போன்று ஒரே சொல்லே பன்முறை கையாளப்பட்டு அப்போரின் வேகத்தையும் கிருட்டிணனின் வலிமையையும் உணர்ந்து கொள்ளுமாறு பாடல் உள்ளது.

## *மலையைக் குடையாகப் பிடித்தல்:*

இந்திரனுக்கு ஆண்டு தோறும் பெரிய விழா ஒன்று கொண்டாடுவது பிருந்தாவனத்தில் வசித்து வந்தவர்களின் வழக்கமாய் இருந்து வந்தது. அதைக் கண்ணுற்ற கிருட்டிணன் இந்திரனை வணங்குவதை விட பரம்பொருளை வணங்குவதே மேலானது என்று கூறினான்.

> "இந்திரனுக்கு சதகிருது என்று பெயர். அதாவது நூறு யாகம் செய்து அவன் அப்பதவிக்கு வந்தவன். இந்திரபதவி பெரியதே. ஆனால் அது பரிபூரண நிலைக்கு ஒப்பாகாது. வழிபாடு செய்கின்றவர்கள் பரம்பொருளைப் போற்றலாம். அல்லது பரிபூரணமுணர்ந்த நிறை ஞானிகளைப் போற்றலாம்."[26]

> "இந்திரன் போன்று இடைநிலையில் இருக்கும் சித்தர்கள் முழுப் பக்குவம் அடையா -தவர்கள். அன்னவர்களை ஆராதிப்பது தலையாய வழிபாடு ஆகாது. ஆதலால் இந்த விழாவை இந்திரனுக்கு உரியது ஆக்குவதை விட அனைத்துக்கும் ஆதி மூலமாகிய பெரிய பொருளாகிய இறைவனுக்கே உரியது ஆக்குவது மிக நன்று"[27]

என வரும் பகுதிகள் இதைத் தெளிவாக்கும். அது கேட்ட பிருந்தாவனத்தினரும் பரம்பொருளாகிய கடவுளே கோவர்த்தன மலையாக வடிவெடுத்துள்ளார் என்று கருதி அம்மலைக்கு விழா நடத்தினர்.

ஆயர்பாடியிலுள்ளோர் கோவர்த்தன கிரிக்கு விழா நடத்தியதால் கோபம் கொண்ட இந்திரன் ஆயர்களைத் தண்டிக்க நினைத்து அதிகமாக மழையையும் மின்னலையும் ஏற்படுத்தினான். இது இந்திரனுடைய இறுமாப்பு காரணமாக வந்தது என்பதை அறிந்த கிருட்டிணன் அம்மலையை ஒரு கையில் தூக்கிப் பிடித்துக் கொள்ள அது ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் குடையாயிற்று. ஏழு நாட்கள் தொடர்ந்து இச்செயல் நடைபெற்றது. தன்னிலும் சக்தியுடையவனாக விளங்குபவன் கண்ணன் என்பதை அறிந்து கொண்ட இந்திரன் மழையை நிறுத்தி

அவனை வணங்கினான். எனவே பெயர்த்து எடுத்த மலையை கிருட்டிணன் இருந்தபடி வைத்து விட்டான். அவனுடைய இச்செயல் ஆணவம் கொண்டவரை அடக்கி அவர்கள் தவறை உணர்த்தி நிற்கும் இறைவனின் வலிமையையும் எளிமைக் குணத்தையும் ஒருசேரப் புலப்படுத்துகின்றது. பெரிய திருமொழியில் இச்செய்தி முப்பத்திரண்டு பாடல்களில் வெளிப்படுத்தப்படுகிறது. மலையைக் குறிப்பதற்குக் குன்றம், கல், குன்று, வரை, விலங்கல் என்னும் சொற்கள் பயன் படுத்தப்பட்டுள்ளன. மாமழை, கடுங்கால் மாரி, குளிர் மாரி ஆகிய சொற்கள் மழையைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. காற்றுடன் கூடிய மழை கல் போன்று பொழிய உயர்ந்த மலையைக் குடையாகப் பிடித்த செயல்

கடுங்கால் மாரி கல்லே பொழிய
அல்லே யெமக்கென்று
படுங்கால், நீயே சரணென் றாயர்
அஞ்ச அஞ்சாமுன்,
நெடுங்கால் குன்றம் குடையொன் றேந்தி
நிரையைச் சிரமத்தால்
நடுங்கா வண்ணம் காத்தான் நாமம்
நமோநா ராயணமே.

என்று விளக்கப்படுகிறது. சரணாகதியாய் தம்மை அடைந்தோரின் துன்பம் துடைதது்க் காக்கும் அருட பண்புடையோன் கண்ணன் என்பது இதனால் அறியப்படும். இறைவனின் இச்செயல் நம்மாழ்வாராலும் போற்றப்பட்டுள்ளது.

## சுவாமித்துவ குணம்:

பக்தியுடன் பணிந்து நிற்போருக்கு அருள் செய்த பண்பு சாந்திபினி முனிவர் குழந்தையைத் திரும்பப் பெறச் செய்தலாலும் அந்தணர் மக்களைக காப்பாற்றியமையாலும் சத்தியபாமைக்காக இந்திரலோகத்திலிருந்து பாரிசாத மரத்தைக் கொணர்ந்தமையாலும் பாரதப் போரில் சயத்ரதவதத்தின் போது சூரியனை மறையச் செய்து மீண்டும் தோன்றச் செய்தமையாலும் வெளிப்படுகிறது. அன்றியும் தந்தை தளை கழலச் செய்த செளலப்பிய குணமும் போற்றப்படுகிறது.

மக்களின் பல்வகைப்பட்ட இயல்புக்கும் நட்புக்கும் ஏற்ப அவர்களுக்குத் துணைபுரிந்தான் கண்ணன். பெற்றோர்க்குச் செல்லப் பிள்ளையாகவும் தோழர்கள் தோழியர்க்கு விளையாட்டுப் பிள்ளையாகவும் விளங்கினான். அசுரர் கூட்டத்துக்கு முன் அளவற்ற ஆற்றலுடையவனாகத் தன்னைக் காட்டிக் கொண்டான்.

பரம்பொருள் என்றுணர்ந்து ஏத்தி வணங்கிய சான்றோர்க்குப் பரம்பொருளாகவே காட்சி கொடுத்தான். யோகியர் உள்ளத்தில் நிறைந்திருந்தான். நெஞ்சில் நிறைந்த பக்தி உடையவர்களுக்கு அமுதமாகத் திகழ்ந்தான் என்பனவாகிய கிருட்டிணனின் சிறப்புக்கள் பெரிய திருமொழியில் இடம் பெறுகின்றன.

## இராமாவதாரம் :

இராமாவதாரம் திருமாலின் ஏழாவது அவதாரமாகும். இது கிருட்டிணாவதாரத்திற்கு முந்தியதாக இருந்தாலும் கிருட்டிணாவதாரமே தமிழ் நாட்டில் மிகுதியான செல்வாக்குப் பெற்றுள்ளது. அதற்கேற்ப ஆழ்வார் பாடலுள் இராமாவதாரம் நூற்று முப்பத்தேழு பாடல்களில் [29] மட்டுமே காட்டப்படுகிறது. அவற்றுள் ஒரே செய்தி பல பாடல்களில் அமைந்துள்ளது. இராவணனுடன் போரிட்டு அவனை அழித்தது நாற்பத்தாறு பாடல்களிலும் இலங்கையை அழித்தது முப்பத்தெட்டுப் பாடல்களிலும் அரக்கர்களை வேருடன் அழித்தது இருபத்தைந்து பாடல்களிலும் குறிப்பிடப்படுகின்றது. இராமாவதாரம் பற்றிய செய்திகள் அதிகமாக இடம்பெற்றிருப்பினும் தசரதனுடைய புதல்வன் என்பது பத்தாம்பத்தின் மூன்றாம் திருமொழியிலுள்ள எட்டாவது பாடலில் மட்டுமே சுட்டப்படுகிறது. அதுவும் 'தசரதன்' என்று குறிப்பிடப் படாமல்

தவள மாடம் நீட யோத்தி காவலன் றன்சிறுவன்

என்று அமைந்துள்ளது. நம்மாழ்வாரின் திருவாய் மொழியிலும்,

தயர தன்பெற்ற மரகத மணித்தடத் தினையே[30]

என்று ஒரேயொரு பாடலில் மட்டுமே சுட்டப் பெறுவது காணலாம். தசரதனுக்கு மைந்தனாய்ப் பிறத்தல், சிவதனுசை முரித்தல், முனிவர்களைப் பாதுகாத்தல், அரக்கர்களை அழித்தல், நல்லவர்களை வாழவைத்தல், தருமத்தின் காவலனாகத் திகழ்தல் ஆகிய இராமாவதாரச் செய்திகள் பெரிய திருமொழியில் இடம் பெறுகின்றன. காக்கும் பெருமான் இராமனாக வடிவெடுத்து துயர்ப்படுவது பற்றிய கதைகள் பலவாக உள்ளமை அனைவரும் அறிந்ததே.

## நீர்மைக்குணம்:

தன் மேன்மை பற்றிச் சிறிதும் கருதாது தாழ்ந்தவர்களோடு உணர்வில் ஒன்றி உறவாடும் குணம் நீர்மைக்குணம் எனப்படும். அனுமனை அன்பனாகவும் சிறந்த தூதனாகவும் கொண்டது, குகனிடம் தோழமை கொண்டது ஆகிய

இடங்களில் இறைவனின் நீர்மைக் குணம் வெளிப்படுகிறது. அனுமனைப் பற்றிய செய்தி பெரிய திருமொழியில் மூன்று பாடல்களில் இடம் பெறுகின்றது. குகனைத் தோழனாகக் கொண்ட அரங்கனின் நீர்மைக் குணம்,

ஏழை ஏதலன் கீழ்மகன் என்னா
திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து,
'மாழை மான்மட நோக்கியுன் தோழி;
உம்பி எம்பி'என் றொழிந்திலை, உகந்து
தோழ னீயெனக் கிங்கொழி' என்ற
சொற்கள் வந்தடியேன் மனத் திருந்திட

என்னும் பாடலால் விளக்கப்படுகின்றது. பெரிய திருமொழியின் இப்பாடல் பின்னர் வாழ்ந்த கம்பர் மனத்திலும் நிலைபெற அவனைத் தோழனாகக் கொண்ட தன்மையைக் கற்போர் மனம் கவருமாறு தன் நூலில் உரைத்திருப்பதும் எண்ணத் தக்கது.

ஆழநீர்க் கங்கை யம்பி கடாவிய
ஏழைவே டனுக்கெம்பி நின்றம்பிநீ
தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன
வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்[31]

என்பது பாடல்.

## வீரிய குணம் :

கொடியவர்களைத் தண்டிப்பதும் அழிப்பதும் வீரிய குணத்தின் பாற்படும்.

சிலையினால் இலங்கை தீயெழச் செற்ற

நீர்மையி லாத தாடகை மாள நினைந்தவர்

என்பனபோன்ற பாடல் அடிகள் இராமபிரானின் வீரிய குணத்தைப் புலப்படுத்துகின்றன. சூர்ப்பனகையின் மூக்கை அரிந்த செயல் ஐந்து பாடல்களிலும் வாலியை வதம் செய்தது ஐந்து பாடல்களிலும் மான் வடிவில் வந்த மாரீசனை அம்பெய்து கொன்றது மூன்று பாடல்களிலும் கவந்தனை அழித்தது இரண்டு பாடல்களிலும் விளக்கப்படுகிறது. கரதூடணரை அழித்தல், இந்திரசித்தை அழித்தல், விராதனை வதைத்தல், கும்ப, நிகும்பரை அழித்தல் ஆகிய செயல்கள் முறையே ஒவ்வொரு பாடலிலும் பாடப்பட்டிருப்பதைக் காணலாம். போரில் தோற்றவர்கள் தங்கள் தோல்வி காரணமாக ஆடும் கூத்தான குழமணி தூரம் பற்றி வருகின்ற

கும்ப கர்ணன் பட்டுப்
போனான் குழமணி தூ ரமே

என்னும் பாடற்பகுதி கும்பகர்ணனை இராமபிரான் அழித்தமையைக் குறிப்பிடுகிறது.

*சரணாகதி :*

அடைக்கலமாகத் தம்மை வந்தடைந்த அனைத்து உயிர்களிடமும் பரிவு காட்டிக் காப்பது சரணாகதித் தத்துவத்தின் அடிப்படை.

எல்லா வுலகும் வணங்க விருந்த
அம்மான், இலங்கைக்கோன்
வல்லா ளாகம் வில்லால் முனிந்த
எந்தை விபீடணற்கு
நல்லான்.............

என்னும் பாடல் இராமபிரானைச் சரணடைய வந்த விபீடணனை ஏற்றுக் கொண்ட பெருந்தன்மையையும் சார்ந்தவரைக் காக்கும் பண்பையும் விளக்குகின்றது. அரக்கரின் இன்னலுக்காளான இமையவரும் முனிவரும் பாற்கடலைச் சென்றடைந்து தங்கள் துயர் துடைத்தருளுமாறு பரந்தாமனைப் பரவிப் பணிய அவர்களுக்கு அருளும் வகையில் தசரதனின் மகனாகப் பிறந்து அரக்கர்களை அழித்து தருமத்தின் காவலனாகத் திகழ்ந்தமை,

கவள யானை பாய்புர
வித்தே ரோட ரக்கரெல்லாம்
துவள வென்ற வென்றி
யாளன் றன்தமர் கொல்லாமே
தவள மாடம் நீட
யோத்தி காவலன் றன்சிறுவன்
குவளை வண்ணன் காண
ஆடீர் குழமணி தூ ரமே

என்னும் பாடலில் காட்டப்பட்டுள்ளது.

*நரசிம்மாவதாரம் :*

பக்தனு டைய வாக்கைக் காப்பாற்ற எந்த இடத்திலிருந்தும் எந்த

உருவத்திலும் தோன்றுவான் இறைவன் என்பதைக் காட்டும் அவதாரம் நரசிம்மாவதாரம். "விகார உருவமில்லாமல் இருக்கும் எம்பெருமான் தன் அடியார்களைக் காப்பாற்றுவதற்காக அடையும் விகார உருவங்களுக்கு எல்லையே இல்லையென்பதை நிரூபிக்கும் அவதாரம நரசிம்மாவதாரம்" என்றும் கூறப்படுகிறது. இத்தகைய நரசிம்மாவதாரம் பற்றிய செய்திகளை திருமங்கையாழ்வார் அறுபத்தொரு பாடல்களில் கூட்டிப் பாடியிருக்கிறார். எல்லா இடங்களிலும் அவ்விடங்களில் இருக்கும் பொருள்களிலும் பரந்துள்ள தன்னுடைய வியாபகத் தன்மையை உணர்த்துவதற்காக, ஆத்திரத்தோடு இரணியன் தூணை ஓங்கி அறைந்த இடத்தில் நரசிம்ம உருவத்துடன் இறைவன் தோன்றினான் என்பதை இரண்டாம் பத்து மூன்றாம் திருமொழியின் எட்டாவது பாடல் உணர்த்துகின்றது.

பள்ளியி லோதி வந்ததன் சிறுவன்
வாயிலோ ராயிர நாமம்,
ஒள்ளிய வாகிப் போதலாங் கதனுக
கொன்றுமோர் பொறுப்பில னாகிப்
பிள்ளையைச் சீறிவெகுண்டுதூ ண் புடைப்ப
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்க மாகிய தேவை

என்பது அப்பாடலாகும்.

இறைவனின் கொடிய உருவைக் கண்ட மாத்திரத்தில் இரணியன் அஞ்சி நிற்க, நரசிம்ம மூர்த்தியாக அவதாரம் செய்த இறைவனின் கரங்கள் அவனது மார்பைப் பிளந்ததாகக் குறிப்பிடப் படுகிறது. இவ்வாறு இறைவனின் கரங்கள் கொடியவனின் மார்பைப் பிளந்தமையை பெரியாழ்வாரும்

உரம்பற்றி யிரணியனை யுகிர்நுதியால்
ஒள்ளியமார் புறைக்க வூன்றி

என்று கூறியுள்ளார். மார்வம், அகலம், ஆகம், நெஞ்சு, உரம் ஆகிய சொற்கள் மார்பைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. நரசிம்மமூர்த்தி இரணியனின் மார்பைப் பிளந்ததாக முப்பத்து ஏழு இடங்களிலும் மார்பைப் பிளந்தற்கு உகிரைப் பயன்படுத்தியதாக இருபத்து ஐந்து இடங்களிலும் பாடப்படுகிறது.

மனிதர்கள், விலங்குகள் முதலான உயிரினங்களால் மரணம் நேரக்கூடாது; தேவராலும் சாகக்கூடாது; விண்ணிலும் மண்ணிலும் இறப்பு வரக்கூடாது; வீட்டின்

உள்ளும் புறமும் உயிர்பிரியக்கூடாது : இரவிலோ பகலிலோ இறக்கக்கூடாது; எந்தப் படைக் கலங்களாலும் தனக்கு அழிவு வரக்கூடாது என இரணியன் பிரம்மாவிடம் கேட்டு வரம் பெற்றிருந்ததால் மனிதராகவோ விலங்காகவோ தோன்றாது மனிதனும் சிங்கமுமாகத் தோன்றினார் என்பது,

உளைந்த அரியும் மானிடமும்
உடனாய்த் தோன்ற ஒன்றுவித்து

என்னும் அடியால் விளக்கப்படுகின்றது. விண்ணிலும் மண்ணிலும் உயிர் பிரியக் கூடாது என்று பெற்ற வரத்தால் மடியிடை வைத்துக் கொன்றமை,

முடியுடை யமரர்க் கிடர்செயு மசுரர்
தம்பெரு மானை, அன்றரியாய்
மடியிடை வைத்து மார்வைமுன் கீண்ட
மாயனார் மன்னிய கோயில்

என்னும் பாடலால் புலப்படுத்தப்படுகிறது. எந்தப் படைக்கலங்களும் தன்னைக் கொல்லக்கூடாது என்பது இரணியன் பெற்ற வரம். அதற்கேற்ப எந்தப் படைக் கலத்தையும் பயன்படுத்தாது தன் நீண்ட உகிரால் அவன் மார்பைப் பிளந்தார் நரசிம்ம மூர்த்தி என்னும் கருத்து,

வெய்ய னாயுல கேழுடன் நலிந்தவன்
உடலக மிருபிளவா,
கையில் நீளுகிர்ப் படையது வாய்த்தவ
னே ! எனக் கருள்புரியே

என்னும் பாடலில் சுட்டப்பட்டுள்ளது.

காண்பதற்கு அச்சத்தைத் தரக்கூடிய கோர வடிவுடைய அவதாரமாக இருப்பினும் மனதால் நினைத்து நெருங்கும் அன்பர்க்கு அன்பராயிருந்த பாங்கு நாயக - நாயகி பாவனையில் இடம்பெறும் 'வளை நெகிழ்தல்' என்னும் அகத் துறையிலமைந்த

அடலடர்த்தன் றிரணியனை முரணழிய அணியுகிரால்
உடலெடுத்த பெருமானுக் கிழந்தேனென் ஒளிவளையே

என்னும் பாடல் மூலம் வெளிப்படுகிறது. பக்தன் எப்பொழுதும் அற நெறியில் சிறந்தவனாக வாழ வேண்டும். அவ்வாறு வாழ்வோனுக்கு அளப்பரிய துன்பம் நேருமாயின் இறைவன் தன் வீரிய குணத்தைக் காட்டிச் சீறுவான் என்பது நரசிம்மாவதாரம் காட்டும் குறிப்பாகும்.

### வாமனாவதாரம்:

திருமாலின் திருவவதாரங்களாக மச்சத்திலிருந்து கூர்மம், கூர்மத்திலிருந்து வராகம், வராகத்திலிருந்து நரசிம்மம் எனப் படிப்படியே அவதாரங்கள் வளர்ச்சியடைந்து, மனிதனும் சிங்கமும் கூடிய நிலையிலிருந்து முழுவதுமாகப் பெருவளர்ச்சி பெற்ற வடிவமே வாமனாவதாரம். ஐம்பது பாடல்களில் [35] வாமனாவதாரம் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. குறள், மாணி, மாணுரு என்னும் சொற்களால் இவ்வவதாரத்தோற்றம் குறிக்கப்படுகிறது. மாபலியின் ஆணவத்தை அடக்குதற் பொருட்டு குள்ளமான வடிவம் எடுத்ததாகவும் கண்டவுடன் வணங்க வேண்டுமென்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கும்படியான பண்புடன் தோன்றியதாகவும்,

தொழுநீர் வடிவில் குறளுருவாய்
வந்து தோன்றி மாவலிபால்
முழுநீர் வையம் முன்கொண்ட
மூவா வுருவி னம்மான்

என்னும் பாடல் வழி கூறுகிறார் ஆழ்வார். இவன் மெய்யான யாசகன் என்று மாபலி தெரிந்து கொள்ளும்படி தர்ப்பை, மான்தோல், கௌபீனம், தண்டம் ஆகியவற்றோடு நல்ல அநுட்டானங்களில் உபயோகப்படுகின்ற வேதத்தை நாவினால் உச்சரிக்கின்ற முனிவர் தோற்றத்தை உடையவனாய் இருந்தான் இறைவன் என்பதும் விளக்கப்படுகிறது.

### வராகவதாரம் :

உருவால் பெறும் உயர்வு, உயர்வல்ல; பண்பினால், செயற்கரிய செயலினால் பெறும் உயர்வே உயர்வு என்ற அரிய கருத்தை அறிவுறுத்தும் அவதாரம் வராக அவதாரம்[36]. 'எப்பிறவியும் இழிந்ததன்று' என்பதையும் 'எதனையும் ஆழ்ந்து நோக்குதல் வேண்டும்' என்பதையும் விளக்குதற்கு எடுத்த அவதாரம் வராக அவதாரம். [37] வராக அவதாரம் பற்றிய குறிப்புக்கள் பெரிய திருமொழியில் இருபத்து நான்கு பாடல்களில் [38] இடம் பெறுகின்றது. இவ்வவதாரத்தைக் குறிக்கின்ற வகையில் நிற்கும் சொற்களுள் 'ஏனம்' என்பது பதினான்கு இடங்களிலும் 'பன்றி' என்பது மூன்று இடங்களிலும் 'கேழல்' என்பது நான்கு இடங்களிலும் வராகம் என்பது இரண்டு இடங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

குற்றமற்ற சந்திரன், ஒளியுடைய கதிரவன், தேவர்கள், மேலுலகங்கள்

ஏழு, திசைகள், மேருமலை மற்றும் ஏழு மலைகள், ஏழு கடல்கள் ஆகியவை அந்தப் பன்றியின் திருவடிகளிலுள்ள திருக்குளம்புக்குள் அடங்கும் என்பது

தீதறு திங்கள் பொங்கு சுடரும்பர்
உம்ப ருலகேழி னோடு முடனே
மாதிர மண்சு மந்து வடகுன்று
நின்ற மலையாறும் ஏழுகடலும்
பாதமர் சூழ்கு ளம்பி னகமண்ட
லத்தி னொருபா லொடுங்க,

என்னும் பாடலால் வெளிப்படுத்தப்படுகிறது. வராக மூர்த்தியின் உருவ அமைப்பை விளக்குமிடத்து ''நான்கு வேதங்களும் வராக மூர்த்தியின் பாதங்கள் ; சுமிருதிகளும் புராணங்களும் செவிகள்; சூரிய சந்திரர்கள் கண்கள்; மந்திரங்கள் எல்லா அங்கங்கள்; யாகங்கள் கோரைப் பற்கள்''[39] என்று கூறுவர்.

## பரசுராம அவதாரம் :

வராக மூர்த்திக்கு அடுத்தபடியாகச் சற்றுக் குறைந்த எண்ணிக்கையில் பரசுராம அவதாரம் பாடப்பட்டுள்ளது. பதினைந்து இடங்களில் [40] இவ்வவதாரம் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது. '' புலன்களை முறைப்படுத்தாது மனம்போன போக்கில் சென்று மக்களைக் காப்பாற்றும் கடமையில் தவறிவிட்ட அக்காலத்து மன்னர் பரம்பரையைத் தண்டிக்கப் 'பரசு' என்னும் கோடாலியை ஆயுதமாகக் கொண்டு இராமன் என்ற பெயருடன் தோன்றிய அவதாரமாகும்''[41] என்று இவ்வவதாரம் பற்றி விளக்கம் கூறப்படுகிறது.

இறைவன் அறிவுடைய ஆன்மாவிடம் தன்னுடைய உருவத்துடன் ஆவேசித்துத் தோன்றிய அவதாரம் பரசுராம அவதாரம் என்றும் கூறுவர். முனிவராக கையில் மழுப்படை ஏந்தியவராகத் தோன்றி அரச குலத்து இருபத்தொரு தலைமுறையினரைக் கொன்றதாகிய செயல்,

முனியாய் வந்து மூவெழுகால்
முடிசேர் மன்ன ருடல்துணிய
தனிவாய் மழுவின் படையாண்ட
தாரார் தோளான் ....

என்பது போன்று மூன்று பாடல்களில் இடம் பெறக் காண்கிறோம்.

மும்மூர்த்திகளுள் ஒருவரான முக்கட்பெருமான் அமர்ந்துறையும் இடம் கைலாயம். அந்தக் கைலாயத்தைத் தன் கையாலேயே பெயர்த்தெடுத்த வலிமையுடையவன் இராவணன். அந்த இராவணனையே வெற்றி கொண்டவன் கார்த்த வீரியன். அந்தக் கார்த்த வீரியனையே கொன்றொழித்த வீரமும் வெற்றியும் வாய்ந்தவர் பரசுராமர் என்பதை,

ஆயிரம் குன்றம் சென்றுதொக் கனைய
அடல்புரை யெழில்திகழ் திரள்தோள்,
ஆயிரம் துணிய அடல்மழுப் பற்றி
மற்றவன் அகல்விசும் பணைவ

என்னும் பாடல் விளக்குகின்றது. " பரசுராமரைப் பூசித்து வணங்கும் நிலை வழக்கத்தில் இல்லை. பிற அவதாரங்களில் காணப்படும் அருள் சக்தி பரசுராமரிடம் இல்லாது ஆவேச சக்தி மட்டும் இருப்பதே இதன் காரணமாகும்''[42] என்று பரசுராமரை வணங்காமைக்குரிய பொருத்தத்தை எடுத்துக் காட்டுவர்.

**மச்சாவதாரம் :**

சோமுகன் என்ற குதிரைமுகம் கொண்ட அரக்கன் பிரம்மாவிடமிருந்த மறைகளைத் திருடிச் சென்று கடலினுள் ஒளிந்துகொள்ள அம்மறைகளை மீட்பதற்காக இறைவன் எடுத்தது மச்சாவதாரம். மறைகளை மீட்பதே மச்சாவதாரத்தின் நோக்கமாக அமைந்தது. இவ்வவதாரத்தை பெரிய திருமொழியின் எட்டுப் பாடல்கள் [43] பேசுகின்றன

தேவலோகத்தின் எல்லையளவும் கடல் வெள்ளம் பரவியதும், அக்காலத்தில் இறைவன் வலிமை கொண்ட வடிவில் மீனாய் அவதரித்ததும், அவன்தான் அவர்கள் எல்லோரையும் பிழைப்பித்தருளினவன் என்பதும் ஒன்பதாம் பத்து முதல் திருமொழியின் மூன்று, பதினோராம் பத்து நாலாம் திருமொழியின் ஒன்று, எட்டாம் பத்து எட்டாம் திருமொழியின் ஒன்று ஆகிய பாடல்களில் விளக்கப்படுகிறது.

வானோ ரளவும் முதுமுந்நீர்
வளர்ந்த காலம் வலியுருவில்
மீனாய் வந்து வியந்துய்யக்
கொண்ட தண்டா மரைக்கண்ணன்

என்பது அவற்றுள் ஒன்று. இவ்விடத்து 'வானோரளவும்' என்பது தேவ லோகத்தைக் குறிக்கும். தேவலோகம், நல்லுணர்வுகளின் விளை நிலமான சத்துவக்

குணத்தையும் 'முது முந்நீர்', தீயுணர்வுகளின் விளைநிலமான தமோ குணத்தையும் 'வலியுருவில்மீன்' என்பது விழிப்புடன் கூடிய தெளிந்த அறிவினையும் 'தண்டாமரைக் கண்ணன்' என்பது இறைவனையும் குறிக்கும் எனலாம்.

மீனின் செயலில் சுயநலமும் உண்டு; பொது நலமும் உண்டு. நீரிலுள்ள அழுக்கினைத் தன் பசிக்காக உண்ணுவது சுயநலம். உயிரினங்களின் நன்மையைக் கருதி நீரினைச் சுத்தமாக்குவது பொதுநலம், சுயநலம் கலந்த பொது நலமே அனைவர்க்கும் நன்மை பயக்கவல்லது. எல்லாத் துறையினரும் கடைப்பிடிக்க வேண்டியது என்பதையும் இதன்வழி உணர்ந்து கொள்ள முடிகிறது.

### கூர்மாவதாரம் :

செல்வச் செருக்கால் துருவாச முனிவரை அவமதித்த இந்திரனைத் தண்டித்து பின் அரவணைத்து அவனுக்கு அமிர்தம் அளிக்க எடுத்தது கூர்மாவதாரம். பாகவத அபசாரத்திற்குத் தண்டனை உடனே ஏற்படும். ஆணவத்தால் அடிபட்ட உள்ளமானது குற்றம் உணரும்பொழுது அரவணைப்பைப் பெறும் என்பது இதன் மூலம் விளக்கப்படுகிறது. தேவர்கள் நின்று கடைவதற்கேற்பப் பெரியதொரு மலை தன்னுடைய முதுகில் பரந்து நின்று சுழலும்படியாக அந்த மலையின் கீழ் பிறிதொரு மலை சாய்ந்து கிடப்பதைப் போல் வலிமை கொண்ட கூர்ம அவதார மெடுத்துத் தாங்கிய இறைவன் உயிர்களுக்கு அபயமளிப்பவன் என்னும் கருத்து,

.... இமையோர்கள் நின்று கடைய
பருவரை யொன்று நின்று முதுகிற்
பரந்து சுழலக் கிடந்து துயிலும்
அருவரை யன்ன தன்மை அடலாமை
யான் திருமால் நமக்கொ ரரணே

என்னும் பாடலால் புலப்படுத்தப்படுகிறது.

பாற்கடல் கடையும்பொழுது மந்தர மலை நான்கு புறமும் சுழன்று வந்தது. ஒளியுடன் கூடிய அமிழ்தம் தோன்றும் வரையில் ஒப்பற்ற தன்மையுடைய ஆமையாய் அக்கடலில் தாங்கிக் கிடந்தான் கூர்மாவதாரம் எடுத்த இறைவன். அவன் அனைத்து உயிர்களினுள்ளும் நிலைபெற்று அவை நல்வழியில் செல்லும் வண்ணம் வழி நடத்தக்கூடியவன்[44] என்னும் கருத்தும் உரைக்கப்படுகிறது.

'ஆமை' என்னும் சொல்லைப் பயன்படுத்தி இறைவனின் கூர்மாவதாரச் செயல்களை எடுத்துரைப்பனவாக பெரிய திருமொழியில் இரண்டாம் பத்து ஏழாம்

திருமொழி பத்தாவதுபாடல்; ஐந்தாம் பத்து மூன்றாம் திருமொழி ஆறாவது பாடல் நான்காம் திருமொழி எட்டாவது பாடல்; எட்டாம் பத்து நான்காம் திருமொழி நான்கு, ஐந்தாவது பாடல்கள். எட்டாம் திருமொழி இரண்டாவது பாடல்; பதினோராம் பத்து நான்காம் திருமொழி இரண்டாவது பாடல் ஆகிய ஏழு பாடல்கள் அமைந்துள்ளன.

## கல்கியவதாரம்:

''கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கனுள் கலியுகம் கடைசியுகம். எனவே கிருதயுகத்தில் இருந்த தருமம் கலியுகத்தில் காணப்படாது. யுகங்கள்தோறும் தருமம் மாறுபடும். கிருதயுகத்தில் தழைத்துக் காணப்படும் அது படிப்படியே குறைந்து கலியுகத்தில் தன் ஆற்றலை இழந்து நிற்கும். அப்போது இறைவன் எடுப்பது கல்கியவதாரம்''[45] என்பர்.

கலியுகத்தில் ஏற்படும் போராட்டத்திலிருந்து உயிர்களை மீட்பதற்காகவும் அநீதியையும் அக்கிரமங்களையும் நீக்கி நீதியையும் அமைதியையும் நிலை நாட்டுதற்காகவும் குதிரைமேல் ஏறி கல்கி அவதாரம் எடுத்து இறைவன் வரும் நிலை

..........வையங்காக்கும்
கடும்பரிமேல் கற்கியைநான் கண்டுகொண்டேன்

என்னும் பாடல் அடிகளில் குறிப்பிடப்படுகிறது. இறைவன் கல்கியவதாரம் எடுப்பதும் கலியுகத்தில் தோன்றுவதும் பற்றிய குறிப்பு பெரிய திருமொழியில் இரண்டாம் பத்து ஐந்தாம் திருமொழி மூன்றாவது பாடல்; ஏழாம் பத்து ஏழாம் திரு மொழி ஐந்தாவது பாடல்; எட்டாம் பத்து நான்காம் திருமொழி ஏழாவது பாடல், எட்டாம் திருமொழி பத்தாவது பாடல் ஆகியவற்றில் இடம் பெறக் காண்கிறோம்.

## பலராம அவதாரம் :

திருமாலின் திருவவதாரங்களுள் எட்டாவது அவதாரமாகத் திகழ்வது இது, ''இராமாவதாரத்தில் ஆதிசேடனது அமிசமாய்த் தோன்றிய இலக்குவன் தனக்குச் செய்த அரிய பெரிய பணிவிடைக்கு மகிழ்ந்த திருமால் அந்நன்றிக் கடனைத் தீர்க்கும் பொருட்டு 'மற்றோர் அவதாரத்தில் உனக்குத் தம்பியாகப் பிறந்து உடம்பைப் பூசிப்பேன்' என்று வரம் அளிக்க அதன்படி ஆதிசேடன் வசுதேவருக்கும் ரோகிணிக்கும் முதல் மகனாகத் தோன்றிய பிறப்பே பலராம் அவதாரம். இவ்வவதாரத்தில் பால் வண்ணத்தனாகத் திகழ்ந்தார்''[46] என்று கூறப்படுகிறது. இந்த அவதாரம் பற்றிய செய்தியை ஆழ்வார் எட்டாம் பத்து எட்டாம் திருமொழி

எட்டாவது பாடலிலும் பத்தாம் பத்து ஏழாம் திருமொழி நான்காவது பாடலிலுமாக இரண்டு பாடல்களில் விளக்குகின்றார்.

ஒரு காதில் தொங்குகின்ற திருக்குண்டலமும் ஒரு பக்கத்தில் கலப்பையும் விளங்க அவதரித்தவர் என்பதும் வெற்றி பெறுவதையே இயல்பாக உடையவர் என்பதும் வேற்படையையுடைய அரசர்களைப் போர்க்களத்தில் கொன்று வெற்றியைத் தொழிலாகவுடைய பெருமான் என்று அழைக்கப்பட்டார் என்பதும் பெறப்படுகிறது.

## தசாவதாரங்கள் இடம் பெறும் சிறப்பு:

திருக்கண்ணபுரம் என்னும் திருத்தலத்தில் பாடப்பட்டுள்ள பெரியதிரு மொழிப் பாடல் இறைவனின் பத்து அவதாரங்களையும் அவ்வரிசை முறையிலேயே கூறுவதை எட்டாம் பத்து எட்டாம் திருமொழி பத்தாவது பாடலில் காண முடிகின்றது.

மீனோ டாமை கேழலரி
குறளாய் முன்னு மிராமனாய்த்
தானாய், பின்னு மிராமனாய்த்
தாமோ தரனாய்க் கற்கியும்
ஆனான் றன்னை ....

என்று பத்து அவதாரங்களும் ஒரே பாடலில் குறிககப்பட்டுள்ளதைப் போன்று நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் வேறு எந்தப் பாடலிலும் இல்லை.

வைணவர்களின் வேதம் என்று புகழ்ந்துரைக்கப்படும் திருவாய் மொழியில் கல்கியவதாரம் பற்றிய செய்தி ஒரோயொரு பாடலில்தான் இடம் பெறுகிறது. ஆயின் பெரிய திருமொழி கல்கியவதாரம் பற்றிய செய்தியை நான்கு இடங்களில் குறிப்பிடுவதோடு தசாவதாரங்களை ஒரே பாடலில் அமைத்துப் பாராட்டியுள்ளமை பெரிய திருமொழியின் தனித்துவத்தைக் காட்டுவதாய் உள்ளது.

## அன்ன அவதாரம்:

மச்சாவதாரப் பெருமானாக மறைகளை மீட்க அவதாரம் செய்தவர், பிரளய காலத்தில் மறைகளை மீட்ட பிறகு பிரளயமும் முடிந்துவிட, நான்முகனுக்கு மறைகளின் பொருளை அருள எண்ணி மச்சாவதாரத்தை மாற்றி அன்னப் பறவையாக வடிவெடுத்தார்[41] என்று கூறுவர். மச்சாவதாரமும் அன்ன அவதாரமும் அடுத்தடுத்து நிகழ்ந்த அவதாரங்கள்.

அன்னப் பறவை அவதாரம் நான்காம் பத்து ஐந்தாம் திருமொழி ஆறாவது பாடல்; ஐந்தாம் பத்து முதல் திருமொழி ஒன்பதாவது பாடல், ஏழாம் திருமொழி மூன்றாவது பாடல்; ஒன்பதாம் பத்து இரண்டாம் திருமொழி பத்தாவது பாடல்; பதினோராம் பத்து நான்காம் திருமொழி எட்டாவது பாடல் ஆகியவற்றில் குறிக்கப்பட்டுள்ளது.

அன்னம், பாலையும் நீரையும் பகுத்துண்ணும் பண்புடையதாதலால் நன்மை, தீமைகளை விளக்கி நிற்பதற்கு ஏற்றதாக அன்னத்தின் வடிவம் அமைந்தது. இவ்வடிவில் அருமறையின் பொருள்களையெல்லாம் திருமால் அயனுக்கு உபதேசித்தார். அன்னப் பறவையாகி அருமறை தந்தருளிய செயலை,

மன்னுமா நிலனும் மலைகளும் கடலும்
வானமும் தானவ ருலகும்
துன்னுமா யிருளாய்த் துலங்கொளி சுருங்கித்
தொல்லைநான் மறைகளும் மறைய
மன்னுவா னவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப்
பிறங்கிருள் நிறங்கெட, ஒருநாள்
அன்னமாய், அன்றங் கருமறை பயந்தான்

என்னும் பாடல் தெளிவுறுத்தி நிற்கிறது. அன்னமாகி அருமறை தந்தருளிய செயலை பெரியாழ்வாரும் பாடி மகிழ்கிறார். [48]

## அயக்கிரீவ அவதாரம் :

அயக்கிரீவம் என்பது பரிமுகம் என்று பொருள்படும். பரிமுகம் என்னும் சொல்லால் இவ்வவதாரம் பற்றி ஐந்தாம் பத்து மூன்றாம் திருமொழியின் இரண்டாவது பாடல், ஏழாம் பத்து எட்டாம் திருமொழியின் இரண்டாவது பாடல் ஆகியவை கூறுகின்றன.

நினைவுக்கு எட்டாத பழங்காலம் ஒன்றில் உலகம் முழுவதும் இருள் மண்டியதாகவும் வானவர்கள் செய்வதறியாது திகைத்தபோது பிரமனிடமிருந்து சோமுகாசுரன் பறித்துச் சென்ற மறைகளை மீட்பதற்காக அயக்கிரீவ அவதாரம் எடுத்ததாகவும் உள்ள செய்தி பெரிய திருமொழியிலுள்ள

வசையில் நான்மறை கெடுத்தவம் மலரயற்
கருளி, முன் பரிமுகமாய்
இசைகொள் வேதநூ லென்றிவை பயந்தவன்

முன்னிவ்வுல கேழுமிருள் மண்டி யுண்ண
முனிவரோடு தானவர்கள் திகைப்ப, வந்து
பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம்
பரிமுகமா யருளியவெம் பரமன் காண்மின்

என்னும் பாடல்களால் விளக்கப்படுகிறது.

சோமுகன் என்னும் அசுரனைக் கொன்று மறைகளை மீட்பதற்காக எடுத்த அவதாரத்தை மச்சாவதாரம் என்றும் அன்ன அவதாரம் என்றும் அயக்கிரீவ அவதாரம் என்றும் மூன்று விதமாகக் குறிப்பிடுவர். திருமங்கையாழ்வாரோ வெனில் அந்த மூன்று விதமான அவதாரத்தையும் பெரிய திருமொழியில் பாடியிருக்கிறார். நம்மாழ்வார் திருவாய் மொழியில் மச்ச அவதாரத்துடன் அயக்கிரீவ அவதாரத்தையும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அன்ன அவதாரம் பற்றிய குறிப்பு அதன்கண் இடம் பெறவில்லை.

## மோகினியவதாரம் :

திருமாலின் அவதாரங்களை நோக்கும்போது ஓர் உண்மை புலனாகின்றது. ஒவ்வோர் அவதாரமும் அன்பர்களின் துயர் துடைக்கவும், பக்தர்களுக்குப் பரிந்து உதவி செய்வதற்கும் ஏற்பட்டது என்பது தெரிகிறது. அவ்வகையில் அவர் எடுத்த அவதாரங்களுள் மோகினி அவதாரமும் ஒன்று. ''இறைவன் ஆணாகவும் இருக்கிறான்; பெண்ணாகவும் இருக்கிறான்; ஆண் தன்மை மிகுந்த அவதாரம் எடுக்கும்போது ஆற்றல் வெளிப்படுகிறது. பெண் தன்மை மிகுந்த அவதாரம் எடுக்கும் போது அன்பு வெளிப்படுகிறது. ஆற்றலும் வீரமும் ஆண்மைக்குரியவை. அன்பும் தியாகமும் பெண்மைக்குரியவை. அசுரர்களுக்கு அழியா வாழ்வு கிடைத்தால் நல்லோர்கள் அல்லலுறுவர். அமரர்களுக்கு அழியா வாழ்வு கிடைத்தால் சான்றோர்கள் நிம்மதியாக வாழ்வர். இதனைக் கருத்தில் கொண்டு தான் திருமால் மோகினியாய் வடிவெடுத்து அசுரர்களை வஞ்சித்து அமரர்க்கே அமுது தந்தார்''[49] என்று அது பற்றி விளக்கம் கூறப்படுகிறது. தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது கிடைத்த அமிழ்தத்திற்காக இருதிறத்தார்க்கும் பூசல் ஏற்பட அதைத் தீர்ப்பதற்காக திருமாலால் மேற் கொள்ளப்பட்டதே மோகினியவதாரம் என்பதைக் குறிப்பிடுமுகத்தான்

விஞ்சைவா னவர்சா ரணர்சித்தர் வியந்து
துதிசெய்ய பெண்ணுரு வாகி,
அஞ்சுவை யமுத மன்றளித் தானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே

என்னும் பாடலும் இரண்டாம் பத்து ஐந்தாம் திருமொழி எட்டாவது பாடலும் ஆறாம் திருமொழி முதல் பாடலும் அமைந்திருக்கக் காணலாம்.

## அந்தரியாமி நிலை :

உள்ளுறைந்து நிற்றல் என்பது அந்தரியாமி எனப்படும். நாராயணன் என்னும் சொல்லுக்கே உலகிலுள்ள எல்லாப் பொருள்களினுள்ளும் உறைந்து நிற்பவன் என்றும் அந்தரியாமியாய் இருப்பவன் என்றும் பொருளுண்டு.

> ''நாரங்களுக்கு அயனமாய் இருப்பவன் நாராயணன். சித்து எனப்படும் அறிவுள்ள உயிர்கள், அசித்து எனப்படும் அறிவற்ற பொருள்கள் யாவும் நாரங்கள் எனப்படும். இவை யாவற்றுக்கும் அயனமாய் இருப்பவனும் இவற்றை தனக்கு ஆதாரமாகக் கொண்டிருப்பவனும் நாராயணன் ஒருவனே. இதுவே அந்தரியாமி நிலை எனப்படும்'' [50]

> ''அந்தர்யாமித்துவமாவது, சேதனர்களின் உள்ளே புக்கிருந்து அவர்களுடைய எல்லாச் செயல்கட்கும் தான் ஏவுபவனாக இருக்கும் நிலையாகும்.'' [51]

> '' நல்வினை காரணமாக துறக்கம் அடைதல், தீவினை காரணமாக நரகத்தில் புகுதல் முதலிய எல்லா நிலைகளிலும் எல்லாச் சேதனர்க்கும் ஆன்மாவுக்குள்ளே தனது சொரூபத்தாலே வியாபித்து நின்று அவர்கட்குத் துணையாய் அவர்களை ஒருகாலும் விடாமல் அந்தராத்மாவாய் இருக்கும் இருப்பே இது.'' [52]

என்னும் கருத்துக்கள் இதைத் தெளிவாக்கும். விசிட்டாத்துவைதத்தின் படி சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய மூன்று பொருள்களும் அழிவில்லாதவை. இம்முன்றனுள் ஈசுவரன், சித்து, அசித்து ஆகிய இரண்டினுள்ளும் அந்தரியாமியாக உள்ளான்.

பரம், வியூகம், விபவம் ஆகிய மூன்று நிலைகளிலிருந்தும் உலகத்தைப் பாதுகாக்கும் செயல்களைச் செய்யும் நாராயணன் தேவர், மனிதர், விலங்கு, பறவை, தாவரம், முதலானவற்றிலும் பிரமன், உருத்திரன், இந்திரன் ஆகியோரின் உடலிலும் அந்தரியாமி நிலையிலிருந்து ஆட்சி புரியும் தன்மை பெரிய திருமொழிப் பாடல்களில் விளக்கப்படுகின்றது.

## இயங்குபொருள் இயங்காப் பொருளில் இருப்பவன் :

உலகிலுள்ள இயங்கும் பொருள், இயங்காப் பொருள் ஆகிய அனைத்தினுள்ளும் நிறைந்து, மறைந்து இருப்பவன் இறைவன் என்பதால் அவனுடைய அந்தரியாமி நிலை புலப்படுகின்றது. இந்நிலையை பத்தொன்பது பாடல்கள் [53] தெளிவாகக் காட்டுகின்றன.

ஊனா ரகலம் பிளவெடுத்த
ஒருவன் தானே யிருசுடராய்
வானாய்த் தீயாய் மாருதமாய்
மலையா யலைநீ ருலகனைத்தும்
தானாய் தானு மானான்....

என்று எல்லாப் பொருள்களுள்ளும் அந்தரியாமியாய் இருக்கும் தன்மை சுட்டப்பட்டுள்ளது. பொருள்களையெல்லாம் சரீரமாகக் கொண்டு அவற்றை இயக்குபவன் என்பது,

திங்களப்பு வானெரிகா லாகி

என்றாற்போன்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## பாதிப்பற்றவன் இறைவன் :

உயர்திணை, அஃறிணையாகிய எல்லாப் பொருளுள்ளும் இறைவன் கலந்து நிற்பினும் அவற்றின் அவத்தைகள் தன்னைத் தொடாதபடி இருக்கின்றான் என்பதை,

யாவருமா யாவையுமா
யெழில்வேதப் பொருள்களுமாய்

என்னும் பாடல் புலப்படுத்துகிறது.

## தேவர்கள் உடலில் உள்ளான் :

அரன், பிரமன், இந்திரன் முதலான தேவர்களின் உடலினுள் வியாபித்திருந்து அவர்களை இயக்குபவனாகவும், முதல்வனாகவும் இருந்து தானே அவர்களாகவும் அவர்களே தானாகவும் இருக்கின்ற அந்தரியாமித்துவ நிலை இரண்டாம் பத்து இரண்டாம் திருமொழி எட்டாவது பாடல், ஐந்தாம் திருமொழி மூன்றாவது பாடல்; நான்காம் பத்து முதல் திருமொழி முதல் பாடல், மூன்றாவது பாடல் ஆகிய நான்கில் குறிப்பிடப்பட்டுள்ளமை அறியலாம்.

## ஐம்புலன்களின் உணர்வாய் இருப்பவன்:

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய புலன்களின் நுகர்வாகவும் அவற்றால் ஏற்படும் உணர்வாகவும் அவற்றோடு தொடர்புடைய செயல்களாகவும் இருப்பதோடு அவற்றின் காரணகர்த்தாவாகவும் கரந்து ஒழுகுகின்றமை நான்கு பாடல்களில் குறிப்பிடப்படுகிறது.

சொல்லுவன் சொற்பொருள் தானவை யாய்ச்சுவையா
யூறொலி நாற்றமும் தோற்றமுமாய்[54]

என்பது அவற்றுள் ஒன்று.

## ஐம்பூதங்களின் பண்பாக இருப்பவன் :

இறைவன் ஐம்பூதங்களாகவும் அவற்றின் பண்பாகவும் இருக்கும் நிலை,

பாரு நீரெரி காற்றி னோடா
காச முமிவை யாயினான்

தீதறுநி லத்தொடெரி காலினொடு நீர்கெழுவி
சும்பு மவையாய்

என்பன போன்று ஒன்பது பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது.

விசும்பினிடத்து ஒளியாகவும் தீயிடத்து அழிக்கும் ஆற்றலாகவும் காற்றினிடத்து வன்மையாகவும் நீரினிடத்து இரக்கமாகவும் நிலத்தினிடத்து பொறுக்கும் தன்மையாகவும் இறைவன் உள்ளான். எனவே அவன் ஐம் பூதங்களாகவும் அவற்றின் பண்புகளாகவும் உள்ளான் என்பது தெரிகிறது. இங்ஙனம் மும்மூர்த்திகளுள் முதல்வனாகிய திருமால் எல்லாப் பொருள்களுள்ளும் எக்காலத்தும் விட்டுப் பிரியாது கலந்து அந்தரியாமியாக இருக்கும் நிலை சரீர - சரீரி பாவனை அல்லது உடல்- உயிர் உறவு என்று கூறப்பெறும். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனின் இச்சிறப்பை

திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்தெங்கும் பரந்துளன்[55]

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனது என்றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே[56]

அங்கிங் கெனாதபடி எங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த மூர்த்தி யாகி[57]

என முறையே நம்மாழ்வார், மணிவாசகர், தாயுமானவர் பாடியிருப்பதையும் காண முடிகிறது.

### அந்தரியாமி நிலையே உயர்ந்தது :

இறை நம்பிக்கை இல்லாதவர்கள் கூட ஏதோ ஒரு சக்தி அனைத்தையும் இயங்கவைக்கிறது என்பதை ஒப்புக் கொள்வதால் அந்தரியாமி நிலையே உயர்ந்தது என்பதைக் காணமுடிகிறது. அதனால்தான் இறைவன் உள்ளுறையும் பொருள்களாகக் காட்டப்படுகிறான். இறைவன் அந்தரியாமியாய் இருக்கின்ற அவ்வப்பொருள்களாலேயே,

பண்ணி னைப் பண்ணில் நின்றதோர் பான்மையைப்
பாலுள் நெய்யினை மாலுரு வாய்நின்ற
விண்ணி னை, விளங் கும் சுடர்ச் சோதியை
வேள்வி யைவிளக் கினொளி தன்னை

என்று சுட்டப்படுவதாலும்

ஏத்து வார்தம் மனத்துள் ளான்

என்று கூறப்படுவதாலும் இறைவனின் அந்தரியாமி நிலையினைப் பெரிதும் புகழ்ந்தனர் மக்கள் என்பதை அறியமுடிகிறது. உள்ளத்துள் உறையும் இறைவனின் அந்தரியாமி நிலையை உணர்ந்து வழிபடுதலே உண்மையான பக்திநெறி என்பதை

நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுஷ்பம் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லும் மந்திரம் ஏதடா !
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை யறியுமோ [58]

என்னும் பாடல் ஒன்று அறிவுறுத்துகின்றது.

### அர்ச்சை நிலை :

அந்தரியாமியாக உள்ள ஆண்டவனை அறிதல் என்பது அறிஞர்கட்கும் ஞானிகட்குமே முடிந்த செயலாகும். சாதாரண மக்களுக்குச் சிலை வழிபாடு ஒன்று தான் சிறந்தவழி. கோயில்களிலும் வீடுகளிலும் அவரவர் விரும்பும் வடிவத்தில் மண்ணாலோ, கல்லாலோ, சுதையாலோ, செம்பாலோ சிலை வடிவில் அமைந்திருப்பது தான் அர்ச்சை நிலை எனப்படும். சிலை வடிவில் வந்து ஆண்டவன் அருள்புரிவதையே அர்ச்சாவதாரம் என்கின்றனர்.

''அன்பர்கள் எதைத் தனக்குத் திருமேனியாகக் கொள்ளுகின்றனரோ அதனையே இறைவன் தனக்கு வடிவமாகவும் அவருகந்து வைத்த பெயரையே தனக்குப் பெயராகவும் கொண்டுள்ள நிலையாகும்''[59]

''இறைவன் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் இன்னாரிடத்தில் தோன்றி சந்நிதி பண்ண வேண்டும் என்கின்ற நியமமில்லாதபடி விரும்பிய எந்த இடத்திலும் எந்தக் காலத்திலும் எவரிடத்திலும் தோன்றிச் சந்நிதி பண்ணி நீராட்டம், தளிகை, இருப்பு முதலிய எல்லாச் செயல்களையும் உடையனவாகக் கொண்டு திவ்விய தேசங்களிலும் அன்பர்களின் திருமாளிகைகளிலும் எழுந்தருளியிருக்கும் நிலையாகும்''[60]

என்பன அர்ச்சை நிலை பற்றிய விளக்கங்களாகும். மேற்கூறியாங்கு, கற்றவரும் கல்லாதாரும் அன்பு கொண்டாரும் அஃது இல்லாதாரும், இறைவனை அறியும் ஞானம் பெற்றவரும் அந்த ஞானம் கைவரப் பெறாதவரும் ஆகிய அனைவர்க்கும் எளிதில் காட்சி நல்க எழுந்த அவதாரமே அர்ச்சாவதாரமாம். இந்த அர்ச்சை நிலையே எளியோர், செல்வர் ஆகிய வேறுபாடின்றி அனைவரும் இருந்த இடத்திலேயே கண்டு வணங்கும் தன்மைக்கு ஏற்றதாகும். இதை படிம வடிவ நிலை என்றும் கூறுவர்.

''வழிபடும் அன்பர்களுக்கு எளிதில் வந்து அருள் செய்வதன் பொருட்டு திருக்கோயில்களிலும் இல்லங்களிலும் அவர்களின் விருப்பத்திற்கிசைந்த வடிவில் எழுந்தருளச் செய்துள்ள வடிவங்களில் இறைவன் தங்கியிருப்பது படிம வடிவ நிலையாகும்''[61] ''வைணவ மரபு இறைவனின் படிம வடிவ நிலைகளை இருபத்து நான்காக வகுப்பினும் இறைவனின் நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம் என மூன்றாகவே பாகுபடுத்திச் சிந்திப்பர் வைணவர்''[62]

என்பன அக்கூற்றுக்களுள் சிலவாம்.

இறைவனின் ஐந்து வகை நிலைகளில் அர்ச்சை நிலையில் ஆழ்வார் அதிகமான ஈடுபாடு கொண்டு இமயம் தொடங்கி தென்னாடு வரையிலுள்ள திருத்தலங்களிலுள்ள அர்ச்சாவதார மூர்த்தியை வழிபட்டிருக்கிறார் என்பது தெளிவாகிறது. அர்ச்சை நிலையிலான வடிவங்களுள் முப்பத்தைந்து தலங்களில் நின்ற திருக்கோல வடிவத்தையும் பன்னிரண்டு தலங்களில் இருந்த திருக்கோல வடிவத்தையும் பதின்மூன்று தலங்களில் கிடந்த திருக்கோல வடிவத்தையும் [63] திருநீர் மலை, திருக்குறுங்குடி ஆகிய தலங்களில் மூன்று திருக்கோல வடிவங்களையும்[64] ஆழ்வார் பாடியுள்ளார்.

எல்லாம் வல்ல பரம்பொருளாகிய இறைவன் பர, வியூக, விபவ, அந்தரியாமி, அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளை உடையவன்; வியூகம்

நால்வகையானது; விபவம், சாட்சாத் அவதாரம், ஆவேச அவதாரம், அமிசாவதாரம் ஆகிய மூன்றாகிப் பத்து அவதாரங்களைக் கொண்டது; இப்பத்து அவதாரமன்றி, இறைவன் அயக்கிரீவ அவதாரமும், அன்ன அவதாரமும் மோகினி அவதாரமும் எடுத்தவன்; திருமங்கையாழ்வார் விபவ நிலையிலுள்ள கிருட்டிணாவதாரத்தில் மிகுந்த ஈடுபாடுடையவர்; பத்து அவதாரங்களின் பெயரும் வரிசை முறையும் ஒரே பாடலில் அமையுமாறு பாடியுள்ளார்; இயங்கும், இயங்காப் பொருள்களில் மறைந்து உறையும் அந்தரியாமி நிலையைப் பாடியுள்ளார்; அர்ச்சை நிலையில் மிகுந்த ஈடு பாடுடையவர் என்பதான கருத்துக்களை அறிந்து கொள்ளும் வண்ணம் பல்வேறு செய்திகளைக் கொண்டதாகத் திகழ்கிறது பெரியதிருமொழி.

## சான்றெண் விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. | பி. ஆர். நரசிம்மன் | *வைணவ மரபும் மெய்ப்பொருளியலும் ப. 84.* |
| 2. | கு. அருணாசலக் கவுண்டர் | *தமிழ்ப் பண்பாட்டில் வைணவம், ப. 36.* |
| 3. | மே. நூ. | *பக். 87-90* |
| 4. | மே. நூ | *ப. 91* |
| 5. | காண்க பிற்சேர்க்கை | 3 |
| 6. | காண்க பிற்சேர்க்கை | 4 |
| 7. | மாருதி தாசன் | *தசாவதாரத் தத்துவங்கள், ப. 9* |
| 8. | தொல்காப்பியம் | *பொருள் - மரபு நூ. 27* |
| 9. | மே. நூ. | *நூ. 29* |
| 10. | மாருதிதாசன் | *மே. நூ. ப. 10* |
| 11. | திருவாசகம் | *சிவ. 26-31* |
| 12. | அரங்க சீனிவாசன் | *வைணவ தத்துவஞான அடிப்படைகள், ப. 201* |
| 13. | காண்க பிற்சேர்க்கை | 5 |
| 14. | ந. சுப்புரெட்டியார் | *முத்தி நெறி, ப. 257* |
| 15. | மே. நூ. | *ப. 256* |
| 16. | ஆர். இராமஸ்வாமி ராமாநுஜதாஸர் | *ஸ்ரீ வைஷ்ணவம், ப. 58* |
| 17. | ந. சுப்புரெட்டியார் | *மு. நூ. பக். 50-51* |

| | | |
|---|---|---|
| 18. | திருவாய்மொழி | *1-3 : 1* |
| 19. | பெரியாழ்வார் திருமொழி | *2-5: 5* |
| 20. | ந. சுப்புரெட்டியார் | *மு. நூ ப. 215* |
| 21. | பெரியாழ்வார் திருமொழி | *3-9 : 5 ; 2-6 : 5;* |
| | திருவாய் மொழி | *3-5 : 7, 3-6:10* |
| 22. | திருவாய்மொழி | *4-3 : 4* |
| 23. | பெரியாழ்வார் திருமொழி | *2-4 : 4* |
| 24. | அண்ணங்காராச்சாரியார் ( உ. ஆ) | *திவ்யார்த்த தீபிகை-1 ப. 117* |
| 25. | உ. வே. சாமிநாதய்யர் (ப. ஆ) | *சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லாருரையும், ப. 641* |
| 26. | சுவாமி சித்பவானந்தர், | *கண்ணன் என்னும் கடவுள், ப. 55* |
| 27. | மே. நூ. | *பக். 55-56* |
| 28. | திருவாய்மொழி | *3-5 : 3* |
| 29. | காண்க பிற்சேர்க்கை | 6 |
| 30. | திருவாய் மொழி | *10-1 : 8* |
| 31. | கம்பராமாயணம் | *சுந்தர: காட்சி; பா. 23* |
| 32. | ஸ்ரீராமுலு தேசிகன், | *தசாவதாரத் தத்துவங்கள் ப. 30* |
| 33. | காண்க பிற்சேர்க்கை | 7 |
| 34. | பெரியாழ்வார் திருமொழி | *4-9 : 8* |
| 35. | காண்க பிற்சேர்க்கை | 8 |
| 36. | ஸ்ரீ ராமுலு தேசிகன் | *மு. நூ ப. 22* |
| 37. | மாருதிதாசன். | *மு. நூ ப. 56* |
| 38. | காண்க பிற்சேர்க்கை | 9 |
| 39. | ஸ்ரீ ராமுலு தேசிகன் | *கோதையும் கோவிந்தனும், ப. 53* |
| 40. | காண்க பிற்சேர்க்கை | 10 |
| 41. | இராமஸ்வாமி ராமாநுஜதாஸர், | *நாராயணனே பரம்பொருள், ப. 45* |

42. மாருதிதாசன் *மு. நூ. பக் 106-107*
43. காண்க பிற்சேர்க்கை 11
44. ஸ்ரீ ராமுலு தேசிகன் *மு. நூ. ப. 19*
45. மாருதிதாசன் *மு. நூ. ப. 170*
46. ஸ்ரீ ராமுலு தேசிகன் *மு. நூ. ப. 49*
47. மாருதிதாசன் *மு. நூ. ப. 24*
48. பெரியாழ்வார் திருமொழி *1-9 : 10*
49. மாருதிதாசன் *மு. நூ பக். 36-37*
50. ஸ்ரீ லக்ஷ்மி நாராயண ராமாநுஜதாஸன் *நாராயணனைப் பாடிய நம் ஆழ்வார்கள், ப.17.*
51. ந. சுப்புரெட்டியார் *மு. நூ ப. 68*
52. மே. நூ. மே. ப.
53. காண்க பிற்சேர்க்கை 12
54. பெரிய திருமொழி *2-9 : 1; 4-5 : 8, 9; 4-6 : 9*
55. திருவாய் மொழி *1-1 : 2*
56. திருவாசகம் *அறிவுறுத்தல், பா. 5*
57. தாயுமானவர் *பா. 1*
58. த. கோவிந்தன் (ப. ஆ) *சித்தர் பாடல்கள், பா. 71*
59. ந. சுப்புரெட்டியார் *மு. நூ ப. 70*
60. மே. நூ. மே. ப.
61. பி. ஆர். நரசிம்மன் *மு. நூ ப. 90*
62. மே. நூ. மே. ப.
63. காண்க பிற்சேர்க்கை 13
64. காண்க பிற்சேர்க்கை 14

***

# தொகுப்புரை

இறைபணியே நிறைபணி என்னுமாறு வாழ்வாங்கு வாழ்ந்தவர் திருமங்கையாழ்வார். மன்னராய் விளங்கி, மன்னாது பொருட்செல்வம் என்பது தெளிந்து, அருட்செல்வம் ஒன்றையே கருத்திலிருத்தி தமக்கெனத் தனித்தகுதியை ஆக்கிக் கொண்டார் அவர். ஆறலைக் கள்வராக அவர் ஆனமைகூட அரங்கனின் உளங்கவர் கள்வனாக ஆதற்பொருட்டே என்பதை உணர்கின்றபோது அவர் மேற் கொண்டது சத்தியவழி, முத்தி இன்பம் நல்கும் நித்திய வழி என்பதை அறிந்திடவியலும்.

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழிப் பாடல்களின் எண்ணிக்கை நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழிப் பாடல்களின் எண்ணிக்கையை விடக் குறைவாக இருப்பினும் 'பெரிய' என்னும் அடைமொழி பெற்று விளங்குவது அதன் மேம்பாட்டைக் காட்டுவதாக உள்ளது. வைணவ மறையாகக் கருதப்படுகின்ற காரணத்தால் திருவாய்மொழி என்னும் சிறப்பை நம்மாழ்வார் நூல் பெறுகிறது. திருமங்கையாழ்வார் வாழ்ந்த காலம் பற்றிய கருத்துக்கள் வெவ்வேறாக இருப்பினும், கி. பி. எட்டாம் நூற்றாண்டு தான் அவர் வாழ்ந்த காலம் என்பது அறியக் கிடக்கிறது. அதிக அளவிலான திருத்தலங்களையும் அர்ச்சா மூர்த்திகளையும் வருணித்திருப்பதால் திருமால் எழுந்தருளியுள்ள தலங்களைப் போற்றும் முறையில் அமைவதோடன்றி அந்தந்தத் தலம், மூர்த்தி பற்றிய பல்வேறு செய்திகளையும் பெரிய திருமொழி அளிக்கிறது.

திருவெட்டெழுத்தின் சிறப்பினையும் அதனை ஓதுவதால் விளையும் நலங்களையும் விரித்துரைக்கும் நிலையில் பாடல்கள் அமைந்துள்ளன. ஆறடிகளாலான பாடல்கள் ஒவ்வொன்றும் இரு பகுதிகளாகி, முதல் பகுதி கலிவிருத்த அமைப்புடனும் தொடர்ந்து வரும் பகுதி தாழிசை வடிவுடனும் பாடல் தோறும் மீண்டும் வருகின்ற 'மேல்வைப்பு' என்னும் புதுவகையானதொரு யாப்பு முறை கையாளப்படுகிறது. சாழல் பாட்டு, கோல்தும்பி ஆகிய இருவகைப் பாடல் அமைப்பும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பெரிய திருமொழியில் மட்டுமே காணப்படுகிறது. குழமணிதூரம், பொங்கத்தம் பொங்கோ என்னும் இருவகைப் பாடல் அமைப்பு வேறு எந்த ஆழ்வாராலும் பாடப்பெறவில்லை. எந்த இலக்கியத்திலும் இடம் பெறவில்லை. முன்னர் வருகின்ற அடி பின்னரும்

அப்படியே மடங்கி வருமாயின் மடக்கணி என்று இலக்கணம் கூறியிருக்க, ஆழ்வார் தம் பாடல்களில் இரண்டாமடியில் நான்கு சீர்கள் வர, அவை மடங்கிய நிலையில் மூன்றாமடியில் மூன்று சீர்கள் வரும்படிப் பாடியிருப்பது தனிப்பட்ட ஓர் உத்தியைக் கையாண்டுள்ளமைக்குச் சான்றாகிறது.

திருமங்கையாழ்வார் ஏனைய ஆழ்வார்களைக் காட்டிலும் இயற்கையை அதிகமாக வருணித்துள்ளார். இறைவனைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கொண்டு ஆழ்வார் பெற்ற அருளின்பம் அகப்பொருட்டுறையில் எடுத்துரைக்கப்படுகிறது. தொல்காப்பியர் உள்ளிட்ட இலக்கண ஆசிரியர்கள் கூறுகின்ற அகத்திணைக் கூறுகள் இந்நூலில் உள்ளன. ஆனால் களவொழுக்கம் நிகழும் காலத்தில் தன் மகள் பொருட்டு நற்றாய் தலைவனிடம் உரையாடும் செய்தி பற்றிய குறிப்பு தொல்காப்பியத்திலோ பிற அக இலக்கியங்களிலோ காணப் -பெறா நிலையில் பெரிய திருமொழியில் மகளின் காதலை தாய் தலைவனிடம் முறையீடு செய்வதாகப் பாடல்கள் அமைகின்றன. உடன்போகிய தலைவனும் தலைவியும் கற்பு வாழ்க்கையில் ஈடுபட்டதாக எவ்விதச் செய்தியும் இடம் பெறவில்லையாயினும் கற்பு வாழ்க்கைக்குரிய துறைகள் இடம் பெறுகின்றன. மேலும் மனித வாழ்க்கைக்குரிய பண்புகளான ஊடல், வாயில் மறுத்தல் ஆகியவை அஃறிணை உயிர்களிடத்தும் உண்டு என்பது சுட்டப்படுகிறது.

திருமங்கையாழ்வார் மறு பிறவி, சொர்க்கம், நரகம் பற்றிய நம்பிக்கையுடையவர் என்பதும் பெரிய திருமொழிப் பாடல்களின் விசிட்டாத்து -வைதக் கோட்பாடு இராமாநுசருக்கு வழிகாட்டியாய் அமைந்தது என்பதும் திருமாலின் பத்து அவதாரங்களுள் கிருட்டிணாவதாரமே பெரிதும் பேசப்படுகிறது என்பதும் பிறந்த சில நாட்களிலேயே வெளிப்பட்ட கிருட்டிணனுடைய தீரச் செயல்கள்அவன் வளர்ந்து பெரியவனான நிலையிலும் தொடர்ந்து கொண்டேயிருந்ததால் அவ்வவதாரத்தில் ஆழ்வார் மிகுதியான ஈடுபாடு கொண்டார் என்பதும் பெறப்படுகிறது. சோமுகன் என்னும் அசுரனைக் கொன்று மறைகளை மீட்பதற்காக எடுத்த அவதாரத்தை மச்சாவதாரம் என்றும் அன்ன அவதாரம் என்றும் அயக்கிரீவ அவதாரம் என்றும் மூன்று விதமாகக் குறிப்பிடுவர். திருமங்கையாழ்வார் அம்மூன்று அவதாரங்களையும் பெரியதிருமொழியில் பாடியுள்ளார். கல்கியவதாரம் பற்றிய செய்தி திருவாய்மொழியில் ஒரேயொரு பாடலில் தான் இடம் பெறுகிறது. ஆனால் பெரிய திருமொழி கல்கியவதாரத்தை நான்கு பாடல்களில் குறிப்பிடுகிறது.

## பெரிய திருமொழி

உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வாக்கினில் ஒளி உண்டாகும் என்பதற்கேற்ப, ஆழ்வார் மனத்தகத்து அரும்பிப் பூத்த பாமலர்கள் அருள் மணம் கமழ்வனவாய் அமைந்து பெயருக்கேற்றாற் போல் பெருமைக்குரிய அழகிய மொழியாய் விளங்குகிறது. பக்தி இலக்கியங்களில் இயற்கை வருணனை, அகப் பொருளமைதி, உலகியல், மெய்ப்பொருள், இறைநிலை ஆகியவை பற்றிய செய்திகளை அறியத் துணை நிற்கும் அரிய நூலாகப் பெரிய திருமொழி விளங்குகிறது எனலாம்.

***

## பிற்சேர்க்கை - 1

## வைணவத் திருத்தலங்கள் - 108

### 1. சோழ நாட்டுத் திருப்பதிகள் -40

*1. திருவரங்கம்
*2. திரு அரிமேய விண்ணகரம்
3. திரு அன்பில்
4. திருஆதனூர்
*5. திரு இந்தளூர்
6. திருக்கண்டியூர்
*7. திருக்கண்ணங்குடி
*8. திருக்கண்ணபுரம்
*9. திருக்கண்ண மங்கை
*10. திருக்கரம்பனூர்
*11. திருக்கவித்தலம்
*12. திருக்காவளம்பாடி
*13. திருக்காழிச்சீராம விண்ணகரம்
*14. திருக்குடந்தை
*15. திருக்கூடலூர்
*16. திருக்கோழி
*17. திருச்சித்ரகூடம்
*18. திருச்சிறுபுலியூர்
*19. திருச்செம்பொன்செய் கோவில்
*20. திருச்சேறை
*21. திருத்தஞ்சை மாமணிக்கோவில்
22. திருத்தலைச்சங்க நாண்மதியம்
*23. திருத்தெற்றியம்பலம்
*24. திருத்தேவனார் தொகை
*25. திருநந்திபுர விண்ணகரம்
*26. திருநறையூர்
*27. திருநாகை
*28. திருப்பார்த்தன்பள்ளி
*29. திருப்புள்ளம்பூதங்குடி
*30. திருப்பேர்நகர்
*31. திருமணிக்கூடம்
*32. திருமணிமாடக்கோவில்
*33. திருவண்புருடோத்தமம்
*34. திருவழுந்தூர்
*35. திருவாலியும் திருநகரியும்
*36. திருவிண்ணகர்
*37. திருவெள்ளக்குளம்
*38. திருவெள்ளறை
*39. திருவெள்ளியங்குடி
*40. திருவைகுந்த விண்ணகரம்

## நடுநாட்டுத் திருப்பதிகள் - 2

*41. திருக்கோவலூர்
42. திருவயிந்திரபுரம்

## தொண்டை நாட்டுத் திருப்பதிகள் - 22

*43. திரு அட்டபுயகரம்
*44. திருவிடவெந்தை
45. திரு ஊரகம்
*46. திருஎவ்வுள்
*47. திருக்கச்சி
*48. திருக்கடல்மல்லை
49. திருக்கடிகை
50. திருக்கள்வனூர்
51. திருக்காரகம்
52. திருக்கார்வானம்
*53. திருத்தண்கா
54. திருநிவாத்திங்கள் துண்டம்
*55. திருநின்றவூர்
56. திருநீரகம்
*57. திருநீர்மலை
*58. திருப்பரமேச்சுர விண்ணகரம்
59. திருப்பவள வண்ணம்
*60. திருப்பாடகம்
*61. திருப்புட்குழி
*62. திருவல்லிக்கேணி
*63. திருவெஃகா
*64. திருவேளுக்கை

## வடநாட்டுத் திருப்பதிகள்-11

65. திருக்கடிநகர்
*66. திருச்சாளக்ராமம்
*67. திருச்சிங்கவேள் குன்றம்
*68. திருத்வாரகை
*69. திருநைமிசாரண்யம்
*70. திருப்பிருதி
*71. திருவடமதுரை
*72. திருவதரியாச்ரமம்
*73. திருவயோத்தி
*74. திருவாய்ப்பாடி
*75. திருவேங்கடம்

## மலைநாட்டுத் திருப்பதிகள்-13

76. திருக்கடித்தானம்
77. திருக்காட்கரை
78. திருச்செங்குன்றூர்
*79. திருநாவாய்
80. திருப்புலியூர்
*81. திருமூழிக்களம்

82. திருவண்பரிசாரம்
83. திருவண்வண்டூர்
*84. திருவல்லவாழ்
85. திருவனந்தபுரம்
86. திருவாட்டாறு
87. திருவாறன்விளை
88. திருவித்துவக்கோடு

## பாண்டிய நாட்டுத் திருப்பதிகள்-18

89. திருக்குருகூர்
90. திருக்குளந்தை
*91. திருக்குறுங்குடி
*92. திருக்கடல்
*93. திருக்கோட்டியூர்
94. திருக்கோளூர்
95. திருச்சிரீவரமங்கை
*96. திருத்தண்கால்
97. திருத்தொலைவில்லி மங்கலம்
*98. திருப்புல்லாணி
99. திருப்புளிங்குடி
*100. திருப்பேரை
*101. திருமாலிருஞ்சோலை
*102. திருமெய்யம்
103. திருமோகூர்
104. திருவரகுணமங்கை
105. திருவில்லிபுத்தூர்
106. திருவைகுண்டம்

## *நிலவுலகில் பார்க்க முடியாத தலங்கள்-2*

107. திருப்பரம்மபதம்
108. திருப்பாற்கடல்

**இவ்வட்டவணைக்காகப் பின்பற்றப்பட்ட புத்தகம்:**

**ஸ்ரீ வைஷ்ணவ திவ்யதேச வைபவமும் புராண - அபிமான ஸ்தலங்களும்,**

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை, 1986

* குறியீடுகள் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் பாடியுள்ள தலங்களைக் குறிப்பன.

## பிற்சேர்க்கை -2

### <u>பகுப்பு முறை</u>

| பத்து | திருமொழி | பாடல்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | 1-10 | 100 |
| 2 | 1-10 | 100 |
| 3 | 1-10 | 100 |
| 4 | 1-10 | 100 |
| 5 | 1-10 | 100 |
| 6 | 1-10 | 100 |
| 7 | 1-10 | 100 |
| 8 | 1-10 | 100 |
| 9 | 1-10 | 100 |
| 10 | 1-6 | 60 |
| | 7 | 14 |
| | 8-10 | 30 |
| 11 | 1-8 | 80 |

பதினொரு பத்துக்கள்
நூற்றெட்டுத் திருமொழிகள்
ஆயிரத்து எண்பத்து நான்கு பாடல்கள்

# பிற்சேர்க்கை-3

## இறைவனின் பரமபத நிலை

1. பந்தி ருக்கும் மெல்விரலாள் பாவை பனிமலராள்
வந்தி ருக்கும் மார்வன் நீலமேனி மணிவண்ணன் 2-2:9

2. இன்துணைப் பதுமத் தலர்மகள் தனக்கும்
இன்பன்நற் புவிதனக் கிறைவன் 2-3:5

3. தூவடிவின் பார்மகள்பூ மங்கையோடு
சுடராழி சங்கிருபால் மெலிந்து தோன்ற 2-10:9

4. பூமங்கை தங்கிப் புலமங்கை மன்னிப்
புகழ்மங்கை யெங்கும் திகழ 3-2:5

5. திருமடந்தை மண்மடந்தை யிருபாலும் திகழத்
தீவினைகள் போயகல அடியவர்கட் கென்றும்
அருள் நடந்துஇவ் வேழுலகத் தவர்பணிய வானோர்
அமர்ந்தேத்த இருந்த 3-10:1

6. பேரணிந் துலகத் தவர்தொழு தேத்தும்
பேரரு ளாளனெம் பிரானை
வாரணி முலையாள் மலர்மக ளோடு
மண்மக ளும்உடன் நிற்ப 4-3:1

7. உலகமேத்தும் ஒருவனென்றும்
ஒண்சுடரோ டும்பரெய்த
நிலவுமாழிப் படையன் என்றும்
நேசன் என்றும் 4-8:8

8. நேமி யங்கை மாயன்இடம் 5-1:5

9. சங்கமிடத்தானைத் தழலாழி வலத்தானை 7-6.1

10. நெய்யா ராழியும் சங்கமு மேந்தும் 7-7:3

11. பந்தார் மெல்விரல் நல்வளைத் தோளி
பாவை பூமகள் தன்னொடு 7-7:2

# பிற்சேர்க்கை -4

## வியூக நிலை

| பத்து | திருமொழி | பாடல் |
|---|---|---|
| 1 | 6 | 6, 9 |
| | 8 | 2 |
| 2 | 5 | 10 |
| | 10 | 2 |
| 3 | 2 | 4 |
| | 5 | 2 |
| | 6 | 7 |
| 4 | 10 | 4 |
| 5 | 4 | 2 |
| | 9 | 10 |
| 7 | 5 | 7 |
| | 8 | 1 |
| | 10 | 8 |
| 8 | 3 | 2 |
| | 10 | 7 |
| 9 | 6 | 2 |
| | 8 | 2 |
| | 9 | 1 |

## பிற்சேர்க்கை-5 கிருட்டிணாவதாரம்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 : 3 | 2 : 3 | 1 : 5 | 1 : 9 | 1 : 3 | 2 : 6 | 1 : 4 | 1 : 4 | 1 : 8 | 1 : 7, 9 | 1 : 1 |
| 3 : 1 | 4 | 8 | 2 : 2, 3 | 5 | 9 | 3 : 2 | 2 : 5 | 9 | 4 : 1, 2 | 4 |
| 4 | 3 : 1 | 9 | 4, 5 | 6 | 5 : 4 | 4 | 3 : 2 | 6 : 5 | 3, 5 | 2 : 1 |
| 4 : 5 | 3 | 2 : 7 | 3 : 7 | 7 | 5 | 5 | 4 | 7 : 5 | 7, 8 | 2 |
| 6 | 4 | 8 | 8 | 8 | 6 | 4 : 1 | 5 | 8 : 4 | 9 | 3 |
| 5 : 5 | 5 | 3 : 1 | 4 : 1, 2 | 10 | 8 | 2 | 4 : 7 | 10 | 5 : 1, 2 | 5 |
| 6 | 6 | 2 | 3, 4 | 2 : 1 | 9 | 5 : 1 | 5 : 1 | 9 : 8 | 3, 4 | 6 |
| 8 : 1 | 4 : 2 | 3 | 5 | 2 | 6 : 7 | 2 | 3 | | 5, 6 | 10 |
| 2 | 3 | 4 | 5 : 1 | 3 | 8 | 6 : 4 | 6 : 6 | | 7, 8 | 3 : 1 |
| 3 | 4 | 5 | 2 | 4 | 7 : 4 | 5 | 8 | | 9 | 4 |
| 4 | 7 | 6 | 3 | 4 : 6 | 5 | 7 : 5 | 9 | | 6 : 1, 2 | 4 : 8 |
| 10 : 4 | 5 : 1 | 7 | 4 | 7 | 7 | 6 | 7 : 2 | | 3, 4 | 9 |
| 7 | 2 | 4 : 4 | 6 : 1 | 5 : 3 | 8 | 7 | 3 | | 5, 7 | 10 |
| | 3 | 5 | 5 | 4 | 8 : 7 | 8 : 5 | 4 | | 8, 9 | 5 : 2 |
| | 4 | 8 | 6 | 5 | 8 | 8 | 8 : 9 | | 10 | 3 |
| | 5 | 6 : 5 | 7 | 6 | 9 : 3 | 9 | 9 : 3 | | 7 : 1, 2 | 4 |
| | 6 | 6 | 8 | 7 | 4 | 10 : 4 | 10 : 4 | | 3, 4 | 5 |
| | 7 | 8 : 5 | 7 : 3 | 6 : 6 | 10 : 2 | 8 | | | 5, 6 | 6 |
| | 10 | 6 | 4 | 10 | 3 | | | | 7, 8 | 7 |
| | 6 : 7 | 7 | 7 | 7 : 8 | 5 | | | | 9, 10 | 8 |

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 8 : 3 | 8 | 8 : 1 | 9 | 8 | | | | 11 | 6 : 10 |
| | 4 | 9 | 2 | 8 : 7 | | | | | 12 | 7 : 2 |
| | 9 : 5 | 9 : 6 | 3 | 8 | | | | | 13 | 3 |
| | 9 | 7 | 10 : 1 | 9 : 7 | | | | | 14 | 8 |
| | 10 : 3 | 10 : 3 | 2 | 8 | | | | | 8 : 3, 6 | 9 |
| | 4 | 7 | 3 | 10 :1 | | | | | 7, 8,9 | 8 : 6,7 |
| | 6 | 8 | 4 | | | | | | 9 : 1, 2 | 9 : 7 |
| | 7 | 9 | 5 | | | | | | 3 | 10 : 7 |
| | 8 | 10 | | | | | | | 10 : 3 | 8 |
| 13 | 29 | 29 | 32 | 26 | 21 | 18 | 17 | 7 | 50 | 30 |

272

## பிற்சேர்க்கை-6 இராமாவதாரம்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 : 6 | 2 : 2 | 1 : 6 | 1: 8 | 1 : 3 | 2 : 6 | 1 : 5 | 5 : 5 | 1 : 7 | 2 : 1 | 1 : 1 |
| 2 : 1 | 3 | 7 | 2 : 1 | 4 | 3 : 5 | 3 : 1 | 6 | 10 | 2 | 6 |
| 2 | 3 : 1 | 2 : 6 | 3 : 5 | 3 : 7 | 4 : 6 | 4 | 7 | 4 : 5 | 3 | 2 : 4 |
| 4 : 1 | 7 | 3 : 6 | 6 | 4 : 4 | 5 : 3 | 9 | 6 : 1 | 5 : 10 | 4 | 3 : 1 |
| 2 | 4 : 5 | 4 : 6 | 4 : 6 | 5 | 1 : 1 | 4 : 3 | 2 | 6 : 4 | 5 | 4 : 7 |
| 3 | 5 : 6 | 7 | 5 : 2 | 5 : 2 | 3 | 4 | 3 | 10 | 6 | 10 |
| 8 | 7 | 5 : 5 | 5 | 6 : 5 | 8 : 5 | 5 : 3 | 4 | 8 : 4 | 7 | 5 : 1 |
| 5 : 1 | 9 | 9 : 4 | 6 : 3 | 7 : 7 | 9 : 2 | 6 : 3 | 6 | 5 | 8 | |
| 2 | 7 : 6 | 5 | 4 | 8 | 10 : 1 | 8 : 7 | 7 | 10 : 6 | 9 | |
| 4 | 9 : 8 | 10 : 6 | 7 : 6 | 8 : 1 | 4 | 10 : 8 | 7 : 5 | | 10 | |
| 5 | 10 : 5 | | 8 : 4 | 2 | 5 | | 8 : 7 | | 3 : 1 | |
| 8 : 5 | | | 5 | 9 : 6 | 6 | | 9 : 3 | | 2 | |
| 10: 1 | | | 9 : 2 | 10: 6 | | | | | 3 | |
| 2 | | | 6 | | | | | | 4 | |
| | | | | | | | | | 6 | |
| | | | | | | | | | 7 | |
| | | | | | | | | | 8 | |
| | | | | | | | | | 9 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | 10<br>6 : 7<br>8<br>9<br>9 : 1<br>6<br>8 | |
| 14 | 11 | 10 | 14 | 13 | 12 | 10 | 12 | 9 | 25 | 7 |

137

## பிற்சேர்க்கை-7 நரசிம்மாவதாரம்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 : 4 | | 1 : 4 | 1: 7 | 1 : 8 | 5 : 2 | 2 : 2 | 3 : 6 | 4 : 4 | 1 : 4 | 1 : 5 |
| 4 : 8 | 3 : 8 | 3 : 8 | 2 : 7 | 3 : 3 | 6 : 4 | 3 : 9 | 4 : 4 | 9 : 4 | 6 : 3 | 4 : 4 |
| 5 : 7 | 4 : 2 | 4 : 4 | 10 : 8 | 4 : 8 | 5 | 4 : 5 | 8 : 4 | | 4 | 7 : 4 |
| 7 : 1 | 4 | 9 : 1 | | 6 : 4 | 8 : 4 | 6 : 1 | 10 : 8 | | 9 : 8 | |
| 7 : 2 | 7 | 2 | | 7 : 5 | | 7 : 5 | | | | |
| 7 : 3 | 5 : 7 | 10 : 4 | | 9 : 5 | | 8 : 5 | | | | |
| 4 | 8 | | | | | | | | | |
| 5 | 10 | | | | | | | | | |
| 7 | 7 : 10 | | | | | | | | | |
| 8 | 8 : 1 | | | | | | | | | |
| 8 : 6 | 9 : 1,6 | | | | | | | | | |
| 10: 5 | | | | | | | | | | |
| 12 | 11 | 6 | 3 | 6 | 4 | 6 | 4 | 2 | 4 | 3 |

## பிற்சேர்க்கை-8 வாமனாவதாரம்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 5 : 6<br>8 : 5<br>10 : 4 | 4 : 2<br>5 : 6<br>7 : 2<br>8 : 2<br>9 : 7 | 2 : 4<br>4 : 1<br>6 : 5<br>10 : 5 | 2 : 6<br>3 : 4<br>4 : 7<br>6 : 2<br>9 : 3<br>10 : 7 | 1 : 1<br>2<br>2 : 4<br>3 : 9<br>4 : 3<br>8<br>6 : 4<br>7 | 6 : 5<br>7 : 3<br>8 : 1<br>10 : 1<br>2 | 8 : 6 | 4 : 7<br>7 : 5<br>8 : 5<br>10 : 8 | 1 : 5<br>4 : 2<br>7 : 3<br>8 : 3<br>9 : 5 | 6 : 4<br>5<br>10 : 4 | 3 : 1<br>6<br>4 : 5<br>5 : 9<br>10 |
| 3 | 5 | 4 | 6 | 8 | 5 | 1 | 4 | 5 | 3 | 6 |

50

## பிற்சேர்க்கை-9

வராகம்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 : 4<br>4 : 1 | 5 : 6<br>6 : 3 | 1 : 1<br>2 : 3<br>4 : 3 | 4 : 8<br>6 : 2<br>7 : 8<br><br>10 : 10 | 3 : 5<br>4 : 8<br>6 : 3 | 10 : 1<br>2 | 2 : 1<br>4 : 6<br>8 : 4 | 8 : 3 | 1 : 4<br>2 : 10 | | 4 : 3<br>7 : 6 |
| 2 | 2 | 3 | 4 | 3 | 2 | 3 | 1 | 2 | - | 2 |

24

பரசுராமன்

## பிற்சேர்க்கை-10

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 4 : 6 | 2 : 5<br>4 : 5 | | 3 : 1<br>7 : 6 | 7 : 2<br>10 | 2 : 7<br>6 : 2 | 5 : 8<br>7 : 6<br>8 : 6 | 1 : 6 | 6 : 8<br>9 : 7 | 4 : 6 |
| | 1 | 2 | - | 2 | 1 | 2 | 3 | 1 | 2 | 1 |

15

மச்சம்

## பிற்சேர்க்கை-10

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 7 : 10 | - | - | 4 : 8 | 8 : 2 | - | 4 : 4<br>8 : 1 | 1 : 3<br>2 : 10 | - | 4 : 1 |
| - | 1 | - | - | 1 | 1 | - | 2 | 2 | - | 1 |

8

# பிற்சேர்க்கை-11

கூர்மம்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 7 : 10 | - | - | 3 : 6<br>4 : 8 | - | - | 4 : 4<br>5<br>8 : 2 | - | - | 4 : 2 |
| - | 1 | - | - | 2 | - | - | 3 | - | - | 1 |

7

கல்கி

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 5 : 3 | - | - | - | - | 7 : 5 | 4 : 7<br>8 : 10 | - | - | - |
| - | 1 | - | - | - | - | 1 | 2 | | | |

4

பலராமன்

| I | II | III | IV | V | VI | VII | VIII | IX | X | XI |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| - | - | - | - | - | - | 8 : 8 | - | - | 7 : 4 | - |
| | | | | | | 1 | | - | 1 | |

2

# பிற்சேர்க்கை - 12

## இயங்கும், இயங்காப் பொருள்களில் இறைவனின் அந்தரியாமி நிலை

| பத்து | திருமொழி | பாடல் எண் |
|---|---|---|
| 1 | 5 | 3, 7 |
| | 8 | 5 |
| 2 | 2 | 7 |
| | 9 | 2 |
| 3 | 6 | 3 |
| 4 | 3 | 3 |
| | 5 | 6, 7 |
| | 9 | 5 |
| 5 | 6 | 3 |
| | 7 | 1, 2 |
| | 10 | 1 |
| 6 | 1 | 6 |
| | 4 | 1, 2 |
| 7 | 5 | 5 |
| | 10 | 9 |

## பிற்சேர்க்கை - 13

### நின்ற திருக்கோலம்

1. திருக்குறுங்குடி
2. திரு அரிமேய விண்ணகரம்
3. திருக்கண்ணங்குடி
4. திருக்கண்ணபுரம்
5. திருக்கண்ணமங்கை
7. திருக்காழிச் சீராமவிண்ணகரம்
8. திருக்கூடலூர்
9. திருச்செம்பொன்செய்கோவில்
10. திருச்சேறை
11. திருத்தேவனார் தொகை
12. திருநறையூர்
13. திருநாகை
14. திருப்பார்த்தன்பள்ளி
15. திருமணிக்கூடம்
16. திருவண்புருடோத்தமம்
17. திருவழுந்தூர்
18. திருவிண்ணகர்
19. திருவெள்ளக்குளம்
20. திருவெள்ளறை
21. திருவயிந்திரபுரம்
22. திருக்கோவலூர்
23. திருவட்டபுயகரம்
24. திருவிடவெந்தை
25. திருத்தண்கா
26. திருவல்லிக்கேணி
27. திருச்சாளக்கிராமம்
28. திருநைமிசாரணியம்
29. திருவேங்கடம்
30. திருநாவாய்
31. திருவல்லவாழ்
32. திருப்புல்லாணி
33. திருமாலிருஞ்சோலை
34. திருமெய்யம்
35. திருத்தண்கால்

## இருந்த திருக்கோலம்

1. திருச்சித்திரக்கூடம்
2. திருத்தஞ்சை மாமணிக்கோவில்
3. திருநந்திபுர விண்ணகரம்
4. திருமணிமாடக் கோவில்
5. திருவாலி
6. திருநகரி
7. திருவைகுந்த விண்ணகரம்
8. திருப்பரமேச்சுர விண்ணகரம்
9. திருச்சிங்கவேள் குன்றம்
10. திருப்பேரை
11. திருவதரியாச்சரமம்
12. திருக்கூடல்

## கிடந்த திருக்கோலம்

1. திரு இந்தளூர்
2. திருக்கரம்பனூர்
3. திருச்சிறுபுலியூர்
4. திருத்தெற்றியம்பலம்
5. திருப்புள்ளம்பூதங்குடி
6. திருப்பேர்நகர்
7. திருவெள்ளியங்குடி
8. திருவெவ்வுள்
9. திருக்கடல் மல்லை
10. திருவெஃகா
11. திருப்பிருதி
12. திருக்கோட்டியூர்
13. திருவரங்கம்

## பிற்சேர்க்கை - 14

### *திருநீர் மலை தனிச்சிறப்புடையது*

பெருமாள் கீழே ஒருவராகவும் மலை மேலே மூவராகவும் (நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என்ற திருப்பெயர்களில்) நான்கு திருக் கோலங்களில் எழுந்தருளியிருக்கிறார்.

(லிப்கோ பதிப்பகத்தார், 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச வைபவமும் புராண- அபிமான ஸ்தலங்களும், தி லிட்டில் ப்ளவர் கம்பெனி. சென்னை, 1986. ப.68)

இதை பெரிய திருமொழி,

நின்ற நம்பி இருந்த நம்பி
கிடந்த நம்பி நடந்த நம்பி

என்று புகழக் காண்கிறோம்.

| | | |
|---|---|---|
| *மலை அடிவாரக் கோவில்* | - | *நின்ற திருக்கோலம்* |
| *மலைமேல் கோவில்* | - | *இருந்த கோலம்* |
| | | *கிடந்த கோலம்* |
| | | *நின்ற கோலம்* |

திருக்குறுங்குடி

நின்ற நம்பி கிடந்த நம்பி
இருந்தநம்பி நடந்த நம்பி

***

# திருமாலின் காத்தற் பண்புக்குச் சான்றாகும் கதைகள்

## 1. தசாவதாரத்தில் இராமனாகத் தோன்றி மனைவியைப் பிரிந்தமை

அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் நடந்த போரில் அசுரர்கள் வென்றனர். தோல்வி கண்ட தேவர்கள் அச்சம் கொண்டு திருமாலிடம் சென்று அசுரர்களின் கொடுமைகளை எடுத்துச் சொல்லி தம்மைக் காக்குமாறு வேண்டினர். காக்கும் கடவுளான அவரும் காப்பதாகக் கூறி அவர்களைத் தேற்றினார்.

தேவர்களுக்குத் திருமால் அடைக்கலம் அளித்த செய்தி அசுரர்களுக்கு எட்டியது. அவர்கள் ஒருங்கு கூடி ஆலோசனை செய்தனர். திருமால் தங்களை முற்றுமாக அழித்து விடுவார் என்று அஞ்சினர். எனவே பிருகு முனிவரின் மனைவியான காவ்யமாதாவிடம் சரணடைய முடிவெடுத்தார்கள். அசுரர்களின் குருவான சுக்கிராச்சாரியார் காவ்ய மாதாவின் மகனாகையால் காவ்ய மாதாவிடம் அடைக்கலமாவதே நல்லது என்று நினைத்தார்கள். அந்நினைப்பிற்கு பிறிதொரு காரணமும் உண்டு. பிருகு முனிவருக்கும் காவ்ய மாதாவுக்கும் பிறந்தவள் தான் பார்கவி என்னும் மகாலக்ஷ்மி. அந்த மகாலக்ஷ்மியை மணந்து கொண்டவர் திருமால். திருமாலின் மாமியாராகிய காவ்யமாதாவைச் சரணடைந்தால் தாங்கள் காப்பாற்றப்படுவோம் என்று கருதி அவளைச் சந்தித்தார்கள். அவளும் காப்பதாக உறுதியளித்தாள்.

அசுரர்கள் பின்னர் பிருகு முனிவரின் ஆசிரமத்தில் அச்சமில்லாமல் தங்கியிருந்தனர். இதையறிந்த திருமால் ஆசிரமத்துக்கு விரைந்து வந்து காவ்ய மாதாவிடம் அசுரர்களை வெளியில் அனுப்புமாறு கேட்டுக் கொண்டார். காவ்ய மாதா பணிவாகப் பேசி அசுரர்களிடம் கருணை காட்டும்படி வேண்டிக் கொண்டாள். நம்பியவர்களைக் காப்பது தன்னுடைய கடமை என்றும் சொல்லி அசுரர்களை அழிக்கும் நோக்கத்தைக் கைவிடுமாறு கேட்டுக் கொண்டாள். அசுரர்களால் மக்களுக்கும் தேவர்களுக்கும் ஏற்பட்ட இன்னல்கள் அனைத்தையும் எடுத்துக் கூறி அவர்களைக் காப்பது அறமன்று என்றார். காவ்யமாதா கேட்காதது கண்டு கோபமடைந்த திருமால் தம் சச்கராயுதத்தை எடுத்து அசுரர்களையும் காவ்யமாதாவையும் கொல்லுமாறு கூற, சக்கரம் சுழன்று காவ்ய மாதாவையும் அசுரர்களையும் அழித்தது.

திருமாலால் தம் மனைவி கொல்லப்பட்டதை அறிந்த பிருகு முனிவர் அளவற்ற கோபம் கொண்டு ''திருமாலே! குற்றமற்ற என் மனைவியைக் கொன்று விட்டாய். பிடிசாபம் ''என்று வெகுண்டு ''நீ பூவுலகில் பல பிறவிகள் எடுப்பாய்.

ஒரு பிறப்பில் இப்போது நான் என் மனைவியை இழந்ததைப் போல, நீயும் மனைவியை இழந்து துன்புறுவாய்'' என்று சாபமிட்டார். அப்போது வானில் ஓர் அசரீரி எழுந்தது. ''திருமாலே! கலங்க வேண்டாம். சாபவிமோசனத்துக்கு நீ தென்னாடு செல். அங்கு வேகவதி நதியின் வடக்கு எல்லையில் மதுரைக்குத் தென்கிழக்கு திசையில், யானை மலைக்குக் கீழ்ப்பாகத்தில் சாம்யாக வனத்திலுள்ள சுயம்புலிங்கத்தை பூஜை செய்வாயாக'' என்று கூறியது அது. அசரீரி குறிப்பிட்ட இடத்துக்கு விரைந்த திருமால் அங்கு ஒரு குளம் இருப்பதையும் அக்குளத்தின் நடுவில் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை இருப்பதையும் கண்டார். சிவலிங்கம் எதுவும் அவ்விடத்துக் காணப்படாததால் தம் பெயருக்கேற்ப (நாராயணர், நாரம்=நீர்,அயணர் = இருப்பிடமாகக் கொண்டவர்) தண்ணீர் வடிவம் எடுத்து குளத்தில் கலந்தார். பல காலம் தவமியற்றினார்.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு ஒரு பசு அக்குளத்திற்கு வந்தது. குளத்தின் நடுவிலிருந்த ஆயிரம் இதழ்த் தாமரை மலர்மீது தன் பாலைச் சொரிந்து திடீரென்று மறைந்தது. அதைக் கண்ட திருமால் மலரை நோக்கிச் சென்றார். அப்போது மலர் மறைந்து அங்கு ஒரு சுயம்புலிங்கம் எழுந்தது. அதிலிருந்து சிவபிரான் சதாசிவரூபம் கொண்டு எழுந்தருளி திருமாலின் திருமுடியில் கை வைத்துத் தீட்சையளித்துப் பஞ்சாட்சர மந்திரத்தை உபதேசித்து லிங்கத்தில் கலந்தார். அப்போது 'வேதமே நாம்' என்னும் ஒலி எழுந்தது. அந்தத் தத்துவத்தை உணர்ந்த திருமால் இறைவனுக்கு வேதநாயகன் என்று திருநாமம் சூட்டி, அந்த இடத்தில் ஓர் அற்புதமான கோயில் கட்டினார். கோயில் கட்டி குடமுழுக்கு முடிந்தவுடன் சிவலிங்கத்திலிருந்து வேதநாயகர் தேவியோடு தோன்றி ''கமலக் கண்ணா! நீர் நினைத்தபடி யாவும் நடக்கும். பிருகு முனிவரின் சாபம் கண்டு கலங்க வேண்டா. சாதுக்களைக் காப்பதற்கும் அசுரர்களை அழிப்பதற்கும் அறத்தை நிலைநாட்டுதற்கும் நீர் எடுக்கும் பிறவிகள் பயன்படும். இராவணனை அழிக்க நீர் இராமனாய் அவதரிப்பீர். அப்போது பிருகுவின் சாபப்படி உம் மனைவியைச் சில காலம் பிரிந்து அல்லலுறுவீர். இருந்தாலும் உலகைக் காப்பீர்'' என்று அருள் பாலித்தார். அருள் பெற்ற திருமால் மண்மகள், மலர்மகள் ஆகியோருடன் உலகம் உய்ய அருள் பாலித்து வருகிறார்.

## 2. சீராரும் திறல் அனுமனோடு ஒன்றாக உண்ணல்

இராமாவதாரத்தில் இராவணவதம் முடிந்த பின்னர் வீடணன் முதலிய அரக்கர்களோடும் அனுமன், சுக்கிரீவன் முதலிய வானரர்களோடும் சீதை, இலக்குவரோடும் புஷ்பகவிமானத்தில் ஏறி அயோத்திக்குப் புறப்பட்டான் இராமன்.

அப்போது கங்கையும் யமுனையும் சேருமிடமான பிரயாகையில் வசித்த பரத்துவாச முனிவர் இராமபிரானையும் அவனுடன் வந்த பரிவாரங்களையும் விருந்துண்ணுமாறு வேண்ட அவர்களும் இசைந்தார்கள். முனிவர் தம் தவப் பெருமையால் அனைவருக்கும் வேண்டிய உணவைப் பரிமாறினார். இராமபிரான் உண்ணத் தொடங்கிய போது காலதாமதம் ஏற்பட்டால் பரதன் தீக்குளித்து உயிர் துறந்து விடுவான் என்னும் நினைவு வர, அனுமனை விரைந்து அனுப்பினான். பரதனிடம் சென்ற அனுமன் செய்தி கூறி மீண்டு வந்தபோது அனுமனுக்காக முனிவர் தனியே ஓரிலையை வருவிக்க வேண்டியதில்லை என்று சொல்லி விட்டு தன் இலையின் ஒரு பகுதியில் எதிரிலேயே அமர்ந்து உண்ணுமாறு செய்தான் இராமன். இருவரும் ஒன்றாகச் சேர்ந்து உண்டனர். இச்செய்தியை

வாத மாமகன் மார்க்கடம் விலங்கு
மற்றோர் சாதியென் றொழிந்திலை உகந்து
காத லாதரம் கடலினும் பெருகச்செய்
தகவினுக்கு இல்லை கைம்மா றென்று
கோதில் வாய்மையி னாயொடும் உடனே
உண்பன் நானென்ற ஒண்பொருள் எனக்கும்
ஆதல் வேண்டுமென்று அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே

என்னும் பாடலில் குறிப்பிடுகிறார். முன்பெல்லாம் வாழை இலையில் இடைநரம்பு இல்லாமலிருந்தது என்றும் இராமபிரான் அனுமனைத் தனக்கெதிரில் உட்கார வைத்து தன்னுடைய இலையின் ஒரு பாதியிலேயே அவன் உண்ணுமாறு அவ்விலைநடுவில் தன் கையால் ஒரு வரை கீற, அதுமுதல் வாழையிலையில் இடை நரம்பு ஏற்பட்டது என்றும் கூறுவதுண்டு.

## 3. மாதவத்தோன் மைந்தனை மீட்டல்

அவந்தி நகரில் சாந்தீபினி என்னும் முனிவர் வாழ்ந்து வந்தார். அவரிடம் பலராமனும் கிருட்டிணனும் வேதம் கற்றுக் கொள்வதற்காகச் சென்று அறுபத்து நான்கு நாள்களுக்குள் எல்லாச் சாத்திரங்களையும் கற்றுக் கொண்டார்கள். குருதட்சிணை கொடுக்க விரும்பியபோது அம்முனிவர் கிருட்டிணனிடம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் தன்னுடைய மகன் கடலில் நீராடும்போது மூழ்கி இறந்து விட்டான் என்றும் அவனை மீண்டும் கொண்டு வந்து கொடுப்பதே தனக்கு குருதட்சிணையாகும் என்றும் கூற அப்படியே செய்வதாகக் கூறிச் சென்றான் கிருட்டிணன். கடற்கரையை அடைந்த அவனிடம் வருணன் வந்து சங்குருவில் கடலில் வாழும் பஞ்சஜநன் என்னும் அசுரனே சாந்தீபினி முனிவரின்

மகனைக் கொண்டு சென்றதாகக் கூற, கிருட்டிணன் கடலில் குதித்து அவ்வசுரனைக் கொன்று அவனுடைய உடலாகிய பாஞ்சசன்யத்தை எடுத்து வாயில் வைத்து முழங்கிக் கொண்டே எமலோகம் சென்று வருத்தும் நோயில் கிடந்த அக்குமாரனை நல்ல விதமாகக் கொண்டு வந்து முனிவரிடம் ஒப்படைத்தான்.

ஓது வாய்மையும் உவனியப் பிறப்பும்
உனக்கு முன்தந்த அந்தண னொருவன்
காத லென்மகன் புகலிடங் காணேன்
கண்டு நீதரு வாயெனக் கென்று
கோதில் வாய்மையி னானுனை வேண்டிய
குறை முடித்தவன் சிறுவனைக் கொடுத்தாய்
ஆதலால்வந்துன் அடியிணை அடைந்தேன்
அணிபொ ழில்திரு வரங்கத்தம் மானே

என்னும் பெரியதிருமொழிப் பாடலில் இக்கதை இடம் பெறுகிறது.

## 4. பௌண்ட்ரகனை அழித்தல்

துவாபர யுகத்தில் பௌண்ட்ரகன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவனுடைய தோழர்கள் "நீ தான் வாசுதேவன். உன் வீரத்துக்கு நிகரானவர்கள் யாரும் கிடையாது. உன் பெருமையே பெருமை" என்று அவனிடம் கூற, அதனால் ஆணவம்' கொண்ட அவனும் போலியான சங்கு, சக்கரம் கைகளில் கொண்டு 'தானே வாசுதேவன்' என்று பறை சாற்றிக் கொண்டான். ஒருநாள் தூதுவன் ஒருவனை அழைத்து கிருட்டிணனிடம் சென்று பௌண்ட்ரக மன்னனே வாசுதேவன் என்றும் சங்கு, சக்கரங்களை அவன் வைத்திருக்கக் கூடாது என்றும் பௌண்ட்ரகனுடன் போர் செய்து வென்றால் அவற்றைத் தரிக்கலாம் என்றும் கூறுமாறு சொல்லி அனுப்பினான். அத்தூதுவன் அங்குச் சென்று அவ்வாறு கூறியது கேட்ட கிருட்டிணன் சினங்கொண்டு பெரிய திருவடி மீதேறிச்சென்று போரிட்டு பௌண்ட்ரகனின் தலையைச் சக்கரப்படையால் அறுத்துக் கொன்றொழித்தான். இதை,

புகராருரு வாகிமு னிந்தவனைப்
புகழ்வீட முனிந்துயி ருண்டுஅசுரன்
நகராயின பாழ்பட நாமமெறிந்
ததுவன்றியும் வென்றிகொள் வாளவுணன்
பகராதவ னாயிர நாமமடிப்
பணியாதவ னைப்பணி யாலமரில்
நிகராயவன் நெஞ்சிடந் தானவனுக்
கிடம்மாமலை யாவது நீர்மலையே

என்பதாகச் சுட்டுகிறார் ஆழ்வார்.

## 5. வைதிகன் பிள்ளைகளைத் திரும்பப் பெற்றமை

வேதம் ஓதும் அந்தணன் ஒருவனுக்கு மூனறு குழந்தைகள் ஒவ்வோராண்டும் தொடர்ச்சியாக பிறந்தவுடன் மறைந்து விட்டன. அவன் மனைவி நான்காவது பிள்ளையைப் பிரசவிக்கவிருந்தபோது அவ்வந்தணன் கிருட்டிணனிடம் சென்று பிறக்கப்போகும் குழந்தையைப் பாதுகாக்க வேண்டும் என்று வேண்டினான். கிருட்டிணனும் வாக்குறுதி கொடுத்தான். ஆனால் நேரம் வந்தபோது கிருட்டிணன் யாகம் ஒன்றுக்குத் தீட்சிதனாயிருந்தபடியால் அருச்சுனன் தானே அவன் சார்பாக குழந்தையைக் காப்பாற்றி வருவதாகக் கூறி அந்தணன் வீடு சென்றான். அவ்வீட்டைச் சுற்றிக் காற்றுக் கூட நுழைய முடியாதபடி அவன் சரக்கூடம் கட்டி காவல் செய்தும் குழந்தை மாயமாய் மறைந்து விட்டது. கிருட்டிணன் வந்து காக்கவிருந்ததை அருச்சுனன் தடுத்ததால் அந்தணன் அவன் மீது கோபம் கொண்டான். இருவரும் கிருட்டிணனிடம் சென்று நடந்தவற்றைக் கூறினார்கள். அவனும் அந்தணனிடம் கவலைப்படாமல் இருக்குமாறு கூறி இருவரையும் அழைத்துக் கொண்டு தேரிலேறி, அருச்சுனனிடம் அதைச் செலுத்துமாறு கூறி, தேரிலிருக்கும் அவ்விருவருக்கும் திவ்ய சக்தியைக் கற்பித்து அண்டத்துக்கு வெளியே நீண்ட தூரம் சென்று தான் மட்டும் பரமபதத்தில் புகுந்தான். அங்கு தேவர்குலப் பெண்கள் அக்குழந்தைகள் நால்வரையும் தொட்டிலிட்டுத் தாலாட்டிக் கொண்டிருந்தார்கள். கிருட்டிணனின் வடிவழகில் மயங்கிய அவர்கள் அந்நான்கு குழந்தைகளையும் உருக்குலையாமல் கொண்டு வந்து கொடுக்க, அவனும் பரமபதத்தினின்றும் புறப்பட்டுச் சென்று குழந்தைகளை அந்தணனிடம் ஒப்படைத்தான். இது

வேத வாய்மொழி அந்தண னொருவன்
எந்தை ! நின்சரண என்னுடை மனைவி
காதல் மக்களைப் பயத்தலும் காணாள்
கடியதோர் தெய்வம் கொண்டொளிக்கு மென்றழைப்ப
ஏதலால் முன்னே இன்னருள் அவற்குச் செய்து
உன்மக்கள் மற்றறிவ ரென்று கொடுத்தாய்
ஆதலால் வந்து உன்னடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங் கத்தம் மானே !

என்னும் பாடலில் இடம் பெறக் காணலாம்.

# துணை நூற் பட்டியல்

## தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள்


1. இலக்கண விளக்கப் பாட்டியல்
2. ஐங்குறுநூறு
3. கம்பராமாயணம்
4. கலித்தொகை
5. காவடிச் சிந்து
6. குறுந்தொகை
7. சிலப்பதிகாரம்
8. சீவக சிந்தாமணி
9. சுந்தரர் தேவாரம்
10. தாயுமானசுவாமிகள் பாடல்கள்
11. திருக்குற்றாலக் குறவஞ்சி
12. திருக்குறள்
13. திருஞான சம்பந்தர் தேவாரம்
14. திருநாவுக்கரசர் தேவாரம்
15. திருமந்திரம்
16. திருவாசகம்
17. தொல்காப்பியம்
18. தேம்பாவணி
19. நம்பியகப்பொருள்
20. நற்றிணை
21. நாலடியார்
22. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
23. பட்டினத்துப் பிள்ளையார் பாடல்கள்
24. பாரதியார் கவிதைகள்
25. புறநானூறு
26. மாறனலங்காரம்
27. முக்கூடற்பள்ளு
28. முத்துவீரியம்
29. முத்தொள்ளாயிரம்


## திறனாய்வு, வரலாற்று நூல்கள்


1. அருணாசலக் கவுண்டர். கு, ***தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்,*** சமுதாயப் பிரசுராலயம், கோவை ,1982.
2. அருணாசலம். ப, ***பக்தி இலக்கியம்,*** பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1982.
3. ஆரோக்கியசாமி. மு. ***தமிழ்நாட்டு வரலாறு,*** கழக வெளியீடு, சென்னை, 1958
4. இராகவையங்கார் மு, ***ஆழ்வார்கள் காலநிலை,*** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1951.
5. இராசமாணிக்கனார். மா, ***பல்லவர் வரலாறு,*** சேக்கிழார் அகம், சென்னை, 1944.
6. இராமஸ்வாமி ராமாநுஜதாஸர். ஆர், ***நாராயணனே பரம்பொருள்,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை, 1983.
7. இராமஸ்வாமி ராமாநுஜதாஸர். ஆர், ***ஸ்ரீ வைஷ்ணவம் ,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை, 1984.

8. எதிராஜ ராமாநுஜதாசர் (தொ. ஆ) ***குருபரம்பரை வைபவம்,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை, 1987.

9. கோதண்டராமன். ப, ***இலக்கியமும் திறனாய்வும்,*** மணிவாசகர் நூலகம் சிதம்பரம். 1978.

10. கோவிந்தராச முதலியார் கா.ர, ***ஆழ்வார்கள் வரலாறு,*** கழக வெளியீடு, சென்னை, 1958.

11. சதாசிவ பண்டாரத்தார். டி. வி., ***பாண்டியர் வரலாறு,*** கழக வெளியீடு, சென்னை, 1972.

12. சிங்காரவேலன்.சொ, திருஞானசம்பந்தர் ***வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்,*** கழக வெளியீடு, சென்னை, 1969

13. சிங்கார வேலனார், திருமருகல், ***இந்துமத தத்துவங்கள்*** , அருணோதயம், சென்னை, 1983.

14. சித்பவானந்த சுவாமி, ***கண்ணன் என்னும் கடவுள்,*** ஸ்ரீ இராம கிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, 1958.

15. சிவலிங்கனார். ஆ, ***தொல்காப்பியர் கூறும் உள்ளுறையும் இறைச்சியும்.*** உலகத் தமிழ் இயக்கம், சென்னை, 1985.

16. சீனிவாசன் அரங்க, ***வைணவ தத்துவ ஞான அடிப்படைகள்,*** பாரி நிலையம், சென்னை, 1984.

17. சீனிவாசன் ம. பெ., ***திருமங்கையாழ்வார் மடல்கள்,*** அன்னம் பதிப்பகம், சிவகங்கை, 1987.

18. சுப்பிரமணிய பிள்ளை. கா, ***இலக்கிய வரலாறு,*** கழக வெளியீடு, சென்னை, 1961.

19. சுப்புரெட்டியார். ந, ***கவிதை அனுபவம்*** , கழக வெளியீடு, சென்னை, 1961.

20. சுப்புரெட்டியார். ***ந, மலைநாட்டுத் திருப்பதிகள்,*** கழக வெளியீடு, சென்னை, 1971.

21. சுப்புரெட்டியார். ந, ***திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்,*** பாரி நிலையம், சென்னை. 1975.

22. சுப்புரெட்டியார். ந, ***முத்திநெறி,*** வாசுதேவன் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1983.

23. சுப்புரெட்டியார். ந, ***சிலநோக்கில் நாலாயிரம்,*** வாசுதேவன் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1983.

24. சுப்புரெட்டியார். ந, ***ஆழ்வார்கள் ஆரா அமுது***, வேங்கடம் பதிப்பகம், சென்னை, 1987.

25. செயராமன். பூ, ***ஆழ்வார்கள் கதைகள்,*** அநுராக வெளியீடு, சென்னை 1982.
26. சேதுப்பிள்ளை. இரா. பி., ***தமிழகம் ஊரும் பேரும்,*** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1968.
27. ஞானசுந்தரம். தெ, ***பெரியதிருமொழி உரையும் தமிழாக்கமும்,*** தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.
28. தாமோதரன். கு, ***ஆழ்வார் திருவுள்ளம்,*** பூங்கொடி பதிப்பகம், சென்னை 1978.
29. நரசிம்மன். பி. ஆர்., ***வைணவ மரபும் மெய்ப்பொருளியலும்,*** விஷ்ணு பதிப்பகம், சென்னை, 1985.
30. நாராயண வேலுப்பிள்ளை. எம், ***திருவாசகமும் திருவாய்மொழியும்,*** சரசு பதிப்பகம், சென்னை, 1985.
31. நாராயண வேலுப்பிள்ளை, ***வைச வைணவக் கதைகள்,*** பாரதிபதிப்பகம், சென்னை , 1986.
32. நீலகண்ட சாஸ்திரி. க. அ., ***தமிழ்ப்பண்பாடும் வரலாறும்.*** வாசகர் வட்டப் பிரசுரம். சென்னை, 1965.
33. பரமசிவம். சொ, ***சேக்கிழாரின் இலக்கியத்திறன்,*** பட்டுப்பதிப்பகம். சென்னை, 1987.
34. பாலச்சந்திரன். சு, ***இலக்கியத்திறனாய்வு,*** அணியகம், சென்னை, 1981.
35. பாலசுப்பிரமணியம். சி, ***ஆண்டாள்,*** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1984.
36. பிள்ளை. கே. கே., ***தென்னிந்திய வரலாறு,*** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை 1976.
37. பி. ஸ்ரீ., ***காதலால் கதிபெற்றவர்,*** கலைமகள் காரியாலயம், சென்னை, 1958.
38. புருஷோத்தம நாயுடு, பி. ஆர், ***ஆசாரிய ஹ்ருதய மூலம்,*** சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1965.
39. பொன்னுசாமிப் பிள்ளை, வ, ***தமிழக வரலாறு,*** கழக வெளியீடு, சென்னை, 1972.
40. மறைமலையடிகள், ***மாணிக்க வாசகர் வரலாறுங் காலமும்,*** சென்னை, 1957.
41. மாருதிதாசன், ***திருமாலின் அவதாரங்கள்,*** நர்மதா பதிப்பகம், சென்னை 1982.
42. முத்துராசன், கு, இலக்கிய வடிவங்கள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1984.
43. ராமஸ்வாமி அய்யங்கார். என், ***அருளிச் செயலில் அற்புதக் கதைகள்,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை 1986.
44. ராமநாதன், அரு, ***பன்னிரு ஆழ்வார்கள் கதைகள்,*** பிரேமா பிரசுரம், சென்னை, 1987.

45. ஸ்ரீ ராமுலுதேசிகன், எ, ***கோதையும் கோவிந்தனும்,*** ராம்குமார் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1981.

46. ஸ்ரீ லக்ஷ்மி நாராயணதாசன், ***ஆழ்வார்கள் அமுதம்,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை, 1981.

47. ஸ்ரீ லக்ஷ்மி நாராயணதாசன், ***திருவேங்கடமுடையானும் ஆழ்வார்களும்,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை, 1981.

48. ஸ்ரீ லக்ஷ்மி நாராயணராமாநுஜதாஸன், ***நாராயணனைப் பாடிய நம் ஆழ்வார்கள்,*** ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை, 1979.

49. வரதராசன். மு, ***பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,*** பாரி நிலையம், சென்னை, 1955.

50. வரதராசன். மு, ***இலக்கியத்திறன்***, பாரி நிலையம், சென்னை, 1962.

51. வெங்கடாசாரிய சுவாமிகள், ***சைவமும் வைணவமும்,*** இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை, 1976.

## ஆங்கில நூல்கள்

1. Anna, ***Saints of India,*** Sri Ramakrishna Math, Madras, 1981.

2. Arunachalam. M. ***Cultural Heritage of Hinduism,*** Kasi math, Tiruppanandal, 1982.

3. Chidbhavananda Swami, ***Ramayana,*** Sri Ramakrshna Tapavanam, Tirupparaithurai, 1982.

4. Gopalakrishna Naidu, G. T., ***Lord Venkateswara and Alwars,*** Tirumala Tirupati Devasthanams, Tirupati, 1979.

5. Hooper, J. S., M. ***Hymns of the Alwars,*** Association Press, Calcutta, 1929.

6. Jagadeesan, N, ***History of Sri Vaishnavism in the Tamil country,*** Koodal Publication, Madurai, 1977.

7. Vaiyapuri Pillai, S., ***History of Tamil Language and Literature,*** New Century Book House, Madras, 1956.

8. William Henry Hudson, ***An Introduction to the Study of Literature,*** Kalyani Publication, New Delhi, 1963.

## அகராதிகள்


1. கதிரைவேற்பிள்ளை. நா, ***தமிழ்ச் சொல்லகராதி,*** ஏசியன் எசுகேஷனல் சர்வீசஸ், புதுதில்லி, 1984.
2. பார்த்தசாரதி அய்யங்கார், ***திவ்யப் பிரபந்த அகராதி,*** தேவஸ்தான வெளியீடு, ஸ்ரீ ரங்கம், 1963.
3. ***தமிழ்ச் சொல்லகராதி-3,*** தமிழ்ச் சங்கம், மதுரை, 1923.
4. ***தமிழ் லெக்சிகன்-6,*** சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1965.
5. ***மதுரைத் தமிழ்ப் பேரகராதி-2,*** தமிழ்ச்சங்கம், மதுரை, 1956.
6. ***வின்சுலோ தமிழ் ஆங்கில அகராதி,*** ஏசியன் எசுகேஷனல் சர்வீசஸ், புதுதில்லி, 1984.
7. Sambamoorthy, P., ***A Dictionary of South Indian Music and Musicians,*** Vol-I, The Indian Music Publishing House, Madras, 1952.


## இதழ்கள்


1. ***சப்தகிரி,*** திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.
2. ***சமயபோதம்,*** தருமபுர ஆதீனம், தருமபுரம், அக்டோபர் 1954.
3. ***செந்தமிழ்ச் செல்வி,*** நாற்பத்திரண்டாம் சிலம்பு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968.
4. ***ஞானபூமி,*** இதயம் பப்ளிகேஷன்ஸ், சென்னை.
5. ***தர்மசக்கரம்,*** ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, செப்டம்பர் 1969.
6. ***திராவிட சமயம்,*** சமய ஒப்பியல் ஆய்விதழ், ஆகஸ்டு 1985.
7. ***தினமணி,*** நாளிதழ் 14-4-87, மதுரை.
8. ***ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா,*** மாத இதழ், விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ சபை வெளியீடு, சென்னை.
9. ***ஸ்ரீ ரங்கநாத சுவாமி திருக்கோயில் மலர்,*** தேவஸ்தான வெளியீடு, ஸ்ரீ ரங்கம், 1987.


***


ஆப்செட் முறையில் அச்சிட்டோர்

நந்தி அச்சகம்,

56 பாரதி பூங்கா சாலை, அவினாசிலிங்கம் கல்லூரி எதிரில்,

கோவை - 43. தொலைபேசி 441395, 444677

குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்